உ

சிவமயம்.

# ஹரி மீடே

# ஹரி தத்வ முக்தாவலி.



திருப் பூவணம்

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்

 விலை அணா பன்னிரண்டு.

---

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

# श्री शंकराचार्य विरचितः ।

# हरिमीडे ।

# स्वयंप्रकाश यति विरचितः

# हरि तत्त्व मुक्तावली ।

# ततः व्याख्या च ।

ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் இயற்றிய

# ஹரி மீடே

---

ஸ்ரீ ஸ்வயம்பிரகாச யதிகள் இயற்றிய

# ஹரி தத்வ முக்தாவலி.

---

இவை

திருப் பூவண மடாதிபதி

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகளவர்களால்
பதம், பதப் பொருளுடன் தமிழில்
மொழி பெயர்க்கப்பட்டு

மதுரை
ராஜேஸ்வரி பிரஸில் பதிப்பிக்கப்பட்டன.
**1935.**

---






உ

சிவமயம்.

## உபோத்காதம்.

கலியுகத்தில் நாஸ்திக மதமும் நாஸ்திகர்களும் அதிகரித்து, ஆஸ்திக மதத்திலும், மதத் துவேஷங்களும், மூர்த்திகளில் உயர்வு தாழ்வுகளும் அதிகரித்து வரும் காலத்தில், பரமாத்மா, கலியுக வருஷம் ஆரம்பித்து இரண்டாயிரத்திற்குப் பின் பூமியில் அவதரித்து, நாஸ்திகத்தினைக் களைந்து, ஆஸ்திகர்களிடத்திலும், மதத் துவேஷம், மூர்த்தித் துவேஷங்களையும் போக்குவார் என்றும், அவர் பெயர் சங்கரர் என்றும், சிவ ரஹஸ்யம் நவம அம்சம் பதினாறுவது அத்தியாயம் 61 சுலோகங்களாலும், கூர்ம புராணம் பூர்வ கண்டம் முப்பதாவது அத்தியாயம் 33—34—35—36 நான்கு சுலோகங்களாலும், வாயு புராணம் முப்பத்திரண்டாவது அத்தியாயம் 24—25 இரண்டு சுலோகங்களாலும், லிங்க புராணம் நாற்பதாவது அத்தியாயம் 20-21-$21\frac{1}{2}$ இரண்டரைச் சுலோகங்களாலும், சிவ புராணம் ஒரு சுலோகத்தினாலும், சிவ புராணம் காளிசா காண்டம் லகுடீசுவர மாஹாத்மியத்தில் நாரதரைக் குறித்துச் சநத்குமாரர் கூறல் என ஆரம்பித்து மூன்றரைச் சுலோகங்களாலும், பவிஷ்யோத்தர புராணத்தில், ஒரு சுலோகத்தினாலும், மார்க்கண்டேய சம்ஹிதையில், ஒரு சுலோகத்தினாலும், மற்றைய புராணங்களில் மூன்றரைச் சுலோகங்களாலும் புகழப்பட்டிருக்கின்றன.

இவ்வாறு பதினெண் புராணங்களாலும் ஈசுவராவதாரம் என்று புகழப் பெற்ற சங்கர பூஜ்ய பகவத் பாதாசார்ய ஸ்வாமிகள் கலி இரண்டாயிரத்திற்குப் பின் மலையாளத்தில் காலடிக்கிராமத்தில் சிவ குரு—ஆர்யாம்பை இருவருக்கும் புதல்வராக அவதரித்து, 32 வருஷம் பூலோகத்தில் இருந்து அத்வைத மதத்தினை ஸ்தாபநஞ் செய்தனர். அந்தக் காலத்தில், ஈசாவாஸ்யோபநிஷத், 2. கேநோபநிஷத், 3. கடோபநிஷத், 4. பிரசினோபநிஷத், 5. முண்டகோபநிஷத், 6. மாண்டூக்யோபநிஷத், 7. ஐதரேயோபநிஷத், 8. தைத்

திரீயோபநிஷத், 9. சாந்தோக்யோபநிஷத், 10. பிரஹதாரண்யகோபநிஷத், 11. நரசிஹ்ம பூர்வ தாபநீயோபநிஷத், என்பவற்றிற்கும், 12. பிரஹ்ம சூத்ரம், 13. பகவத் கீதை, 14. விஷ்ணு சஹஸ்ரநாமம், 15. சநத் சுஜாதீயம், 16. அஸ்தாமலக 12 சுலோகம், 17. லலிதா திரிசதீ, என்பவற்றிற்கும் அழகான பாஷ்யமும் செய்து, 1. விவேக சூடாமணி (சு. 581) 2. உபதேச சஹஸ்ரீ (வசநமும் சு. 671.), 3. அபரோக்ஷாநுபூதி (சு. 144.), 4. வாக்ய விருத்தி (சு. 53.), 5. ஸ்வாத்ம நிருபணம் (சு 154), 6 ஆத்ம போதம் (சு 68), 7. சத சுலோகீ (சு 101), 8. தச சுலோகீ (ஙிர்வாண சதகம், (சு 10), 9. சர்வ வேதாந்த சித்தாந்த சார சங்கிரகம் (சு 1006), 10. பிரபோத சுதாகரம் (சு 257), 11. ஸ்வாத்மப் பிரகாசிகை (சு 68), 12. மநீஷா பஞ்சகம் (சு 5), 13. அத்வைத பஞ்சரத்நம். (ஆத்ம பஞ்சகம்) (சு 5), 14. நிர்வாண ஷட்கம் (சு 6), 15. அத்வைதாநுபூதி (சு 84), 16. பிரஹ்மாநுசிந்தநம் (மஹா வாக்ய சித்தாந்த ஸ்தோத்ரம்) (சு 29), 17. பிரச்நோத்ர ரத்ந மாலிகா (சு 67), 18. சதாநுசாராநுசந்தாநம் (சு 55), 19. யோக தாராவலீ (சு 29), 20. உபதேச பஞ்சகம் (சாதந பஞ்சகம்—சோபாந பஞ்சகம் (சு 5), 21. தந்யாஷ்டகம் (சு 8), 22. ஜீவந் முக்தாநந்த லஹரீ (சு 17), 23. அநாத்ம ஸ்ரீ விகர்ஹண பிரகரணம் (சு 18), 24. ஸ்வரூபாநுசந்தாநாஷ்டகம் (விக்ஞாந நௌகா) (சு 9), 25. யதி பஞ்சகம் (கௌபீந பஞ்சகம்) (சு 5), 26. பஞ்சீகரணம் (வசநம்), 27 தத்வோபதேசம் (சு 87), 28. ஏக சுலோகீ (சு 1), 29. மாயா பஞ்சகம் (சு 5), 30. பிரௌடாநுபூதி (சு 17) 31. பிரஹ்ம ஞாநாவலீ மாலா (சு 21), 32. லகு வாக்ய விருத்தி (சு 18), 33. நிர்வாண மஞ்சரீ (சு 12), 34. கணேச பஞ்ச ரத்நம் (சு 6), 35. கணேச புஜங்கம் (சு 9), 36. சுப்ரமண்ய புஜங்கம் (சு 33), 37. சிவ புஜங்கம் (சு 40), 38. சிவாநந்த லஹரி (சு 100), 39. சிவ பாதாதி கேசாந்த வர்ணந ஸ்தோத்ரம் (சு 41), 40. சிவ கேசாதி பாதாந்த வர்ணந ஸ்தோத்ரம் (சு 29), 41. வேத



சார சிவ ஸ்தோத்ரம் (சு 11), 42. சிவாபராத க்ஷமாபண ஸ்தோத்ரம் (சு 15), 43. சுவர்ண மாலா ஸ்துதி (சு 50), 44. தச சுலோகீ ஸ்துதி (சு 10), 45. தக்ஷிணாமூர்த்தி வர்ணமாலா ஸ்தோத்ரம் (சு 25), 46. தக்ஷிணாமூர்த்தியஷ்டகம் (சு 10), 47. மிருத்யுஞ்ஜய மாநசிக பூஜா ஸ்தோதித்ரம் (சு 46), 48. சிவ நாமாவலீ அஷ்டகம் (சு 9), 49. சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்ரம் (சு 5), 50. உமா மஹேசுவர ஸ்தோத்ரம் (சு 13), 51. சௌந்தர்ய லஹரீ (சு 100), 52. தேவீ புஜங்க ஸ்தோத்ரம் (சு 28), 53. ஆநந்த லஹரி (சு 20). 54. திரிபுர சுந்தரி வேத பாத ஸ்தோத்திரம் (சு 110). 55. திரிபுர சுந்தரி மாநஸ பூஜா ஸ்தோத்ரம் (127), 56. தேவீ சது: ஷஷ்டி உபசார பூஜா ஸ்தோத்ரம் (சு 72), 57. திரிபுர சுந்தரி அஷ்டகம் (சு 8), 58. லலிதா பஞ்ச ரத்நம். (சு. 6.) 59. கல்யாண விருஷ்டி ஸ்தவம் (சு. 16) 60. நவரத்ந மாலிகா. (சு. 10.) 61. மந்த்ர மாத்ருகா புஷ்ப மாலா ஸ்தவம். (சு. 17.), 62. கௌரீ சதகம் (சு. 11.), 63. பவாநீ புஜங்கம், (சு. 17.) 64 அநுமந் பஞ்ச ரத்நம். (சு. 6.) 65. ஸ்ரீராம புஜங்க பிரயாத ஸ்தோத்ரம், (சு. 29.), 66. லக்ஷ்மீ நிருசிஹ்ம பஞ்சரத்நம், (சு. 5.), 67. லக்ஷ்மீ நிருசிஹ்ம கருணாரச ஸ்தோத்ரம், (சு. 17.), 68. விஷ்ணு புஜங்க பிரயாத ஸ்தோத்ரம், (சு. 14) 69. விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம், (சு. 52.), 70. பாண்டு ரங்க அஷ்டகம், (சு. 9.), 71. அச்யுத அஷ்டகம், (சு. 9.), 72. கிருஷ்ண அஷ்டகம். (சு. 8.), 73. ஹரி ஸ்துதி. (ஹரிமீடே) [சு. 43.], 74. கோவிந்த அஷ்டகம். (சு. 9.), 75. பகவந் மாநஸ பூஜா. [சு. 10.], 76. மோஹ முத்கர: [சர்ப்பட—துவாதச—பஞ்சரிகா—ஸ்தோத்ரம்.], [சு. 31.] 77. கநக தாரா ஸ்தோத்ரம். [சு. 18.], 78. அந்ந பூர்ண அஷ்டகம். [சு. 12.], 79. மீநாக்ஷி பஞ்ச ரத்நம். [சு 5.], 80. மீநாக்ஷி ஸ்தோத்ரம் (சு. 8.), 81. தக்ஷிணா மூர்த்தி ஸ்தோத்ரம். [சு. 19.], 82. கால பைரவ அஷ்டகம். [சு. 9 ]. 83. நர்மதா அஷ்

டகம். [சு. 9.], 84. யமுனா அஷ்டகம். (சு. 8.), 85. யமுனா
அஷ்டகம். [சு. 9.], 86. கங்கா அஷ்டகம். [சு. 9.], 87. மணி
கர்ணிகா அஷ்டகம். (சு. 9), 88. நிர்க்குண மாநஸ பூஜா. (பரா
—பஜா—ஆத்ம பூஜா.) (சு. 33.), 89. பிராத ஸ்மரண
ஸ்தோத்ரம் (சு. 4.), 9). ஜகந்நாத அஷ்டகம். (சு. 8.), 91.
ஷட்பதீ ஸ்தோத்ரம். (சு. 7.) 92. பிரமர அம்பா அஷ்டகம்.
[சு. 9.], 93. சிவ பஞ்சாக்ஷர நக்ஷத்ர மாலா ஸ்தோத்ரம். (சு.
28), 94. துவாதச லிங்க ஸ்தோத்ரம். [சு. 13], 95. அர்த்த
நாரீசுவர ஸ்தோத்ரம். (சு. 9.), 96. சாரதா புஜங்கப் பிரயாத
அஷ்டகம். [சு. 8.], 97. குரு அஷ்டகம். [சு. 9], 98. காசீ
பஞ்சகம். (சு. 5.), 99. பிரபஞ்ச சாரம். (33 படலம்) (சு.
24)2.), என்னும் பெயரினை உடையதும், எழாயிரத்து நானூற்றி
ரண்டு சுலோகங்களை உடையதும் ஆன தொண்ணூற்றொன்பது
கிரந்தங்களை உலகர் உஜ்ஜீவிக்கும் பொருட்டு இயற்றித் தான் அவ
தரித்துப் பூமியில் இருந்து உலாவிய முப்பத் திரண்டு வருஷத்திற்
குள் எண் இறந்த அற்புதத் திருவிளையாடலைச் செய்தார்கள்.
இன்னும் அளவிறந்த நூல்கள் இயற்றி யிருப்பதாகவும் தெரிகிறது.
1. சுவேதாசுவதர உபநிஷத் பாஷ்யம். 2. ஆபத் ஸ்தம்பீய அத்
யாத்ம படலம் சூத்ரம். 14. விவரண வியாக்யாநம். 3. ஆத்மா
நாத்ம விவேசநம் வசநம். 4. பால போதிநீ வசநம். 5. அக்ஷர
மாலிகா ஸ்தோத்ரம் சுலோகம். 6. தத்வ போதம் வசநம் என்
பன வாதிய நூல்களும் சங்கர பூஜ்ய பகவத் பாதாசார்ய ஸ்வாமி
கள் இயற்றியதாக விளங்குகின்றது. அவர்கள் செய்த நூல்கள்
மூவாயிர வருஷங்களாயினமையின் சில மறைந்தும் இருக்கலாம்.
அவர்கள் சிஷ்யர்களில் பெரும்பாலோர் தம் பெயரின் ஈற்றில்
சங்கராசார்யர் என்ற சொல்லை உலகத்தவர் வழங்கி வந்தபடி
யால் அது காரணமாகச் சிஷ்யர்கள் இயற்றிய நூற்கட்கும் சங்கரா
சார்யர் இயற்றியது என்று வழங்கலும் அச்சிடலும் ஏற்பட்டி
ருக்கும் என்று ஊகித்தற்கும் இட முண்டு.



இவ்வாறு கைலாய பதியே பூவலகில் காலடிக் கிராமத்தில்
அவதரித்துச் செய்த நூல்களுள் ஹரிமீடே (ஹரி ஸ்துதி) என்
பதும் ஒன்றாகும். இதற்கு ஸ்வயம்பிரகாச யதி என்பவர்கள்
ஹரி தத்வ முக்தாவலீ என்னும் பெயருடன் ஒரு அழகான வியாக்
யாநம் 1. ரிக் வேதம், 2. கேந, 3. கட 4. முண்டக, 5. மாண்
டூக்ய 6. ஐதரேய, 7. தைத்திரீய, 8. சாந்தோக்ய, 9 பிரஹதா
ரண்ய, 10. சுவேதாசுவதர, 11. நாராயண, 12. நரசிம்ம தாப
நீய, 13. கைவல்ய, 14. பிரஹ்ம பிந்து, 15. கௌஷீதகீ
பிராஹ்மண உபநிஷத், 16. பிரஹ்ம சூத்ரம், 17. ஜைமினீ சூத்
ரம், 18 யோக சூத்ரம், 19. பகவத் கீதை, 2). பாண்டவ கீதை,
21. பிரஹ்ம கீதை, 22. வாசிஷ்டம், 23. பஞ்ச தசி, என்னும்
நூற்களின் பிரஹ்மாணங்களோடு செய்திருக்கின்றனர், 43. சுலோ
கங்கள் தான் உடையது அதற்கு வியாக்யாநம் விரிவாக ஆக்ஷேப
சமாதாநத்தோடு செய்திருக்கின்றார்கள். வியாக்யாநத்தின் அருமை
அதனைப் படிப்பவருக்கே தெளிவாக விளங்கும்.

ஸ்வயம் பிரகாச யதி என்பவர்கள் சங்கர பூஜ்ய பகவத் பாதா
சார்ய ஸ்வாமிகள் இயற்றிய தக்ஷிண மூர்த்தி ஸ்தோத்ரம் என்
னும் 10 சுலோகத்திற்கும் லகு தத்வ சுதா என்னும் பெயருடன்
ஒரு வியாக்யாநமும் செய்திருக்கின்றார்கள். அதுவும் விசார ரூப
மான அரிய சிறிய வியாக்யாநமாகும். இவர்களது பிறப்பிடம்
காலம் முதலியனவும் இன்னும் வேறு கிரந்தங்களாவது, அல்லது
வியாக்யாநங்களாவது செய்திருக்கின்றார்களா? இல்லையா என்
பது நன்கு புலப்பட வில்லை. வேதாந்த விஷய நிஷ்ணாதர் என்
பது அவரது கிரந்தங்க ளிரண்டினாலும் நன்கு புலப்படுகின்றது.
இதன் அருமை பெருமைகளை நோக்கி நாம் ஹரி மீடே மூலம்
நாகர அக்ஷரத்திலும், பதமும், பதப் பொருளும் எழுதி, வியாக்
யாநத்தினை உள்ளவாறே தமிழில் மொழி பெயர்த்துப் படிப்பவ
ருக் குபயோகமாகுமாறு அச்சியற்றினோம். யாம் இதனை இருபது
வருஷத்திற்கு முன்னமே மொழி பெயர்த்தும், பல இடையூறு

களாலும், கால வேற்றுமையாலும் இதுகாறும் அச்சிட்டு முடிவு பெற முடியாதிருந்தது. திருக்களர் வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகளின் கிருபையினால் இப்பொழுது தான் அச்சிட்டு முற்றுப் பெற்றது.

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,
திருப் பூவண மடாதிபதி
1935 வருஷம் ஜனவரி மாதம்

அருமையா மூலககுரு சங்கரநல் லாசா
    னமைத்தவரி மீடேயாங் துதியை நன்கு
பெரியசுயம் பிரகாச யதிவரர்தான் செய்த
    பெறுவரிதத் துவமுக்தா வலியைச் சேர்த்தே
தெரிவரிய களரிவளர் வீரசே கரஞாந
    தேசிகன தரவிந்த வடிமநதில் வைத்தே
உரியதமிழ் மொழிவசந வடிவாய்ச் செய்தா
    னும்பர்தொழ காசிகா நந்தனெனுந் துறவோன்.



உ சிவமயம்
சற் குருப்யோ நம:

# ॥ हरि मीडे ॥

# ॥ हरि तत्व मुक्तावली ॥

नित्यं निजानन्दसदद्वितीयं शुद्धं विभुं सत्यमतिस्वतन्त्रं
सूक्ष्मं निरस्ताखिलदृश्यमीशं प्रत्यंचमात्मानमहं भजामि
शंकरं शंकराचार्यं केशवं बादरायणम् ।
सूत्रभाष्यकृतौ वन्दे भगवंतौ पुनः पुनः ॥ २ ॥

---

ஹரி மீடே மூலமும்
ஹரி தத்வ முக்தாவலீ உரையும்.

நித்தியமாய் விபுவாகிச் சுத்த மாகி
    நிசாநந்த சதத்விதீய ரூப மாகிச்
சத்தியமா யதிசுதந்த்ர சூக்ஷ்ம மாகிச்
    சகலதிரி சியமின்றிய வீச னாகும்
புத்தியினில் விளங்குபிரத் தியக்காந் மாவைப்
    பூரணமாய் மநவாக்குக் காயந் தன்னாற்
சித்தினிடை யெப்போது மிருப்ப தற்குச்
    சிறப்புடன்யான் பஜனைதனைச் செய்கின் றேனே.

சூத்திரஞ் செய்த கேசவ ரூபச்
சொல்லும்வா தராயண முநியைச்
சாத்திர மதற்குப் பாஷியஞ் சமைத்த
சங்கர வுருவமே வந்து
பாத்திர மான சங்கரா சார்ய
பகவனைப் பன்முறை யான்றன்
றோத்திரஞ் செய்து மநமொழி மெய்யாற்
றொழுதல்செய் திடரொழித் திடுவாம்.

சத்திய ஞாநாநந்தாத்மகமாய அத்விதீய பிரஹ்மமே, சுத்த சத்துவப் பிரதாந மாயா உபாதியைக் கோண்டு, ஈசுவர பாவத்தையும், மலிந சத்துவப் பிரதாந அவித்யா உபாதியைக் கோண்டு ஜீவ பாவத்தையும் அடைந்தது; "ஜீவேசரை ஆபாசமாகச் செய்கின்றது மாயையும், அவித்தையும் ஸ்வயமே ஆகின்றது" என்று தாபநீயத் திற் கேட்கப்படுதலின். அவற்றுள், மாயாப் பிரதிபிம்ப ஈசுவரன் அம் மாயையை வசஞ் செய்து சர்வக்ஞனுய்ச் சர்வ சக்தி யுடையவனுய்ச் சர்வ ஜீவர்கட்கும் அப்யுதய அபவர்க்கத்தின் போருட்டுச் சங்கல்ப மாத்திரையானே லீலையால் ஜகத்தின் சிருஷ்டி ஸ்திதி பிரளயங்களை ஆச ரிக்கின்றன். அவற்றுள், எச் சீவர்கள் தமது ஆஞ்ஞா நுப சுருதி ஸ்மிருதி புகன்ற மார்க்கங்களை அநதிக்கிரமித் தலால் தம தாத்மாவைப் பஜனை செய்கின்றனரோ, அவர்களின் அநுக்கிரகத்தின் போருட்டு, உபாசனை செய்வதற்குச் சங்கு சக்கரம் கதை சூலம் மிருகம் பரசு தரித்ததாய், நீலோத்பல கால மேக பூர்ணச் சந்திர ஸ்படிக சமாந வர்ண முடையதாய், ஆநந்த கநமாய், சர்வாங்க சுந்தரமாய், சுத்த சத்துவ மயமாய், அநேக



லீலைகட் காஸ்பதமாய், விஷ்ணு சங்கரன் என்னும் பெயரோடு இரு மூர்த்திகளை அதே கிரகிக்கின்றது.

அவ் விரு மூர்த்திகளும் வைகுண்ட கைலாசாதிகளி லும், பக்தர்களின் ஹிருதயத்தி னிடையும் நித்தியம் சமீ பமா யிருக்கின்றது.

அவற் றுள்ளும், பகவாந் விஷ்ணு பலத் தியாக பூர்வகம் நிரந்தரம் அநுஷ்டிக்கப்பட்ட வேதாநுவசந யக்ஞ தாந தபங்களால் விமலஞ் செய்த அந்தக் கரண முடையவர்களாயும், நித்தியாநித்திய வஸ்து விவேகத் தால் திரணஞ் செய்யப்பட்ட பிரஹ்ம லோகாதி போகத் தை யுடையவர்களாயும், சம தமாதி யுடையவர்களாயும், முமுக்ஷுத் தன்மை யுடையவர்களாயும், அநேக வித தமது நிசுவாச பூத வேதார்த்த விசார அசமர்த்தர்க ளாயு முள்ள புருஷர்கட்கு, மோக்ஷ சாதந நுப பிரஹ் மாத்ம தத்வ போதநத்தின் போருட்டுத் தம தம்சமாகிய ஸ்ரீ பகவாந் வாதராயண நுபத்தால் அவதரித்து அநேக வித நியாயங்களோடு கூடிய நான் கத்தியாய நுப பிரஹ்ம சூத்திரங்களால் சகல வேதாந்த வாக்கியங்களையும் தொ குத்தார். அப் பிரஹ்ம சூத்திரங்களும் அதிகம்பீர அர்த் தத் தன்மையால் அறியக் கூடாத அபிப்பிராய முடைய னவா யிருக்கின்றன.

இப்போழுது கலியில் துஷ்ட சித்த முடைய பேத வாதிகளாலும், சில அபேத வாதிகளாலும் வேறு வேறு பிரகார மாகப் போருத்தப்பட்டுப் புருஷார்த்த முடி வுடை யனவா யிருப்ப தின்றும்.

அதன் பின் பகவாந் சர்வக்ஞ சங்கரராய பரமேசுவரன் கருணையால் லோகாநுக்கிரகத்தின் பொருட்டுத் தம தம்சமாய ஸ்ரீசர்வக்ஞ பகவத் பாத சங்கராசாரிய ரூபத்தால் பிரஹ்மாதி அம்ச சிஷ்ய ரூபத்தோடு கூடி அவதரித்துப் பிரஹ்ம சூத்திர வியாக்கியாந ரூப ஸ்ரீமத் சாரீரக பாஷ்ய மியற்றுதலால், ஒருமுறை கேட்ட மாத்திரையானே அவித்தியா திமிர திரஸ்கார சாமர்த்திய முக்கிய அதிகாரியாய புருஷ துரந்தரர்களை அநுக்கிரகித்தார். அதன் பின் இப்பொழுது பிரஹ்ம சூத்திரார்த்த விசார சமர்த்தமும், ஆலஸ்யமு மின்றியவராய், அநாயாசமாகச் சீக்கிரம் பிரஹ்ம தத்துவத்தை நேரே இச்சிக்கும் மந்த அதிகாரிகட்கு அநுக்கிரகஞ் செய்யு மிச்சை யுடைய ஸ்ரீ பகவாந் பாஷ்யக்காரர், அவர்கட்குப் பிரஹ்ம தத்துவத்தைக் கர தலத் திருக்கும் வில்வப் பழ சமாந மாக்குதற்கு ஜப மாத்திரத்தால் சகல புருஷார்த்த சாதகமாயும், சர்வ வேதாந்த சார பூதமாயும், சிரவண மநந நிதித்தியாசந ரூப மாயு முள்ள ஹரி ஸ்தோத்திரத்தை ஆரம்பிப்பவராய்ச் செய்யும் இச்சை யுடையதைப் பிரதிக்ஞை செய்கின்றார்.

स्तोष्ये भक्त्या विष्णुमनादिं जगदादिं
यस्मिन्नेतत्संसृतिचक्रं भ्रमतीत्थम् ॥
यस्मिन् दृष्टे नश्यति तत्संसृतिचक्रं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥१॥



(பதப் பொருள்.) १ विष्णुं—விஷ்ணுவை, २ भक्त्या—பக்தியினல், ३ स्तोष्ये—ஸ்துதிக்கின்றேன், [விஷ்ணுவின் விசேஷணத்தினைக் கூறுகின்றார்.] ४ अनादिं—அநாதியை, ५ जगत्-आदिं—பிரபஞ்சத்திற்குக்-காரணத்தினை, ६ यस्मिन्—எந்த விஷ்ணுவினிடத்தில், ७ एतत् — இந்த, ८ संसृतिः—சம்சார, ९ चक्रं—சக்கரம், १० भ्रमति—மீண்டும் மீண்டும் சுழல்கின்றதோ, ११ इत्थं—இவ்வாற்றல், १२ यस्मिन्—எதனை, १३ दृष्टे—சாக்ஷாத்கரிக்கில், १४ तत् அந்த, १५ संसृतिः-சம்சார, १६ चक्रं—சக்கரம், १७ नश्यति—நாசமாகின்றதோ, १८ तं—அந்த, १९ संसार-ध्वांत-विनाशं—சம்சாரமாகிய — இருளை — விநாசம் செய்யும், २० हरिं—ஹரியை, २१ ईडे—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

விசேட உரை.

विष्णुं (விஷ்ணும்) = விஷ்ணுவை:— வியாபித்தற் சுபாவ முடையதை, மூவித பரிச்சேத மற்ற பிரஹ்மத்தினை என்பது பொருளாம். स्तोष्ये (ஸ்தோஷ்யே) = துதிக்கின்றேன்:- ஆரோபிக்கப்பட்ட ஸகல அதிஷ்டாந ரூப ஸர்வாத்மகத் தன்மையினல் அநந்த கல்யாண குணத்தினலும், உண்மையாக நிர்விசேஷ சிந்மாத்திர ஸ்வரூபத்தினலும் கீர்த்திக்கின்றேன் என்பது பிரதிக்ஞையாம். அற்றேல், லக்ஷணப் பிரமாணங்களால் வஸ்து சித்தித்தலின், கீர்த்திக்கும் விஷ்ணுவிற்கு லக்ஷணம் யாது? பிரமாணம் யாது? எனச் சங்கித்து ஜகத் காரணத் தன்மை "எதனின் இப் பூதங்கள் பிறக்கின்றன" என்ப வாதி சுருதியிற் கூறிய லக்ஷணத்தினைக் கூறுகின்றார். जगदादिं (ஜகதாதிம்) = ஜகத்திற்கு ஆதியை என. ஜகத்திற்கு = ஆகா

சாதிப் பிரபஞ்சத்திற்கு, ஆதியை=காரணத்தை. ஸகல ஜகத்திற்கும் உபாதாநத் தன்மையும், அதன் கர்த்ருத் தன்மையும் என்பது கருத்தாம். ஆகவே, அவ்யாகிருதம் பிரதாநம் பரமாணு முதலியவற்றிலும், தடஸ்தேசுவர னிடத்தும் அதிவ்யாப்தி யின்றும்.

அற்றேல், "இந்த அபிந்ந நிமித்த உபாதாநத் தன்மை யாண்டும் பிரசித்த மன்றும். கடாதிகளில் யாண்டும் உபாதாந நிமித்தங்கட்குப் பேதமே பார்க்கப்படுதலின். எல்லாவற்றிற்கும் உபாதாநத் தன்மையும் அப்ரசித்த மாம்; மிருத்திகை முதலியவற்றிற்கு ஒன் றேன்றன் உபாதாநத் தன்மையே பார்க்கப்படுதலின். அதனுல் அப்ரசித்த லக்ஷணத்தினை எங்ஙனம் புகல்கின்றீர்? லோகத்தின்கண் பிரசித்தமானவற்றிற்கே லக்ஷணத் தன்மை பார்க்கப்படுகின்றது" என்று புகலிற், புகலுவாம்:- விவாதத்திற்கிடங்களாம், பிருதிவி அப்பு தேயு வாயுக்கள் உற்பத்தியை யுடையன. பிருதிவித் தன்மை முதலியவற்றல்; மண்ணி னின்று முண்டான கடம், சந்திர காந்தத்தி னின்றும் உண்டான ஜலம், அரணியி னின்று முண்டான அக்நி, விசிறியி னின்று முண்டான காற்று என்பன போன்று. எனக், காரியத் தன்மையினை அநுமித்து, ஆகாசத்திற்கும் பூதத் தன்மை ஹேதுவினுல் காரியத் தன்மை அநுமாநத்தின் பின், பிருதிவி முதலியன, ஸத்தை உபாதாநமாக வுடையன, அதனேடு கூடி விளங்குதலின், எது நியமமாக எதனேடு கூடி விளங்குகின்றதோ? அது அதன் உபாதாநமாம். எங்ஙனம், கட முதலியன மண் முதலிய உபாதாநத்தை யுடையன. என்று லாகவத்தால் ஒரு ஸத்தாகிய காரணத்தை யுடையதாந் தன்மையாய



ஸர்வ ஜகத்திற்கும், அதனுனே அபிந்ந நிமித்த உபாதாநத் தன்மையின் சித்தியும் உண்டாகின்றது. அந்யரது மதத்திலும், கடம், ஈசுவரன், ஸம்யோகம் முதலியவற்றிற்கும், ஜீவாத்மாவின்கண் ணுள்ள ஞாநம் முதலியவற்றிற்கும் அபிந்ந நிமித்த உபாதாநத் தன்மை பார்க்கப்படுதலின். ஆகவே, அநுமாநப் பிரமாணத்தினுற் சித்தித்த அபிந்ந நிமித்த உபாதாநத் தன்மையினை அநுவதித்து அதற்குப் பிரஹ்மத் தன்மையினைப் போதித்தல் சுருதியினுல் பொருந்துகின்றது. ஆகவே, சுருதிக்கு லக்ஷணபரத்தன்மை இன்மையினுல் அநுமாநப்பிரமாணத்தினுல் சித்தித்த அபிந்ந நிமித்த உபாதாநத் தன்மையினை அநுவதித்து, அதற்குப் பிரஹ்மத் தன்மையினைப் போதித்தல் மாத்திரத்தினுல் வாக்கிய பேதப் பிரசங்கமும் இல்லை. அந்தப் பிரஹ்மத்தின் ஸ்வருபம் "ஆநந்தத்தானே இப் பூதங்கள்" என்னும் வாக்கியத்தினுல் நிச்சயம் செய்யப்படுகின்றது. விஷ்ணுவினிடத்துப் பிரமாணமும், "சாஸ்திர யோநியாகலின்", "அது ஸமந்வயத்தினுல்" என்பன வாதி புகன்ற நியாயத்தினுல் எல்லா வேதாந்தங்களுமே யாம். ஆகவே, லக்ஷணப் பிரமாணங்கள் இருத்தலின் "விஷ்ணுவினை ஸ்தோத்திரம் செய்கின்றேன்" என்னும் பிரதிக்ஞை நன்கு பொருந்துகின்றது. அற்பமும் தோஷமின் றென்பது தாத்பரியமாம்.

அற்றேல், "எது எது காரணம் அது அது அந்யத்தினின்றே பிறக்கின்றது" என்னும் வியாப்தியினுல், ஆகாசாதிகளினிடத்துப் பார்க்கப்படுதலால், ஆகாசாதிகட்குங் காரணமாகிய விஷ்ணுவிற்கும் ஜந்யத்தன்மை அநுமாநத்தினுல் (சித்தமாம் ஆகலின்) ஜந்யமாய

ஸர்வ பதார்த்தங்கட்கும் உபாதாந நிமித்தத் தன்மை
லக்ஷணம் அதனிடத்துப் பொருந்துவ தில்லை யெனச்
சங்கித்து, "அஸம்பவம் ஸத்திற்குப் பொருந்தாமையின்"
என்னும் நியாயத்தினுல், அதற்கு, அஜந்யத்தன்மையினை
கூறுகின்றுர். अनादिं (அநாதிம்) = அநாதியை, ஆதி =
காரணம் எதற்கு இருப்ப தில்லையோ? அது அநாதியாம்.
பிறப் பற்றது என்பது பொருளாம்.

இது தாத்பர்யமாம்:- பிரஹ்மத்திற்கு ஜடம் கார
ணமா? அல்லது சேதநம் காரணமா? முதல தன்று, ஜட
மாகிய ஆகாசாதிகள் பிரஹ்ம கார்ய மாகலின். இரண்
டாவது மன்று; தனக்குத் தனது காரணத் தன்மை
பொருந்தாமையானும், வேறு சேதந மின்மையானும்.
அல்லது, இருக்கில் அதற்கும் காரணத் தன்மையினுல்
அஜந்யத் தன்மை அநுமாநத்தினுல் சேதநத்திற்கு அந
வஸ்தாப் பிரசங்கம் வரும். அல்லது, ஒன்றற்கு அஜந்
யத் தன்மையில் ஆண்டே காரணத் தன்மை ஹேது
விற்கு வியபிசாரம் வருதலின். அதற்கே பிரஹ்மத் தன்
மை யங்கீகரித்தலினுலும், "அவ்விவ் வாத்மா மஹான்
பிறப் பின்றியதாம்." என அஜந்யத் தன்மையினைப் பிரதி
பாதிக்கும் சுருதி விரோதத் தன்மையாலும் அதற்கு ஜந்
யத் தன்மை யின்று. ஆகலின், ஜந்ய ஸர்வ பதார்த்தங்
கட்கும் உபாதாந நிமித்தத் தன்மை லக்ஷணம் பொருந்து
கின்றது. அற்றேல், இங்ஙன மாயினும், ஸ்தோத்ராரம்
பமானது பொருத்த முடைத் தன்று. அதற்கு விஷயப்
பிரயோஜநங்க ளின்மையின். அங்ஙன மன்றே, பிரத்யக்
கபிந்ந பிரஹ்மமே விஷயம் என உமது அபிமாநம்.
அதுவும் பொருத்த மன்று. கர்த்ருத் தன்மை, போக்த்ருத்



தன்மை, பிரமாத்ருத் தன்மைகளால் விளங்கும் பிரத்யக்
ஆத்மாவிற்கு அவை யின்றிய பிரஹ்மத்தோடு அபேதம்
பொருந்தாமையின். அற்றேல், பிரத்திய காத்மாவினி
டத்தில் அத்தியாஸம் செய்யப்பட்டிருக்கும் அஹங்கா
ரமே கர்த்ருத்வாதிகளால் அநுபவிக்கப்படுகின்றது,
பிரத்ய காத்மா அநுபவிக்கப்படுவ தின்று எனின், அற்
றன்று; அத்தியாஸ காரண மின்மையின், கர்த்தாவின்
அத்தியஸ்தத் தன்மை பொருந்தாமையான்.

ஜட வஸ்துவினிடத்துக் கர்த்தாவின் அத்தியாஸமா?
அல்லது, ஸ்வப்பிரகாசத் தினிடத்தா? முதல தன்று.
கர்த்தா விளங்க வில்லை யென்னும் பிரசங்கத்தினுலும்,
உமது மதத்தில் ஜடமாகிய எல்லாப் பதார்த்தத்திற்கும்
அத்யஸ்தத் தன்மையினுல் அதிஷ்டாநத் தன்மை பொ
ருந்தாமையானும். இரண்டாவ தன்று. ஸ்வப் பிரகாச
வஸ்துவிற்கு அஞ்ஞாந விஷயத் தன்மை யின்மையின்
அதிஷ்டாநத் தன்மை பொருந்தா தாகலின். லோகத்தில்
அம்சத்தினுல் அறியப்படாத சுக்தி முதலியவற்றிற்கு
அதிஷ்டாநத் தன்மை பார்க்கப்படுதலினுலும், இதற்கும்
அம்சத்தை யுடையதாந் தன்மை அங்கீகரிக்கப்படாமை
யினுலும். பிரகாசத்தை யுடையதற்கும் அஞ்ஞாந விஷயத்
தன்மை பொருந்தாது; பிரகாச, அப்பிரகாசங்கட்கு
விரோத மிருத்தலினுலும், விஷய தோஷ மாகிய ஸாதிருசி
யம் முதலியவற்றிற்கு ஸ்வப்ரகாசத்தினை விஷயமாக
வுடைய பிரமிதி பொருந்தாமையின்; அதன் கரணமா
கிய பிரமாண தோஷமும் பொருந்தாமையானும். ஆக
லின், கர்த்தா அத்தியாஸ மன்று. அதுவே யாத்மாவா

கலின். அநேக தோஷத்தோடு கூடிய அதற்குத் தோஷ மற்ற பிரஹ்மத்தோ டபேதம் பொருந்தாமையின், விஷயம் பொருந்துவ தில்லை.

பிரயோஜநமும் பொருந்துவ தில்லை, ஆத்மாவினிடத்தில் பிரதீதியாகும் கர்த்ருத்வாதி அநர்த்தத்தின் நிவிர்த்தியே பிரயோஜந மெனக் கூற வேண்டும், புகன்ற பிரகாரத்தினால் அத்தியாச மின்றிய அதற்கு ஞாநத்தினால் நிவிர்த்தி பொருந்தாமையின், என வினவி, அவ் விரண்டினையும் பிரதிபாதித்து ஸ்துதியினை ஆரம்பிக்கின்றார். **यस्मिन्** (யஸ்மிந்)=எதில் என்ப தாதியால். எதில்—அறியப்படாத விஷ்ணு வாகிய அதிஷ்டாநத்தில், **एतत्** (ஏதத்)=அநுபவிக்கப்பட்ட, **संसृति चक्रं** (ஸம்ஸிருதி சக்ரம்)=இதனால் ஜீவந் ஸம்ஸாரத்தினை யடைதல்,(ஸம்ஸிருதி)=அஹங்காராதிப் பிரபஞ்சங்கள். அதுவே சக்ரம். **भ्रमति** (பிரமதி)=ஒவ் வொன்றிலும் ஆவிர்பாவ திரோபாவங்களினால் மீண்டும் மீண்டும் திரும்புகையாம். **इत्थं** (இத்தம்)=கர்த்ருத்வம் முதலிய பிரகாரத்தினால்.அல்லது, ஸம்ஸிருதி சக்ரம்=அஹங்காராதிப் பிரபஞ்ச ஸமூஹ கர்மத்தில், ஜீவந் **भ्रमति** (பிரமதி)=பிராந்தியினால் கிரஹிக்கின்றான் என்பது பொருளாம்.

இஃதபிப்பிராயமாம்:- "ஸிருஷ்டிக்கு முன்னர் இவ் வெல்லாம் ஒரு ஆத்மாவாகவே யிருந்தன", "ஏ ஸௌம்ய ஸிருஷ்டிக்குப் பூர்வம் இவ் வெல்லாம் ஸத்தாகவே இருந்தன", "ஸத்தியம் ஞாநம் ஆநந்தம் பிரஹ்மம்" "எதனை யறியில் பகவந் இஃ தெல்லாம் அறியப்பட்டதாம்", "தர்மத்தினின்றும் அந்யவிடத்து, அதர்மத்தினின்றும் அந்யவிடத்து", "உனக்குப் பிரஹ்மத்தைக் கூறுகின்றேன்", "எது சாக்ஷாத் அபரோக்ஷம் பிரஹ்மம்", "எது பசி தாகம் சோகம் மோகம் ஜரை மிருத்யுக்களைக் கடந்திருக்கின்றது", "தன்னினும் அந்யவிடத்து எவன் பிரஹ்மத்தை யறிகின்றான் அவனைப் பிரஹ்மம் தூரத்தே செய்கின்றது", "எவன் அந்ய தேவதையை உபாஸிக்கின்றான்", "எவன் ஈண்டு நாநாமானப் பார்க்கின்றனன், அவன் மிருத்யுவினின்றும் மிருத்யுவினை யடைகின்றான்", "எப் பொழுது இவன் இதில் பேதத்தினை அற்பம் கற்பிக்கின்றான், அவனுக்குப் பய முண்டாகின்றது", "தத் த்வமஸி", "அஹம் பிரஹ்மாஸ்மி", "அயம் ஆத்மா பிரஹ்மம்", "அவ் விப் பிரஹ்மம் அபூர்வம் அநபரம் அநந்தரம் அபாஹ்யம்" என்பன வாதி சுருதிகள், உபக்ரம உபஸம்ஹாராதி லிங்கங்களினால் தத்பரமாயுள்ளன; பசி தாக மின்றிய, பிரஹ்ம க்ஷத்ரியாதி பேத மின்றிய, சச்சிதாநந்த ரூப, நிர்விசேஷ மாகிய பிரத்ய காத்மாவைப் பிரஹ்ம பேதத்தின் நிந்தா பூர்வகம் போதிக்கின்றன. அவைகள், பிரத்யக்ஷாதிகளால் பாதித்தற்கு ஸமர்த் துடையன வல. அநேகவித லிங்கத்தோடு கூடி தத்பரத் தன்மையினால் பிரபல மாகலின். பின்னையோ, அவைகளே பிரத்யக்ஷாதி தாத்விக அம்சத்தின் உபஜீவிக்காமையினால் சுத்தி ஞாநம் போன்று பின்னர் உண்டாகுவ தாகலின், தனது பிரமேயத்தைப் போதித்தலில் பிரத்யக்ஷாதிகளை உபஜீவிக்காத ஸ்வப்பிரகாச சைதந்ய விஷயத் தன்மையானும், அநுமாந அபேக்ஷையினால் பிரத்யக்ஷம் போன்று அவ்யவஹித வஸ்து விஷயத் தன்மையானும், பிரத்யக்ஷாதிகளைப் பாதித்துத் தாத்

விக அம்சத்தினின்றும் வேறக்கி வியாவகாரிக அம்சத்தில் வியவஸ்தாபிக்கின்றன. ஆகவே, அவ்வித ஆத்மாவில் கர்த்ருத்வாதிப் பிரபஞ்சங்கள் பரமார்த்தமாகப் பொருந்தாமையின் அது அத்யஸ்தமேயாம். ஸ்வப்பிரகாசத்திற்கு அஞ்ஞாந விஷயத் தன்மை பொருந்தாமையான் அதிஷ்டாநத் தன்மை பொருந்தாமையின்; அத்யஸ்தத் தன்மை பொருந்தாது என்னற்க; லோகத்தில் "நான் கடத்தினை யுணரேன்" என அஞ்ஞாந விசேஷணத் தன்மையினுல் விளங்குவதற்கு அதன் விஷயத் தன்மை பார்க்கப்படுதலின். "என்னை நான் உணரேன்" என்னும் அஞ்ஞாந ஸாதகத்தால் சித்தித்த ஸ்வரூப சைதந்யத்திற்கு அதன் அவிரோதித் தன்மை யிருத்தலின். விருத்தியின் ஆரூடமான அதற்கே அதன் விரோதித் தன்மையாகலின், ஆத்மாவினிடத்தில் ஆரோபிக்கப்பட்ட அம்ச பேத மிருத்தலின். ஸாதிருசியம் முதலியன ஆத்மாவினிடத்தில் பிராமண்யம் முதலிய அத்யாரோபத்திலும், ஸம்வித்தின் அநித்தியத் தன்மை அத்யாரோபத்திலும் பார்க்கப்படாமையானும். ஸ்வப்பிரகாசமும் தானே தன்னிடத்தில் பிரமாணத் தன்மையினுல் அதன்கண்ணுள்ள அவித்தையாகிய பிரமாண தோஷம் இருத்தலானும். அதனுனும், கர்த்தா அத்யஸ்தத்தினுல் அநாத்மாவாகலின். கர்த்ருத்வாதி ஸாக்ஷியாகிய ஆத்மாவிற்குப் பிரஹ்மத் தன்மையில் பாத மின்மையின் பிரஹ்மாத்ம ஐக்கிய மாகிய விஷயம் பொருந்துகின்றது.

இங்ஙனம், ஆத்மாவினிடத்தில் ஆரோபிக்கப்பட்ட கர்த்ருத்வாதி அநர்த்தங்கள் மூலத்தோடு நிவர்த்தி யாகிய பிரயோஜநமும் ஸம்பவிக்கின்றது என்று கூறுகின்றர்.



**यस्मिन्दृष्टे इति** (யஸ்மிந்திருஷ்டே இதி) = எதை அறியில், **यस्मिन्** (எதில்) = ஸதாநந்த சித்பிரகாச பரிபூர்ண விஷ்ணுவில். **दृष्टे** (அறியில்) = சாந்தியாதி ஸஹித நிரந்தரம் அநுஷ்டிக்கப்பட்ட சிரவண மநந நிதித்தியாஸநங்களால் நன்கு ஸாக்ஷாத்காரம் செய்யில், **तत्संसृति चक्रं** (தத் ஸம்ஸ்ருதி சக்ரம்) = அந்த ஸம்ஸார சக்ரத்தை, மூலத்தோடு, **नश्यति** (நசியதி) = நாசம் செய்யும், **तं हरिं ईडे इति सम्बन्धः** (தம்ஹரிம் ஈடே இதி சம்பந்த:) = அந்த ஹரியை நமஸ்கரிக்கின்றேன். ஈண்டு இரண் டிடத்தும் "யாண்டு த்வைதம் போன்று பார்க்கப்படுகின்றதோ? ஆண்டு, அந்யன் அந்யத்தினைப் பார்க்கின்றன். யாண்டு இவனுக்கு எல்லாம் ஆத்மாவாகின்றனவோ, ஆண்டு எதனுல் எதனைப் பார்ப்பன்" என்பன வாதி சுருதியாம்.

அற்றேல், அஹங்காராதிப் பிரபஞ்சத்தின் மூலாஞ்ஞாநத்தின் நிவிர்த்தி பொருந்தாது. அது அத்யஸ்தமன்றகலின். தன்னுனே தனது அத்யாஸத்தில் ஆத்மாசிரயமாகலின். வேறஞ்ஞாநம் அங்கீகரிக்கிலும் அநவஸ்தை முதலியன அடைவாகலின். லோகத்தில் அத்யஸ்தமின்றிய கடாதிகட்கு ஞாநத்தினுல் நிவிர்த்தி பொருந்தாது. மற்றும், அநாதி பாவ ரூப அஞ்ஞாநத்தின் நிவிர்த்தி பொருந்தாது. அநாதி பாவத்திற்கு ஆத்மா போன்று நித்தியத் தன்மை நியம மாகலின். பரமாணுவின்கண்ணுள்ள சியாமத் தன்மையின் அநாதித் தன்மை இருவாதிகளின் மதத்திலும் அங்கீகார மின்மையின்.

மற்றும், அஞ்ஞாந நிவிர்த்தி சத்தா? அல்லது, அசத்தா? அல்லது, சதசத்தா? அல்லது, சதசத் விலக்ஷணமா?

முதலதில், ஆத்மாவின் பிந்நமா? அல்லது, அபிந்நமா? அல்லது, பிந்நாபிந்நமா? அல்லது, பிந்நாபிந்ந விலக்ஷணமா? முதல தன்று. த்வைதப் பிராப்தியான். இரண்டாவ தன்று. ஆத்மா அநாதியாகலின் அவித்யா நிவர்த்திக்கு ஞாந சாத்தியத் தன்மை பொருந்தாமையின். மூன்றவது மன்று. விரோதத்தால். இதனுனே நான்காவதும் அன்று, பிந்நாபிந்நத் தன்மையின் அந்யமாக வேறு பிரகார மின்மையின். முதலாவதில் இரண்டாவ தன்று. அசத்துத் தன்மையில் ஸஸசிருங்க ஸமாநமான அதற்கு, சாத்தியத் தன்மை பொருந்தாமையானும், புருஷார்த்தத் தன்மை அபாவப் பிரசங்கத்தானும். மூன்றவது மன்று. விரோதத்தானும், புகன்ற இரு பக்ஷத்தின் தூஷணப் பிராப்தியானும். நான்காவது மன்று. சதசத் விலக்ஷணத் தன்மையில், அநிர்வசநீயத் தன்மையால், அதற்கு அஞ்ஞாந அவஸ்தாநப் பிரசங்கத்தானும், அநிர்வசநீய அஞ்ஞாந நிவிர்த்திக்கு அநிர்வசநீயத் தன்மை பொருந்தாமையானும். கட நிவிர்த்தி கட மாவதில்லை. ஆதலால், எவ்விதத்தும் பொருந்தாமையான் அஞ்ஞாந நிவிர்த்தி ஸம்பவிக்கவில்லை யென வினவி, அஞ்ஞாநத்திற்குக் கற்பிப்பவ ரின்மையின், கற்பிக்கப்படாத அஞ்ஞாநத்தின் நிவிர்த்தி பொருந்துவ தின் றேன் பதின்று. தீபம்முதலியன போன்று அதற்கு ஸ்வ பர நிர்வாகத் தன்மையால். அகற்த ஸ்வப் பிரகாச ஆத்மாவினிடத்தில் உண்மையாகப் பொருந்தாமையின் கற்பிதத் தன்மையே கூறுதற்கு உசிதமாகலானும். "அநிர்தத்தினுலே நிறைந்திருக்கின்றனர். அவ் விவ் ஸத்ய காமங்கள் அநிர்தத்தால் மூடப்பட்டிருக்கின்றன. அசத் இருந்தது மின்று. ஸத் இருந்தது மன்று"



என்பவாதி சுருதியாலும். அநாதி பாவத் தன்மையினுல் அதற்கு நிவிர்த்தி பொருந்தாது என்பது மின்று. அநாதி பாவத்திற்கு நிவிர்த்தி யின்று என்னும் ஸாமாந்ய வ்யாப்திக்கு ஞாநத்தினுல் அஞ்ஞாநம் நாச மாகின்றது என்னும் அநுபவ சித்த விசேஷ வியாப்தி விரோதத்தினுல், "ஆத்மவித் சோகத்தினைக் கடக்கின்றன்", "அந்தத்தில் விசுவ மாயை மிகவும் நிவிர்த்தியாகின்றது", "அவனை மிருத்யு முகத்தினின்றும் வேறுக்கி மோக்ஷத்தினை யடைவிக்கின்றது", "உனக்கு மேலான அந்த காலத்தில் பிரஹ்ம லோகத்தில்" என்பன வாதி சுருதியாலும், "ஞாநத்தினுல் எவர்களுக்கு அவ் அஞ்ஞாநம் நாசமாகின்றதோ", (*பகவற் கீதை **5—16**) "எவர்கள் என்னையே அடைகின்றனர்,அவர்கள் இந்த மாயையினைக் கடக்கின்றனர்"**(7-14)** "நான் அஞ்ஞாநத்தினின்றும் உண்டான தமஸினை நாசமாக்குகின்றேன்" **(10–11)**, "எவனது ஹிருதயத்தில் பிரவேசிக்கில் வித்வாந் அவித்தையினைக் கடக்கின்றன்", "யோகி, மாயை மேய மின்றிய அந்த ஞாநாத்மாவின் பொருட்டு நமஸ்காரம்" என்பன வாதி ஸ்மிருதியானும். அஞ்ஞாநத்தினின்றும் அந்யமான ஸ்தலத்தில் ஸங்கோசமே உசிதமாகலின். அதற்கு நம்மால் பாவத் தன்மை

---

*பகவற் கீதை தமிழ் "அறிவினு லறிகிலா தவையெலா மழியவே." **(5—12.)** "என் மாயையினுற் றிகைப் போழிந்திங், கும் வகைய தர்தேவர்க்கு மென்னையே யெப்போழுது, மெய்வகையோ டடைகின்ற மநமிலரேல்" **(7–10)** "மற்றவர் நேஞ்சின்ம யக்கிரு ளேல்லா, யற்றமின் ஞாநவி ளக்கோளி யாலே, பற்றறு விப்பன்." **(10—7)** என்னும் செய்யுளான் அறிக.

அங்கீகரிக்கப்படாமையானும், அபாவ விலக்ஷணத் தன்மை மாத்திரத்தால் பாவத் தன்மை கூறுதலானும் என்னும் அபிப்பிராயத்தினுல் அஞ்ஞாந நிவிர்த்தி ஸத்நுப ஆத்மாவின் அபிந்நம் எனக் கூறுகின்றுர். **संसार ध्वान्त विनाशं हरिं इति** (ஸம்ஸார த்வாந்த விநாசம் ஹரிம் இதி) = ஸம்ஸார இருளே நாசஞ் செய்யும் விஷ்ணுவை, **संसारस्य** (ஸம்ஸாரத்திற்கு) = கர்த்நுத்வாதி நுபத்திற்குக் காரண மாகிய எந்த, **ध्वांतं** (த்வாந்தம்) = அஞ்ஞாநத்தை, அதன், **विनाशं** (விநாசம்) = நிவிர்த்தி நுபம், **हरिं** (ஹரிம்) விருத்தியின்கண் ஆநுடமா யிருக்கும் அஞ்ஞாந விரோதியாகிய சைதந்யத்தை என்பது போருளாம்.

ஆத்மாவின் அபிந்நமான அஞ்ஞாந நிவிர்த்திக்கு ஞாந ஸாத்தியத் தன்மை போருந்தாது என்னற்க, எது இருக்கில், எதற்கு முதற்க்ஷண ஸம்பந்தம். எது இன்றி இருக்கில் எதற்கு அபாவம், அது அதன் சாத்தியம் என்னும் சாத்திய லக்ஷணம் ஞாந மிருக்குங்கால், அஞ்ஞாந நிவிர்த்தி நுப ஆத்மாவின் முதற் க்ஷண ஸம்பந்தமாம் ஞாந அபாவத்தில் அஞ்ஞாந நிவிர்த்தியின் அபாவம் அஞ்ஞாநமாம். ஆகலின் அஞ்ஞாந நிவிர்த்தி நுப ஆத்மாவினிடத்தில் ஸத்துத் தன்மை போருந்தலானும். பிந்ந ஸத்தையுடைய பாவாபாவங்கட்கு விரோத மின்மையினுனும். அஞ்ஞாந நிவிர்த்தி நித்திய சித்தமாயிருக்கினும் ஸாத்தியத் தன்மைப் பிராந்தியினுலாவது புருஷப் பிரவர்த்தி போருந்துதலானும். "பிரபஞ்சத்தின் உபசமம் சிவம்" என்பதாதி சுருதியால் அதற்கு ஆத்மாவோடு அபேத சித்தியாலும், எவ்விதத்தும் அஞ்ஞாந நிவிர்த்தி நுபப் பிரயோஜநம் போருந்துதலின் ஸ்தோத்ராரம்பம் போருந்துகின்



றது என்பது கருத்தாம். ईडे (ஈடே) = ஸ்துதிக்கின்றேன் என்பது போருளாம். (1)

அற்றேல், பிரஹ்மம் தன்னினின்றும் அந்யமான ஜகத்தை ஆரம்பிக்கின்றதா? அல்லது பிரஹ்மமே ஜகத்தாக ஜநிக்கின்றதா? முதல தன்று, த்வைதப் பிராப்தியானும், நிரவயவமான ஒன்றற்கு ஆரம்பகத் தன்மை போருந்தாமையானும். இரண்டாவதிலோ, பிரஹ்மம் ஸர்வ நுபத்தால் ஜக தாகாரமாக வுண்டாகின்றதா? அல்லது, ஏக தேசத்தினுலா? முதலதன்று, முக்தர்கட்கு அடையத்தக்க ஸ்தல மின்மைப் பிரஸங்கத்தால் நிஷ்பிரபஞ்சமான பிரஹ்மமே முக்தர்களால் அடையப்படுதலின். இரண்டாவ தன்று, பிரஹ்மம் நிரவயவமாதலின், ஸாவயவத் தன்மையிலும் அநித்யத் தன்மை வருதலினுனும், "நிஷ்கலம்" என்பதாதி சுருதி விரோதத்தாலும் எனக் கடாவி, "கேட்பவர்கட்கு ஹிதத்தினைக் கோடுக்கும் சுருதி நிரம்சத்திலும் அம்சத்தினை ஆரோபித்துச் சர்வாம்சத்திலா எனக் கேட்பவர்க்கு அப்பாஷையினுல் உத்தரத்தினைக் கூறுகின்றது" என்பதாதி நியாயத்தினுல் உத்தரங் கூறுகின்றுர்.

यस्यैकांशादित्थमशेषं जगदेतत्
प्रादुर्भूतं येन पिनद्धं पुनरित्थम् ।
येन व्याप्तं येन विबुद्धं सुखदुःखैस्तं
संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥ २ ॥

(பதப் பொருள்.) १ **यस्य**-எந்தப் பரமாத்மாவின், २ **एक अंशात्**—ஏக தேச சமாந மாயாவச்சிந்நத்தினால், ३ **इत्थं**—போக்திரு போக்ய ஆகாரத்தினால், ४ **एतत्**—அநுபவிக்கப் படும், ५ **अशेषं**—எல்லா, ६ **जगत्**—ஜகத்தும், ७ **प्रादुर्भूतं**—உண்டாயினவோ, ८ **पुनः**-பின்னர், ९ **येन**-எந்தப் பரமாத்மாவினால், १० **इत्थं**—வர்ணாசிரமாதி பேதத்தினால், ११ **पिनद्धं**—நன்கு கட்டப்பட்டிருக்கின்றதோ, १२ **येन**—எந்த அதிஷ்டாநத்தினால், १३ **व्याप्तं**-பூர்ணமோ, १४ **येन**—எந்த ஸ்வப்பிரகாச சித்ரூப பரமாத்மாவால், १५ **सुख दुःखैः**—சுக துக்கங்களோடு (கூடிய சகல ஜகத்தும்), १६ **विबुद्धं**—பிரகாசிக்கப்படுகின்றதோ, १७ **तं**-அந்த, १८ **संसार-ध्वांत-विनाशं**—சம்சார-இருளை-நாசஞ் செய்கின்ற, १९ **हरिं**—ஹரியை, २० **ईडे**—நமஸ்கரிக்கின்றேன், என்றவாறு.

**यस्य** (யஸ்ய)=எதற்கு. பரமாத்மாவினது, **एकांशात्** (ஏகாம்சாத்) ஏக அம்சத்தினால், ஏக தேச ஸமாநத்தினால், மாயாவச்சிந்நத்தினால், **इत्थं** (இத்தம்)=இவ்வாறு, போக்த்ரு போக்ய ஆகாரமாக, **एतत्** (ஏதத்)=அநுபவிக்கப்பட்ட, **जगत्** (ஜகத்)=ஜகத்து, **प्रादुर्भूतं** (பிராதுர்பூதம்)=உத்பந்நமாயிற்றென்பது பொருள். பிரஹ்மத்திற்கு உண்மையாக நிரவயவத் தன்மையிருப்பினும் மாயாவச்சேதத்தினால் அநிர்வசநீய அம்சத்தினால் ஏகதேசத்தானே இச் சகத்து உத்பந்நமாம். ஆகவே, "இதனது பாதம் ஸர்வ பூதங்களும், மூன்று பாதங்களும் இதற்கு அமிர்தமாகிய ஸ்வர்க்கத்தில்" என்னும் சுருதியாம். இதற்கு இது பொருளாம்:—

பிரஹ்மாண்ட ரூப ஸகல ஜகத்தும் இந்தப் பிரஹ்மத்தின் அம்சமென்பது பொருளாம். இப் பிரஹ்மத்தின் மூன்று



பாதம் மோக்ஷ ரூப ஸ்வப்பிரகாச ஆத்ம ஸ்வரூபத்தில் இருக்கின்றது. பிரபஞ்ச ஸம்பந்தம் ஆண்டு இருப்பதின்றென்பது பொருளாம். பிரஹ்மத்திற்குப் பிரபஞ்ச ஸம்பந்தம் இன்றிய உபதேசம் ஸ்ரீ வாதராயணராலும், "விகாரத்திலிருப்பதில்லை. அங்ஙனமன்றோ ஸ்திதியைக் கூறுகின்றது" (4–4–16.) என ஸூத்ரஞ் செய்யப்பட்டிருக்கின்றது. விகார ரூபம் இன்றி பிரஹ்மத்தின் மூன்று பாதம் இருக்கின்றது. அங்ஙனமன்றோ, ஸ்திதி அவஸ்தையினைப் பிரஹ்மத்திற்குக் கூறுகின்றது சுருதி என்பது சூத்திரத்தின் பொருளாம். ஆகவே, புகன்ற பிரகாரத்தினால் பிரஹ்மம் ஜகதாகாரமாக இருக்கினும் முக்தர்களால் அடையப்படும் ஸ்தலம் இன்றென்னும் வினா இன்றென்பது கருத்தாம். இங்ஙனம் ஜகத் உற்பத்தியினை பரமாத்மாவிற்குப் புகன்று, அதற்கு ஜகத்தின் ஸ்திதி காரணத் தன்மையினையும் கூறுகின்றார். **येन पिनद्धमिति** (யேந பிநத்தமிதி)=எதனால், திடமாகக் கட்டப்பட்டிருக்கின்றதோ. மீண்டும், **येन**-பரமாத்மாவினால். இச் சகத்து, **इत्थं** (இத்தம்) = இவ்வாறு, வர்ணாசிரமாதி பேதத்தினால், **पिनद्धं** (பிநத்தம்)=நன்கு திடமாகக் கட்டப்பட்டிருக்கின்றது என்பது பொருள். ஆகவே. "இந்த லோகங்களின் சங்கரமின்மையின் பொருட்டு இது ஸேதுவாம். பிரிப்பதாம்" என்னும் சுருதியாம். இதற்குப் பொருள் இது வர்ம். "இது அது, இது மஹான் அஜம்" என ஆரம்பித்து ஸர்வ வசித்தன்மையாலும், ஸர்வேசுவரத் தன்மையாலும் கூறிய பிரகிருதமாகிய பரமாத்மா ஸேது போன்று ஸேதுவாம். ஸேது ஸாம்யத்தினையே கூறுகின்றது. இந்த லோகங்கட்கும், பூராதி பேதத்தினாலும், தேவ திர்யக் மநுஷ்யாதி பேதத்தினாலும், வர்ணாசிரமாதி பேதத்தினாலும், பிந்நமாயுள்ள பூதங்கட்கும்

சங்கர மின்மையின்பொருட்டுப் பிரிப்ப தாம். எங்ஙனம், லௌகிக மாகிய ஸேது (கரை) க்ஷேத்ர ஸம்பத்துக்களையும், அவ்விடத் துள்ள ஜலங்களையும் ஸங்க்ரஹ மாகா திருத்தற் பொருட்டுப் பிரிக்கின்றதோ, அது போன்றாம். **येन व्याप्तं इति** (யேந வ்யாப்தம் இதி)=எதனால் வியாபிக்கப் பட்டிருக் கின்றது. எதனால்---அதிஷ்டாந ரூபத்தினால், ஸர்வ ஜகத்தும் ஆகாசம் போன்று, **व्याप्तं** (வ்யாப்தம்)—உள்ளிலும் வெளியி லும் பூர்ண மென்பது பொருளாம். ஆகவே, “எது ஜகத் எல்லா வற்றினையும் பார்த்தும் கேட்டும் உள்ளிலும் வெளியி லும் அவ் வெல்லாவற்றினையும் வியாபித்து நாராயணன் இருக்கின்றான்”. என்னும் சுருதி, ஸர்வ வியாபகத் தன்மை யில் ஹேதுவாம். நாராயணன் என்பது, நரனி னின்றும், புருஷனி னின்றும், உத்பந்ந மாகிய ஸர்வ ஜகத் தாகிய நரர்கள், அவர்கட்கு, அயநம்—அதிஷ்டா நம் என்பது பொ ருளாம். மற்றைய வெளிப்படை.

அற்றேல், பிரஹ்மத்திற்கு ஜகத் காரணத் தன்மை பொ ருத்த மின்று. விஷமத் தன்மை கிருபை யின்மைத் தன்மைப் பிரசங்கத்தினால் சில சுகியாகிய தேவர்களையும், சில துக்கிக ளாகிய திர்யக் முதலியவற்றையும், சில இரண்டு முடைய மநுஷ்யர்களையும், சிருஷ்டிக்கும் ஈசுவரன் விஷமத் தன்மை யுடையவ னாவன். அங்ஙனமே, பிரளய காலத்தில் ஸமாந மாக எல்லாச் சீவர்களையும் கோறலால் கிருபை யின்மையு மிருக்கின்றது எனக் கடாவி, அந்தப் பிராணிகள் அநுஷ்டிக் கப்பட்ட கர்மங்களின் அபேக்ஷையானே ஈசுவரனுக்குச் சிருஷ்டி முதலியவற்றில் பிரவிர்த்தியாகலின், வைஷம்யம் முதலிய பிராப்தி யின் றென்னும் அபிப்பிராயத்தால் கூறு



கின்றார். **येन विबुद्धं इति** (யேந விபுத்தம் இதி)=எதனால் பிர காசிக்கப்படுகின்றது. **सुखदुःखैः** (சுக துக்கை:)=சுக துக்கங் களால். சுகம்—புத்ரன் தாரம் முதலியன கிடைத்தலா லுண் டாய ஸத்வ குண பரிணாம ரூப அநுகூல சித்த விருத்தி யாம். துக்கம்—ரோகாதிகளால் ஜநிக்கப்பட்ட இரஜோ குணத்தின் விகார ரூபப் பிரதிகூல சித்த விருத்தி யாம். அவ் விரண்டின் விசிஷ்ட மாகிய ஸகல ஜகத்தும், **येन** (யேந)—ஸ்வப்பிரகாச சித் ரூப பரமாத்மாவினால். **विबुद्धं** (விபுத்தம்)=பிரகாசிக்கப் பட்டிருக்கின்ற தென்பது பொருளாம். ஆகவே, “அதனது விளக்கத்தினால் இவ் வெல்லாம் விளங்குகின்றன” என்னும் சுருதியாம். சூரியாதிகட்கு விஷய மின்றிய பிரஹ்மத்தின் ஸ்வரூப சைதந்யத்தினால் என்பது பொருளாம். இது தாத் பர்யமாம்:- “இதுவே நல்ல கர்மத்தினைச் செய்விக்கின்றது. அவனை யம லோகத்தி னின்றும் உயர்வுத் தன்மையை அடை விக்கின்றது. இதுவே துஷ்க் கர்மத்தினைச் செய்விக்கின்றது. அவனை யமனி னின்றும் கீழே செலுத்துவிக்கின்றது”, “இந்த நரக திர்யக் முதலிய லோகங்களினின்றும் உயர்வாய கந்தர்வர் முதல் பிரஹ்மா பர்யந்தமான பதத்தினை அடைவித்தற்கு இச்சிக்கின்றது. கீழ் திர்யக் முதல் ஸ்தாவர பர்யந்த மான பதத்தினை அடைவிக்க இச்சிக்கின்றது” என்னும் சுருதியால், அவ் வப் பிராணியினால் அநுஷ்டிக்கப்பட்ட கர்மாபேக்ஷயி னால் அப் பலத்தினைக் கொடுக்கும் கர்த்ருத்வம் அறிவிக்கப் படுகின்றது. புண்யத்திலும் பாபத்திலும் தனது இச்சையி னால் பிரவிர்த்திப்பிக்கும் ஈசுவரனுக்கு மீண்டும் வைஷம்யம் முதலியன அடைகின்ற தென்னற்க. பூர்வ பூர்வ கர்ம அபே க்ஷையினால் உத்தரோத்தர கர்மத்தில் பிரவிர்த்திப்பிக்கும் ஈசுவரனுக்கு அத னடை வின்மையின், ஸம்ஸாரமும் அநாதி

யாகலின். சூத்திரக்காரராலும் ஈசுவரனுக்கு வைஷம்யம் முதலியன இன்மை "வைஷம்யம் நைர்க்ருண்யங்கள் (விஷம கருணையின்மைகள்.) இன்று; ஸாபேக்ஷயாகலின். அங்ஙனமே காண்பிக்கப்படுகின்றது." (2-1-34), "அன்று கர்ம விபாகம் இன்மையான் எனின், அற்றன்று; அநாதியாகலின்." (2-1-35) எனச் சூசிப்பிக்கப் பட்டிருக்கின்றது. ஈசுவரனுக்கு வைஷம்ய நைர்க்ருண்யங்கள் பொருந்துவதில, சிருஷ்டியாதி பிராணி கர்ம அபேக்ஷையாகலின். அங்ஙனமன்றே, 'இதுவே' என்று கூறிய சுருதி காண்பிக்கிறன்து என்பது முதற் சூத்ரத்தின் பொருளாம்.

அற்றேல், சிருஷ்டிக்குப் பூர்வம் கர்மமின்று. அப்பொழுது பகுப்பின்மையின். எல்லோரும் பிரஹ்ம மாத்திரமாகலின் எனின், அற்றன்று. ஸம்ஸாரம் அநாதியாகலானும், ஸூக்ஷ்மத் தன்மையினுல் பிரளயத்தில் இருத்தல் பொருந்துதலானும் என்பது இரண்டாவது ஸூத்ரத்தின் பொருளாம். ஆகவே, பிரஹ்மத்திற்கு ஜகத் காரணத் தன்மையில் ஒரு தோஷமுமின்றாம்.

(2)

அற்றேல், சுக துக்க மோஹ நுபமான ஆகாசாதிப் பிரபஞ்ச மாகிய ஜடத்திற்கு, சுக துக்க மோஹ நுப ஸத்வ ரஜஸ் தமோ குணுத்மக ஜட மாகிய பிரதாநமே காரணமென அநுமிக்கப்படுகின்றது. சிந்மாத்திரமான பிரஹ்மத்திற்கு அவ்வித ஜகத் காரணத் தன்மை போருந்தாமையின், கார்ய காரணங்களுக்கு வைலக்ஷண்யம் போருந்தாமையின், "லோகித சுக்ல கிருஷ்ணங்களையுடைய ஒரு அஜை ஸமாந நுபமான அநேக பிரஜைகளைச் சிருஷ்டிக்கின்றது." என்னும் சுருதியால். அஜை—அஜந்யமான, லோகித சுக்ல கிருஷ்ணம்—ரஜஸ்



ஸத்வ தமோ நுபமான, ஸமாந—தனது ஸமாந நுபமான, அநேக பிரஜை—நன்கு உண்டாகின்றதால் பிரஜைகளாம். ஆகாசாதிப் பிரபஞ்சங்களை என்பது போருளாம் என ஆசங்கித்துக் கூறுகின்றர்.

सर्वज्ञो यो यश्च हि सर्वः सकलो यो
यश्चानन्दोऽनन्तगुणो यो गुणधामा ।
यश्चाव्यक्तो व्यस्तसमस्तः सदसद्यस्तं
संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥३॥

(பதப் போருள்.) १ यः—எவன், २ **सर्वज्ञः**—சர்வஞ்ஞன், ३ यः च हि—எவன், ४ **सर्वः**—சர்வன், ५ यः—எவன், ६ **सकलः**—பிரகிருதி அதிஷ்டாதா, ७ यः च—எவன், ८ **आनंदः**—நிரந்தர விளக்க பரமாநந்த நுபன், ९ यः—எவன், १० **आनंत गुणः**—எண்ணின்றிய சர்வ சக்தித்வ சர்வஞ்ஞத்வ முதலிய குண முடையோன், ११ **गुण धामः**—(எவன்) சுத்த சத்துவமாயாநுப உபாதியினையுடையவன், १२ यः च—எவன், १३ **अव्यक्तः**—இந்திரியத்தால் கிரகிக்கப்படாதவன், १४ **व्यस्तः**—(எவன்) போக்திரு போக்கிய நுபத்தினுல் விபாகம் உடையோன், १५ **समस्तः**—(எவன்) எல்லாப் பிரபஞ்ச நுபன், १६ यः—எவன், १७ **सत्**—சத்தியன், १८ **असत्**—அசத்தியன், १९ **तं**—அந்த, २० **संसार-ध्वांत-विनाशं**—சம்சார-இருளை-நாசஞ் செய்கின்ற, २१ **हरिं**—ஹரியை, २२ **ईडे**—நமஸ்கரிக்கின்றேன், என்ற வாறு.

**यः सर्वज्ञः** (ய: ஸர்வஞ்ஞ:) = எவன் ஸர்வஞ்ஞன்? ஈண்டு "எவன் ஸர்வஞ்ஞன், ஸர்வத்தையும் அறிபவன். எவ

னுக்கு ஞாநமயம் தபமாம்." என்பதாதி சுருதியாம் ஸாமாந்ய மாக ஸர்வத்தினையும் அறிபவன் ஸர்வஞ்ஞனும். விசேஷமாக ஸர்வத்தினையும் அறிபவன் ஸர்வ வித்தாம். எவனுக்கு ஞாந ரூபம் தபம். ஜீவர்கட்குப் போன்று கிருச்ர ஸாந்தராயணாதி ரூப தப மின்று என்பது சுருதியின் பொருளாம். பிரதாநத் திற்கு ஜடத் தன்மையால் நாநாவித கர்ம பல ரூப நாநாவித விந்யாஸ தேகாதிப் பிரபஞ்ச சிருஷ்டி பொருந்தாமையின்.

மற்றும், சுகம் முதலியவற்றிற்குப் பாஹ்ய மாகிய கட முதலியவற்றின் தர்மத் தன்மை சித்தியாமையின், ஆந்தரத் திற்கே பிரதீதி யாகலின். அசேதநத்திற்குத் தானாக லோ கத்தில் பிரவிர்த்தி பார்க்கப்படாமையின். அஜை என்பதாதி மந்திரத்திற்கு லோகித சுக்ல கிருஷ்ண குணத்தினையுடைய அக்நி அப்பு அந்நத்தின் காரணமான பரமாத்மாவில் அத் தியாஸம் செய்யப்பட்ட அவ்யாகிருத விஷயத் தன்மையாக லின், பிரதாநம் ஜகத் காரண மன்று. பாதராயணராலும், 'அசப்த மன்று. ஈக்ஷிக்கப்படுதலின்", (1-1-5.) "அநுமாந மன்று. சிருஷ்டி பொருந்தாமையாலும்." (2-2-1.) என்பன வாதியால் பிரதாநத்திற்கு ஜகத் காரணத் தன்மை நிஷேதிக் கப்பட்டிருக்கின்றது. "அது எல்லாப் பிரஜையுமாவோம் என்று ஈக்ஷித்தது" என்னும் சுருதியால் ஜகத் காரணமான ஸத்திற்கு ஈக்ஷணமானது கேட்கப்படுதலின், சப்தத்தினால் அறியப்படாது அநுமாநத்தினா லறியப்படும் பிரதாநம் காரண மன்று என்பது முதற் சூத்திரத்தின் பொருளாம். அநுமிக் கப்படுவது அநுமாநம். அவ் வநுமான மாகிய பிரதாநம் காரண மன்று. அது ஜடமாயிருத்தலின், தேகாதிப் பிரபஞ் சத்தின் கர்த்ருத்தன்மை பொருந்தாமையின் என்பது இரண் டாவது சூத்ரத்தின் பொருளாம். சுருதியினால் சித்திக்கப்பட்ட



ஸர்வஞ்ஞப் பிரஹ்மத்திற்கு அது பொருந்து மென்பது கருத் தாம். கூறிய விலக்ஷணங்கட்குக் காரிய காரணத் தன்மை பொருந்தா தென்று யாது புகலப்பட்டது? அற்றன்று; ஊர்ண நாபியினின்றும் தந்துவிற்கும் கோமயத்தினின்றும் தேள் முதலியவற்றிற்கும், புருஷனினின்றும் கேச லோமாதிகட் கும் (உற்பத்தி) பார்க்கப்படுதலின் என்னும் கருத்தால் கூறு கின்றார். **यश्च हि सर्व इति** (யச் ச ஹி ஸர்வ இதி) = எவன் ஸர்வன்? "நிச்சயமாக இவ் வெல்லாம் பிரஹ்மம்", "இவ் வெல் லாம் ஆத்மாவே." என்பன வாதி சுருதியால். "கட மிருக்கின் றது. கடம் விளங்குகின்றது" எனச் சர்வப் பிரபஞ்சங்களும் இருத்தல் தன்மையாலும், ஸ்புரணத் தன்மையாலும், பிரஹ் மம் ஸலக்ஷணமாக அநுபவிக்கப்படுதலினாலும், "எங்ஙனம் ஊர்ண நாபி ஸிருஷ்டிக்கின்றது கிரஹிக்கின்றது, எங்ஙனம் பிருதிவியினின்றும் ஒஷதிகள் உண்டாகின்றன? எங்ஙனம் ஸத்தாகிய புருஷனிடத்தினின்றும் கேச லோமங்கள் (உண் டாகின்றன). அங்ஙனமே அக்ஷரத்தினின்றும் இவ் விசுவம் உண்டாகின்றன." என்பன வாதி சுருதியால், விலக்ஷண காரணத் தன்மையில் திருஷ்டாந்தம் காண்பிக்கப்படுதலினா லும் என்பது கருத்தாம்.

அற்றேல், "அசேதநமாகிய பிரதாநத்திற்கு, ஸ்வயம் ஸிருஷ்டியாதிப் பிரவிர்த்தி ஸம்பவியாவிடினும், ஈசுவரனால் அதிஷ்டக்கப்பட்ட அதன் பிரவிர்த்தியால் காரணத் தன்மை பொருந்துகின்றது" என்னும் யோகிகளினது, அல்லது, சேசு வர சாங்கியர்களினது மதத்தினை ஆசங்கித்துக் கூறுகின்றார். **सकलो य इति** (ஸகலோ ய இதி) = எவன் ஸகலன், பிரகிருதி யின் அதிஷ்டாதாவும் அவனே என்பது பொருளாம். "அது

"அநேகமாவோம் என இச்சித்தது." என தனக்கே அநேகமாகும் இச்சை பார்க்கப்படுதலின். "அது ஆத்மாவை ஸ்வயம் செய்தது." எனத் தனது ஆத்மாவிற்கு ஜகத் ரூபமாகக் காரணத் தன்மை கேட்கப்படுதலின். "பகவந் எதனை அறியில் இவ்வெல்லாம் அறிந்ததாம், எதனால் கேட்கப்படாததும் கேட்கப்பட்டதாகின்றது. அரே! (மைத்ரேயி!) ஆத்மாவினை அறியில் இவ்வெல்லாம் அறிந்ததாம்." என்பன வாதி சுருதியால், ஏக விஞ்ஞாநத்தினால் ஸர்வ விஞ்ஞாநத்தின் பிரதிஞ்ஞைக்குப் பிரகிருதி அதிஷ்டாதாக்களின் பேதத்தில், பிரகிருதி ஞாநத்தினால் அதிஷ்டாதாவின் ஞாந மின்மையின் விரோதப் பிரசங்கம் வருதலினாலும், சுருதியினாற் சித்திக்கப்பட்ட பிரகிருதியின் அதிஷ்டாத்ரு ரூப ஈசுவரனுக்குத் தடஸ்தத் தன்மை மாத்திரத்திற்கு லோகத்தில் பார்க்கப்பட்ட ஸாமாந்யத்தினைப் பிரஸாதிக்கும் அநுமாநத்தினால் சித்தியின்மையானும், அதுவே பிரகிருதியின் அதிஷ்டாதாவாம். சூத்ரக்காரரும் "பிரகிருதியும் பிரதிஞ்ஞை திருஷ்டாந்த அநுபரோதத்தால்" (1-4-23), "ஸாக்ஷாத்தும் இரண்டும் படிக்கப்படுதலின்" (1–4–25), "ஆத்ம கிருதிக்குப் பரிணாம மாகலின்" (1-4-26), "பதிக்குப் பொருத்த மின்மையின்" (2-2-37), என ஈசுவரனுக்குப் பிரகிருதியின் அதிஷ்டாத்ரு ரூபத் தன்மையும், நிமித்த மாத்திர ஈசுவரனுக்கு அபாவமும் கூறியிருக்கின்றனர். சூத்ரங்கட்குப் பொருள் இதுவாம்:— பிரகிருதி— உபாதாநம், சகாரத்தினால் அதிஷ்டாதா ஈசுவரன். இங்ஙனமாயின் பிரதிஞ்ஞை திருஷ்டாந்தங்களின் அநுபரோதத்தினால் ஏக விஞ்ஞாநத்தினால் ஸர்வ விஞ்ஞாநப் பிரதிஞ்ஞைக்கு, எங்ஙனம் "ஏ ஸௌம்ய! ஒரு மண் பிண்டத்தினால் ஸர்வமும் மண்மய மாக அறியப்பட்டதாகின்றது." எனப் பிரகிருதி



விஷயமான திருஷ்டாந்தத்திற்கும், அநுபரோதத்தால்— பொருந்துதலின் என, நேரே வாக்கானே "அநேகப் பிரஜைகளாவோம்" என, இரண்டும் படிக்கப்பட்டிருத்தலின், பிரகிருதித் தன்மையும், அதிஷ்டாத்ருத் தன்மையும் படிக்கப்பட்டிருத்தலின் (1) ஆத்மகிருதிக்கு ஆத்மாவினை ஸ்வயம் செய்தது என ஆத்மாவிற்கே ஜகதாகாரமான காரணத் தன்மை கேட்கப்படுதலின். (2) பூர்வஞ் சித்தித்ததற்குக் கர்த்ருத் தன்மையினால் செய்யப்படும் தன்மை எங்ஙனம் (எனின்,) ஆண்டுக் கூறப்படுகின்றது:— பரிணாமத்தால் என— பூர்வஞ் சித்தித்ததற்கும் விகார ரூபத்தால் தனது ஆத்மாவினை பரிணாமம் செய்யும் தன்மையால். (3) பதிக்கு-நிமித்த மாத்ர பூதமான ஈசுவரனுக்கு, பொருத்த மின்மையின் என, லோகத்தில் பார்க்கப்பட்ட ஸாமாந்யத்தினால் அநுமிக்கப்பட்டதற்கு லோகம் போன்றே இராக த்வேஷாதிகளின் அடைவினால் ஈசுவரத் தன்மை பொருந்தாமையின். (4) ஆதலாலும், ஈசுவரனால் அதிஷ்டிக்கப்பட்ட பிரதாநமும் காரண மன்று என்பது தாத்பர்யமாம்.

அற்றேல் ஸ்வப்ரயோஜந மின்றியே ஜகத் ஸிருஷ்டி முதலியவற்றில் பிரவிர்த்தித்த ஈசுவரனுக்கு உந்மத்தன் போன்று பிரேக்ஷாகாரித் தன்மை யின்மைப் பிரசங்கத்தினால், ஸ்வப்பிரயோஜந உத்தேசத்தினாலும் பிரவிர்த்திப்பவனுக்கு நித்திய திருப்தித் தன்மை வியாகாதத்தினாலும், ஈசுவரன் ஜகத்தைச் சிருஷ்டிப்பவன் அன்று எனச் சங்கித்துக் கூறுகின்றார். **यश्चानन्द इति** (யச் சாநந்த இதி)=எது ஆநந்தம். நிரந்தரம் விளங்கும் அவச்சிந்ந மின்றிய பரமாநந்த ஸ்வரூபம். "ஆநந்தம் பிரஹ்மம்", "விஞ்ஞாந மாநந்தம் பிரஹ்மம்", "அந்ய பூதங்கள் இந்த ஆநந்தத்தின் மாத்திரையை உபஜீவிக்கின்றன" என்பன வாதி சுருதிக்கு, ஆப்தகாமனாகிய ஈசுவ

ரனுக்கு அடையத்தக்க வஸ்து இன்மையின் நித்திய திருப்தத் தன்மைக்கு ஹாநி யின்றென்பது பொருளாம். லோகத்தில் பிரயோஜநத்தின் உத்தேச மின்றியும், மிருகம்(மான்) முதலியவற்றில் பிரவிர்த்திக்கும் பிரேக்ஷாகாரிக ளாகிய ஸார்வபௌமர் முதலியோருக்கு உன்மத்தத் தன்மை பார்க்கப்படாமையின், பிராணிகளின் கர்மாநுசாரத்தால் ஜகத் ஸிருஷ்டி முதலியவற்றில் பிரவிர்த்திக்கும் ஈசுவரனுக்கு ஸ்வபாவத் தன்மையால் ஸ்வபாவத்திலும் பர்யநுயோகம் (எதிர்த்துக் கேள்வி) இன்மையின், ஈசுவரன் உன்மத்த னன்று. வாதராயணரும், "அன்று, பிரயோஜந முடைமையின்." (2-1-32) என்னும் சூத்திரத்தினால், பிரவிர்த்திக்கும் லோகத்தில் பிரயோஜந முடைமையின், ஈசுவரனுக்கு அஃதின்மையின், சிருஷ்டிப்பவன் அன்று எனக் கடாவி, "லோகத்தவர்கள் போன்று லீலா கைவல்யம்" (2-1-33) என்பதாதியால், லோகத்தில் ராஜர் முதலியோர் போன்று ஈசுவரனுக்கும், லீலை—ஜகத் சிருஷ்டியாதி ரூபத்திற்கு, கைவல்யம்-பிரயோஜந மின்மை பொருந்துகின்றது என்று ஸமாதாநம் கூறியிருக்கின்றார். ஆகலான், ஈசுவரனே ஸிருஷ்டிப்பவன் என்பது கருத்தாம்.

அற்றேல், லோகத்தில் கடாதிப் பிரயோஜந ஞானத்தினையுடைய சரீராதிகளோடு கூடிய சிருஷ்டிப்பவர்களாகிய குலாலன் முதலியோருக்குப் பாஹ்யமாகிய மண் முதலியவற்றின் உபஸம்ஹார பூர்வகமே ஸிருஷ்டிப்பதில் பிரவிர்த்தி பார்க்கப்படுதலின். நிர்விகற்ப மாகிய பிரஹ்மத்திற்குச் சரீர மின்மையினானே அசமர்த்தமாய் சிருஷ்டியின் பிரயோஜந ஞாந மின்றி, தன்னின் அந்ய பதார்த்தங்களின்மையின், பாஹ்ய மாகிய ஸாதந மின்றிய அதற்குச் சிருஷ்டிக்குந் தன்மை யாங்ஙனம்



எனக் கடாவிக் களைகின்றார். **अनन्त गुण इति** (அநந்த குண இதி) = அநந்த குணம் என. அநந்தம்-எண்ணிக்கை யற்ற, ஸர்வ சக்தி ஸர்வஜ்ஞத் தன்மை முதலிய குணங்களாகிய தர்மங்கள் எதற்கு அது அநந்த குணமாம். ஆண்டு, ஹேதுவினைப் புகல்கின்றார். **गुण धामा इति** (குண தாமா இதி) சுத்த ஸத்வ ரூப மாயை யாகிய குண, தாமம்-கிரஹம்-உபாதி, எதற்கு அது குண தாமம் என்பது பொருளாம். பாஹ்ய ஸாதந மின்றி யிருப்பினும் க்ஷீரம் முதலியவற்றிற்குத் தயிர் முதலிய காரணத் தன்மை பார்க்கப்படுதலின். தேவர்கட்கும், யோக தநிகர்கட்கும், பாஹ்ய ஸாதந மின்றி புராணாதிகளில் யோக மஹிமையினால் ஸிருஷ்டி முதலியன பார்க்கப்படுதலின். நமக்கும் வேறு சரீரம் இன்றியே சரீரத்தின் அதிஷ்டாத்ருத் தன்மை பார்க்கப்படுதலின். "இவனது பரா சக்தி நாநாவிதமாகக் கேட்கப்படுகின்றது.", "மாயையைப் பிரகிருதி யென மதிக்க.", "மாயியினை மஹேசன் என. (மதிக்க.)" என்பன வாதிகளில், ஈசுவரனது ஸர்வ ஸாதந ஸாமர்த்தியத்தினையுடைய மாயா சக்தி கேட்கப்படுதலின். ஸூத்ரக்காரரால், "உபஸம்ஹாரம் பார்க்கப் படுதலின். அன்றெனின், அற்றன்று, க்ஷீரம் போன்று." (2-1-24), "தேவர் முதலியோர் போன்றும் லோகத்தில்." (2—1—25), "ஸர்வ தர்மமும் பொருந்துதலின்." (2-1-37), என்பன வாதி பிரஹ்ம சூத்ரங்களினால் குலாலன் முதலியோர்க்கு மண் முதலிய உபஸம்ஹாரம் பார்க்கப்படுதலின். ஈசுவரனுக்கும் பாஹ்ய ஸாதநங்களின் உபஸம்ஹார மின்மையின் (சேர்த்தலின்மையின்.) சிருஷ்டிப்பவ னன்று என வினவி, பாஹ்ய ஸாதந அபாவத்திலும் க்ஷீரத்திற்குத் தயிரின் காரணத் தன்மை போன்று, லோகத்தி

னும், தேவாதி போன்றும், பிரபஞ்ச காரணத் தன்மை பொருந்துதலினாலும், மாயையின் வசத்தாலேயே எல்லோருக்கும் சர்வ கர்த்ருத் தன்மை முதலிய தர்மங்கள் பொருந்துதலானும் ஒரு தோஷமு மின்று எனச் சமாதாநம் கூறியிருத்தலினாலும், அசரீரனாகிய அப் பரமேசுவரனுக்கு மாயா குண வசத்தினாலேயே எல்லாம் பொருந்துகின்றன என்பது தாத்பர்யமாம்.

அற்றேலாயின், பிரசித்தமான மாயாவி போன்று ஏன் கிரஹிப்பதில்லையெனக் கடாவிக் கூறுகின்றார். **यश्चाव्यक्त इति** (யச் சாவ்யக்த இதி) = எது அவ்யக்தம், இந்திரியத்தினால் கிரஹிக்கப்படாதது என்பது பொருளாம். "அசிந்தியம், அவ்யக்தம்." என்பதாதி சுருதியினால், "அசப்தம் அஸ்பரிசம் அரூபம் அவ்யயம் அரசம் நித்யம் கந்த மின்மையை யுடையது யாது." என்பதாதி சுருதியாலும். ரூபம் முதலியன இன்மையின் இந்திரியத்தினால் கிரஹிக்கப்படுவ தின்று. பின்னையோ, அது சுருதி ஒன்றானே அறியப்படுவ தென்பது தாத்பரியமாம்.

அற்றேல், பிரஹ்மத்திற்கு ஸகல ஜகத் ரூபத்தன்மையில் போக்த்ரு போக்ய விபாகம் இன்றியதாம். எல்லாவற்றிற்கும் பிரஹ்ம காரணத்தை யுடையதாந் தன்மை ஸமாந மாகலின் என ஆசங்கித்துக் கூறுகின்றார். **व्यस्त समस्त इति** (வ்யஸ்த ஸமஸ்த இதி) = பிந்நமாயும், எல்லாமாயும், போக்த்ரு, போக்ய ரூபமாகப் பிந்நமாய், எது ஸமஸ்தம்-பிரபஞ்சம், அதன் ரூபம் என்பது பொருளாம். லோகத்தில் எங்ஙனம் ஒரு ஸமுத்ரம் முதலியவற்றிற்கே நுரை அலை குமிழி ரூபத்தினால் பிந்நமான அநேக காரிய காரணத் தன்மை பார்க்கப்படுவது போன்று, ஒரு பிரஹ்மத்திற்கும் பிந்நமான அநேக காரிய



காரணத் தன்மை பொருந்துகின்றது. ஈண்டுச் சூத்ரம், "போக்த்ருத் தன்மைப் பிராப்தியான் பகுப் பற்ற தெனின், லோகம் போன்று ஆகின்றது." (பிரஹ்ம சூத்ரம் 2—1—13) இதன் பொருள் இதுவாம்:—போக்த்ரு, போக்யத்தன்மைப் பிராப்தியான்-போக்யத்திற்கும் போக்த்ருத் தன்மைப் பிராப்தியான் விபாகம் இன்றியதாம் எனின், அற் றன்று. லோகம் போன்று ஸமுத்ரம் போன்று, விபாகம் பொருந்துதலின். ஆதலானும், பிரஹ்மமே ஸர்வத்திற்கும் காரணமாம் என்பது தாத்பர்யமாம்.

பிரஹ்மத்திற்கே ஸத்ய அந்ருத போக்கிய ரூபத்தினால் ஸ்திதியினைக் கூறுகின்றார். **सदसत्य इति** (ஸதஸத்ய இதி) = ஸத்தியம், அஸத்தியம், "ஸத்யமும் அந்ருதமும் ஸத்தியமாகின்றது." என்னும் சுருதியினால். ஒரு ஸத்திய பதம் பிரஹ்ம பரமாம். மற்றொரு ஸத்ய பதம் வியாவகாரிக ஸத்தியமாகிய ஆகாசாதி பரமாம் அந்ருதம் சுக்தி ரஜதாதியாம். (3)

அற்றேல், காரியம் தனது நியூந பரிமாண திரவ்யத்தினால் ஆரம்பிக்கப்படுகின்றது, காரியத் தன்மையால்; படம் முதலியன போன்று. என்னும் அநுமாநத்தினால் ஸர்வ காரியத்திற்கும் தனது நியூந பரிமாண திரவ்யத்தினால் ஆரம்பிக்கப்படுந் தன்மை நியமமாகலின் பரம்பரையாகப் பரமாணுக்களே ஜகத்திற்கு உபாதாநமாம். பிரஹ்ம மன்று, அது விபுவாகலின். என ஆசங்கித்துக் கூறுகின்றார்.

यस्मादन्यन्नास्त्यपि नैवं परमार्थं
दृश्यादन्यो निर्विषयज्ञानमयत्वात् ।
ज्ञातृज्ञानज्ञेयविहीनोऽपि सदा ज्ञस्तं
संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥ ४ ॥

(பதப் பொருள்.) १ **यस्मात्**—சச்சிதாநந்த நுப விஷ்ணு வினின்றும், २ **अन्यत्**—பரமாணு முதலியன, ३ **नास्ति**—இலவாம், ४ **एवं**— ५ **अपि**—ஆகாசாதி ஜகத் நுபமாக விருத்தலும், ६ **परमार्थं**—வாஸ்தவம், ७ **न**—அன்று, ८ **निर्विषय-ज्ञान-मयत्वात्**— விஷய-அபேக்ஷ-யின்றிய ஞாந மயமாகலின், ९ **दृश्यात्**—திருசியத்தினின்றும், १० **अन्यः**-(விஷ்ணு) வேறும், ११ **ज्ञातृ-ज्ञान-ज्ञेय-विहीनः**- १२ **अपि**—ஞாதா-ஞாநம்-ஞேயம்-இன்றியவனுயினும், १३ **सदा**—எப்பொழுதும், १४ **ज्ञः**-ஞாதா, १५ **तं**-அந்த, १६ **संसार-ध्वांत-विनाशं**-சம்சாரமாகிய-இருளை-நாசஞ்செய்கின்ற, १७ **हरिं**-ஹரியை, १८ **ईडे**—நமஸ்கரிக்கின்றேன், என்ற வாறு.

**यस्मात्** (யஸ்மாத்)=எதனுல், சச்சிதாநந்த ஸ்வரூப விஷ்ணுவினின்றும் அந்யமாகிய பரமாணுவாதிகள் இன்று. "ஏக மேவாத்வாதீயம்", "எதனின்றும் பரம் அபரம் கிஞ்சித்து மின்று." என்பன வாதி சுருதியால், என்பது பொருளாம். அநுமாநத்திற்கு நீண்டு விரிந்து க்ஷேப மிரண்டுடன் ஆரம்பிக்கப்பட்ட ரஜ்ஜுவில் வியபிசார மிருத்தலினுலும், ஆகமத்தால் பாதிக்கப்படுதலினுலும் என்பது பொருளாம். "பிரஹ்மம் பரமார்த்தமாக ஜகத் ரூபத்தால் பரிணமிக்கின்றது" என்னும் பாஸ்கர மதத்தினை ஆசங்கித்து நிராகரிக்கின்றுர். **अपि नैवं परमार्थं इति** (அபி நைவம் பர



மார்த்தம் இதி)=இங்ஙனம் பரமார்த்த மன்று. இங்ஙனம்—ஆகாசாதி ஜக தாகார மாக இருத்தல், பரமார்த்தம் அன்று—வாஸ்தவ மன்று என்பது பொருளாம். "நிஷ்கலம், நிஷ்கிரியம்" என்ப தாதி (சுவேதாசுவதர உபநிஷத் 6—19.) சுருதியால், நிரவயவமான பிரஹ்மத்திற்கு அம்சத்தினுல் ஜகத்ரூப பரிணுமம் பொருந்தாமையின். ஸர்வ ரூபமாகப் பரிணமிக்கில் பிரஹ்மத்தின் அபாவப் பிரஸங்கத்தினுல், மீண்டும் பிரளய காலத்தில் சச்சிதாநந்த ஆகாரமாகப் பரிணமிக்கிலும் பிரஹ்மத்திற்கு அநித்யத் தன்மைப் பிரசங்கத்தினுலும், ஸமுத்ராதிகட்கும் ஸாவயவத் தன்மையினுல் அம்சத்தினுல் நுரை முதலியன பரிணமிப்பிலும் ஸ்திதி பொருந்துதலானும், பிரஹ்மம் ஜகதாகாரமாக இருத்தல் வாஸ்தவ மன்று. (பிரஹ்ம) சூத்ரக்காரரும், "எல்லா அம்சத்தினுலும் பிராப்தி நிரவயவத்வ சப்த விரோதமாம்" (2—1—26) எனப் பரிணும வாதம் தூஷித்திருக்கின்றனர். பொருள் வெளிப்படையாம். "அதன் அநந்யத் தன்மை ஆரம்பண சப்தாதிகளால்" என (2–1–14) விவர்த்த வாதமும் அங்கிகரிக்கப்பட்டிருக்கின்றது. அதன், அநந்யத் தன்மை—பரமார்த்தமாகப் பிரபஞ்ச, அதன் வ்யதிரேகமாக யின்றேயாம். ஆரம்பண சப்தாதிகளால், "விகாரமாகிய நாமதேயம் வாக்கு மாத்திரமாம்." என்ப தாதி (சாந்தோக்யோபநிஷத் 6—1—4.) சுருதிகளால் என்பது அதன் பொருளாம். அதனுல், ஜகத்திற்கு மித்தியாத் தன்மை யிருத்தலின், ஜகத் காரணத் தன்மை பிரஹ்மத்திற்கு வாஸ்தவ மன்றென்பது தாத்பரியமாம்.

அற்றேல், எல்லாராலும் பார்க்கப்படும் ஜகத்திற்கு மித்தியாத் தன்மை யாங்ஙனம்? சுத்தி ரூப்யம் முதலியன

போன்று திருசியத் தன்மையானே ஜகத்திற்கு மித்தியாத் தன்மை யெனின், பிரஹ்மத்திற்கும் திருசியத் தன்மையால் மித்யாத் தன்மை வரும் எனச் சங்கித்துக் கூறுகின்றார். **दृश्यादन्य इति** (திருச்யாதந்ய இதி)=திருசியத்தினின்றும் அந்யம். திருசியத்தினின்றும்—சைதந்ய விஷயத்தினின்றும், அந்யம் விஷ்ணு வென்பது எச்சமாம். "அதிருஷ்டா பார்க்கின்றான்" என்ப தாதி (பிரஹதாரண்யகோபநிஷத் 3-7-23.) சுருதியால் என்பது பொருளாம். திருசியத்தினின்றும் அந்யத் தன்மையில் ஹேதுவினைக் கூறுகின்றார். **निर्विषयज्ञानमयत्वात् इति** (நிர்விஷய ஞாநமயத்வாத் இதி)=நிர்விஷய ஞாந மயமாகவின். விஷயங்களை யபேக்ஷிக்காத விஞ்ஞாந ஸ்வபாவத் தன்மையால் என்பது பொருளாம். "விஞ்ஞாந கநன்" என்ப தாதி சுருதியால். கூடஸ்த ஞாந மாத்திர ஸ்வரூபத்திற்கு ஸர்வஞ்ஞத் தன்மை யாங்ஙனம் எனச் சங்கித்துக் கூறுகின்றார். **ज्ञातृज्ञान इत्यादिना** (ஞாத்ரு ஞாந இத்யாதிநா)=ஞாத்ரு ஞாநம் என்பதாதியால். **ज्ञातृज्ञानज्ञेयविहीनोपि** (ஞாத்ரு ஞாந ஞேய விஹீநோபி)=ஞாத்ரு ஞாந ஞேய மின்றி யிருப்பினும். ஞாதா—ஞாநாசிரயமாம், ஞாநம்—அவித்தை, அல்லது, அந்தக் கரணங்களின் பரிணாம விசேஷமாம். ஞேயம்—ஆகாசாதி வஸ்துக்களாம். அஃதின்றி யிருப்பினும் அவித்தியாதிகளோடுகூடி யிருந்து, **सदा** (ஸதா)—எப்பொழுதும், **ज्ञः** (ஞ:)=ஞாதா, "அது வேத்யத்தினை அறிகின்றது. அதனை அறிவ தின்று" என்ப தாதி (சுவேதாசுவதர உபநிஷத் 4-19.) சுருதியால் என்பது பொருளாம். ஆகலின், ஜகத் மித்தையாகலின், பிரஹ்மத்திற்கு ஜகத் காரணத் தன்மை வாஸ்தவ மன்றாம். தடஸ்தம் அதன் உபலக்ஷணமாம், விசேஷண மன்று. என்பது சித்தமாம். (4)



இங்ஙனம், கேவல தார்க்கிகர்களால் கொள்ளப்படாத சுருதி ஸம்பந்த ஜகத் காரண விஷ்ணுவினை ஸ்துதித்து, இப்பொழுது பக்தி முதலிய ஸாதநங்களை யடைந்து குரு சேவையில் தத்பரர்களானவர்களானே கொள்ளப்படும் தத்வத்தினை ஸ்துதித்தற்கு ஆரம்பிக்கின்றார்.

आचार्येभ्यो लब्धसुसूक्ष्माच्युततत्त्वा
वैराग्येणाभ्यासबलाच्चैव दृढिम्ना ।
भक्त्यैकाग्र्यध्यानपरा यं विदुरीशं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥५॥

(பதப் பொருள்.) १. **आचार्येभ्यः**—குருவினிடத்தினின்றும், २. **लब्ध-सुसूक्ष्म-अच्युत-तत्त्वाः**-முதலில் அறிந்த—சூக்ஷ்ம—நித்ய—(விஷ்ணுவின்) தத்துவர்கள், ३. **वैराग्येण**—விஷய தோஷ விவேகத்தினால், ४. **अभ्यास-बलात्-च एव**-(உண்டான) சிரவண—மநநத்தினால், ५. **दृढिम्ना**—திடமான, ६. **भक्त्या**—("நான் பிரஹ்மமா யிருக்கின்றேன்" என்னும் ஏகத் தன்மை ரூப) பஜநத்தினால், ७. **एक-अग्र-ध्यान—पराः**—பிரத்தியக் கபிந்ந பிரஹ்ம ஐக்கிய விஷயத் தியாந நிஷ்டர்களாய், ८. **यं**—எந்த, ९. **ईशं**—ஈசுவரனை, १०. **विदुः**-சாக்ஷாத்தாக அநுபவிக்கின்றார்களோ, ११. **तं**-அந்த, १२. **संसार—ध्वांत—विनाशं**—சம்சார—இருளினை-நாசஞ் செய்யும், १३. **हरिं**—ஹரியினை, १४. **ईडे**—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

**यं ईशं विदुः** (யம் ஈசம் விது:)=எந்த ஈசுவரனை ஸாக்ஷாத் அநுபவிக்கப்படுகின்றதோ, **तं इति संबन्धः** (தம் இதி சம்பந்த:)=அவனை என்பது சம்பந்தமாம். அவனை எப்படிப்பட்ட அதிகாரிகள் அறிகின்றனர் (எனின்) ஆண்டுக் கூறுகின்றார். **आचार्येभ्यः इति** (ஆசார்யேப்ய: இதி)=ஆசாரியரிடத்தினின்றும். ஸர்வகர்ம ஸந்யாஸத்தினால் ஸமித் முதலிய உபகார பூர்வகம் விதிவத் தாமாக அடைந்த சாந்தியையுடைய சிஷ்யர்களுக்கு, கையி லுள்ள நெல்லிக் கனி போன்று, நன்கு பிரத்யக்ஷம் செய்த பிரஹ்ம தத்வத்தினை யுடையவராய், கேவலம் சிஷ்ய கிருபையினாலே அதனைப் போதித்தலில் பிரவிர்த்திக்கும் குருவினிடத்தினின்றும். **लब्धं** (லப்தம்) அடைந்த—முன்னர் அறிந்த, **सुसूक्ष्मं** (சுசூக்ஷ்மம்) ஸுஸூக்ஷ்மத்தை, **अच्युतं** (அச்யுதம்)—சுத மின்றிய கூடஸ்த நித்ய ஸ்ரீவிஷ்ணுவின், **तत्त्वं** (தத்வம்) தத்வத்தை, எவர்கள் (அடைந்திருக்கின்றனர்) அவர்கள், **लब्धसुसूक्ष्माच्युततत्त्वाः** (லப்த சுசூக்ஷ்ம அச்யுத தத்வா:)=அடையப்பட்ட ஸுஸூக்ஷ்மமான அச்யுத தத்வர்கள். "ஆசாரியனை யுடைய புருஷன் அறிகின்றான்" (சாந்தோக்யோபநிஷத் 6, 14, 2.), "அதனை அறிதற் பொருட்டு அவன் ஸமித்தைக் கையிலுடையவனாய்ச் சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட குருவையே அடைக.", "இம்மதி தர்க்கத்தால் நிவிர்த்திக்க ஒவ்வாது அந்யரால் கூறப்பட்டது அதனாலேயே நல்ல ஞானத்தின்பொருட்டு ஏ பிரேஷ்ட!" என்ப தாதி (கடோபநிஷத் 1, 2, 9) சுருதியால். ஏ! பிரேஷ்ட! =நசிகேதா! இந்த—பிரஹ்ம விஷயமான புத்தி, தர்க்கத்தால், மூலப் பிரமாண மின்றிய சுஷ்க தர்க்கத்தினால், தள்ளத்தக்க தன்று=அடைவிக்கத் தக்க தன்று. பின்னையோ, அந்யரால்= ஸர்வஞ்ஞனாகிய குருவினால், கூறப்பட்டது=யுக்தி, திருஷ்



டாந்த பூர்வகம் உபதேசிப்பவர், நல்ல ஞானத்தின் பொருட்டு =நன்கு பிரஹ்ம விஷய அவித்யா நிவிர்த்தியின் பொருட்டு ஆகின்றது. என்பது கட சுருதியின் பொருளாம். "அதனை பிரணிபாத (நமஸ்கார)த்தினால் அறி." என்ப தாதி (பகவற் கீதை 4—33) ஸ்மிருதியினாலும். முதல் ஞானத்தினால் எல்லா அஸம்பாவனையின் நிவிர்த்தி பொருந்தாமைப் பக்ஷத்தில் வேறு சாதநத்தினையுங் கூறுகின்றார். **वैराग्येण इत्यादिना** (வைராக்யேண இத்யாதிநா)=வைராக்யத்தினால். **वैराग्येण** (வைராக்யேண) விஷய தோஷ விவேகத்தினால் உண்டானதால். "பிரஹ்ம லோகத்தினைத் திரணஞ் செய்தல், வைராக்யத்தின் அவதி யெனச் சம்மதமாம்." எனக் கூறிய பரம காஷ்டையினை யடைந்த விஷய விக்ஷேப மின்றியவனால் செய்யப்பட்ட, **अभ्यासः** (அப்யாச:) நிரந்தர அப்யாஸ—சிரவண ஆவிர்த்தியினாலும், உண்டாகும், **बलं** (பலம்) மநநத்தினாலும், "பால்யத்தில் இச்சிப்ப தில்லை" என்னுமிடத்து அங்ஙனமே வியாக்யாநம் செய்யப்படுதலின். அவ் விரண்டுகளாலும். **दृढिम्ना** (த்ருடிம்நா)=திடமான, **भक्त्या** (பக்த்யா)=பக்தியால்—"நான் பிரஹ்மமா யிருக்கின்றேன்" என்னும் ஏகத் தன்மையாகிய பஜநத்தினால். **एकाग्रध्यानपराः** (ஏகாக்ரத்யாநபரா:)=ஏகாக்ர தியாநபரர்கள், பிரத்ய கபிந்ந பிரஹ்ம ஐக்கிய விஷய தியாந நிஷ்டர்களா யிருப்பவர்கள் எதனை யறிகின்றார்கள் என்பது பொருளாம். "இவ் வாத்மா வசநத்தினால் அடையத் தக்க தன்று. மேதையினா லன்று. அநேக முறை கேட்டலினா லன்று. எவனை இது பிரகாசிக்கின்றது அவனால் அடையத் தக்கதாம். அவனுக்கு இவ் வாத்மா தன் தநுவைப் பிரகாசிக்கின்றது. இவ் வாத்மா பல மின்றியவனால் அடையத் தக்க தன்று." (முண்டகோபநிஷத் 3-2-3.), "அதனால்

அந்த நிஷ்கலத்தைத் தியானிப்பவன் அறிகின்றான்.” என்னும் முண்டக சுருதியினால். வசநம்—அத்யாபநமாம். மேதை—கிரந்தத்தின் அர்த்தத்தினைத் தாரணை செய்யும் சாமர்த்தியமாம். அநேகமுறை என்பதனால் அநாத்ம விஷயம் தாத்பர்யமாம். இதனால் அடையத் தக்க தன்று. பின்னையோ, இந்த—ஸாதகன், எந்தப் பரமாத்மாவினையே சிரவணாதிகளால் நிரந்தரம் பிரார்த்திக்கின்றான், அவனால் இந்த ஆத்மா அடையத் தக்கதாம். அவனுக்கு—இங்ஙனம் பிரார்த்திப்பவனுக்கு, ஆத்மா—தனது, தநுவை—ஸச்சிதாநந்த ஆத்ம ரூபத்தைப் பிரகாசிக்கின்றதென்பது பொருளாம். பல ஹீநனால்—அதன் விஷயமான மநநஞ் செய்யாதவனால் என்பது பொருளாம். நிஷ்கலம்—நிரவயவம், பரமாநந்தம், நிரந்தரம், தியானிப்பவன்—ஞாந சந்ததியினால் விஷயம் செய்யும் புருஷன், அதனால்—தியாநத்தினால், அதனை அறிகின்றான்—பிரதிபந்தமின்றி ஸாக்ஷாத்கரிக்கின்றான் என்பது பொருளாம். அது பகவானால், “ஏ கௌந்தேய! அப்யாஸத்தினாலும், வைராக்யத்தினாலும் கிரகிக்கின்றனர்” * (பகவற் கீதை 6–35.), “பக்தியினால் என்னை எவ்வளவு எந்த ரூபமாய் இருக்கின்றேன் என்று தத்வத்தினால் அறிகின்றனர்.” (பகவற் கீதை 18–55.) என்று கூறப்பட்டிருக்கின்றது, (5)

“ஏகாக்ர த்யாநபரர்கள் அறிகின்றனர்” என்று கூறப்பட்டது. “எந்தக் கிரமத்தினாலும், எந்தப் பிர

* பகவற் கீதை தமிழ் “உய்வகை யோகமியாவு முயற்சியினாலுமொவ்வா, வைவகைப் புலன்செயின்ப மனைத்தையும் வெறுத்தலானும்.” [6—25.], “ஈங்கிவனும், பந்தமறவிட் டெனையறியும் பத்திபெறுமப் பத்தியினால், சிந்தையிடையே யெனைத்தெளியும்” [18—46.]



காரத்தினாலும் அவர்கள் அறிகின்றனர்” என்னும் ஆகாங்க்ஷையில் கூறுகின்றார்.

प्राणानायम्योमिति चित्तं हृदि रुध्वा
नान्यत्स्मृत्वा तत्पुनरत्रैव विलाप्य ।
क्षीणे चित्ते भाद्दशिरस्मीति विदुर्यं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥ ६ ॥

(பதப் பொருள்.) १. **प्राणान्**—வாக்காதி இந்திரியங்களை, २. **आयंय**—உபசம்ஹாரஞ் செய்து, ३. **ओं**—ஓம், ४. **इति**-என்று (உச்சரித்து), ५. **चित्तं**—அந்தக் கரணத்தினை, ६. **हृदि**—இருதய ஆகாசப் பிரஹ்மத்தில், ७. **रुध्वा**—நிரோதஞ் செய்து, ८. **अन्यत्**—ரூப ரசாதிகளை, ९. **न** १०. **स्मृत्वा**-(தோஷ தரிசநத்தினால்) விட்டு, ११. **पुनः**—மீண்டும், १२. **तत्**—அந்தச் சித்தத்தினை, १३. **अत्र**, १४. **एव**—பிரஹ்மாத்மாவினிடத்தே, १५. **विलाप्य**—அடைவிக்குக, १६. **चित्ते**—சித்தம், १७. **क्षीणे**—உபரதியினை அடையில், १८. **भा**—ஸ்வப்பிரகாச, १९. **द्दशिः**—சித்ரூப பரமாத்மாவாக, २०. **अस्मि**—இருக்கின்றேன், २१. **इति**-என்று, २२. **यं**-எதை, २३. **विदुः**—அறிகின்றனரோ, २४. **तं**—அந்த, २५. **संसार-ध्वांत-विनाशं**—சம்சார—இருளை—நாசஞ் செய்யும், २६. **हरिं**—ஹரியினை, २७. **ईडे**—நமஸ்க்கரிக்கின்றேன், என்றவாறு.

**प्राणान्** (பிராணாந்)=பிராணன்களை,—வாக்காதி இந்திரியங்களை, **आयंय** (ஆயம்ய)=உபஸம்ஹாரம் செய்து, பின்,

**ॐ इति** (ஓம் இதி)=ஓம் என, உச்சரித்து, **चित्तं** (சித்தம்)= அந்தக் கரணம், **हृदि** (ஹ்ருதி)=ஹிருதயாகாச மாகிய பிரஹ்மத்தில், **रुध्वा** (ருத்வா)=நிரோதித்து, "ஓம் என ஆத்மாவினைப் பொருத்துக.", "ஓம் என இங்ஙனம் ஆத்மாவினைத் தியாநிக்க" என்னும் (முண்டகோபநிஷத் 2-2-6.) சுருதியினால், ஆத்மாவினை—சித்தத்தை, பொருத்துக—நிரோதிக்க என்பது பொருளாம். "ஓம் என ஏகாக்ஷர மாகிய பிரஹ்மத்தை வியவகரித்து என்னை ஸ்மரித்து † (பகவற் கீதை 8—13.) என்பதாதி ஸ்மிருதியானும். அல்லது, ஓம் எனக் கூறப்படும் ஓங்கார வாச்சிய மாகிய ஹிருதயாகாசத்தில், சித்தத்தினை நிறுத்தி, அந்யமாகிய ரூப ரஸாதிகளை ஸ்மரிக்காது, அடைந்த விஷய ஸ்மிருதியினையும் விஷய தோஷ தரிசநத்தினால் விட்டு, § "ஸங்கற்பத்தினால் உண்டான ஸர்வ காமங்களையும் சேஷமின்றி விட்டு, மநதினாலே இந்திரியக் கூட்டங்களை நன்கு நிரோதித்து" (6—24.) * "தைரியமாகக் கிரஹிக்கப்பட்ட புத்தியால் மெள்ள மெள்ள உபராமத்தினை யடைக. ஆத்மாவின்கண் உள்ளதாக மநதைச் செய்து ஒன்றையும் சிந்திக்கற்க.", [6-25.) ‡ எதனினின்றும், எதனினின்றும் அஸ்திர

† பகவற் கீதை தமிழ் "ஓதலினி யற்கையினொ டோமெனுமெழுத்தை, வாய்தனிலு ரைக்கமந மானதுத னித்தே, மேதகுமெனைத்தெளிய வாவிதனை விட்டோர், வீதலினி யற்கையெனை யேயடைவர் மிக்கோய்." [8—12.]

§ "போக மாய்த்துப்பு லன்களைப் போக்கறுத், தாக மாமெய்ய றிவிடை யேயந்த" [6—18.]

* "வேக மாயம நத்தினை மெல்லவே, யேக மாகவி ருத்திக லாதுநீ" (6—18) ‡ "வாங்கி யைம்பொறி நின்றம நத்தினை, நீங்கி டாவகை நின்னுளி ருத்தியே, தீங்கி யாவையுஞ் சிந்தைசெயாமையாம், பாங்கி யாதது வேபயில் வாயரோ" (6—26.)



மாய்ச் சஞ்சலமான மநது செல்லுகின்றதோ, அதனினின்றும், அதனினின்றும் நிவிர்த்தித்து இந்த ஆத்மாவின்கண்ணே வசம் செய்விக்க." (62-6.) என்னும் ஸ்மிருதியினால். **पुनः**(புந:) =மீண்டும். **तत्** (தத்)=அந்த, "பிரஹ்மமா யிருக்கின்றேன்" என்னும் அப்பியாஸத்தினால் வியக்ரமான சித்தத்தை, **अत्रैव** (அத்ரைவ)=ஈண்டே—பிரஹ்மாத்மாவின்கண்ணே, **विलाप्य** (விலாப்ய)=லயத்தினை யடைவித்து, **चित्ते क्षीणे** (சித்தே க்ஷீணே)=சித்தம் நியாந வியாபாரத்தினால் உபரதி யடையுங்கால், **भादृशिः अस्मि इति** (பாதிருசி: அஸ்மி இதி)= ஸ்வப்ரகாச சித்ரூப பரமாத்மாவா யிருக்கின்றேன் என, எந்த விஷ்ணுவை அறிகின்றான் என்பது பொருளாம். அது பாரதீ தீர்த்தர்களால், "நிர்க்குணோபாஸனை பக்குவமான ஸமாதி யாகின்றது. மெதுவாய் அதனினின்றும் நிரோதம் என்னும் பெயரினை உடைய சமாதி அநாயாசத்தினால் அடையப்படுகின்றது" (பஞ்ச தசி 9—126.) "நிரோதம் லபிக்கில் புருஷனது உள்ளில் அசங்க வஸ்து எஞ்சுகின்றது. மீண்டு மீண்டும் அப்யாசிக்கில் இந்த வாக்கியத்தினால் தத்வ ஞாநம் உண்டாகின்றது" $ (பஞ்ச தசி 9-127.) எனக் கூறப்பட்டிருக்கின்றது. "விவேகியானவன் வாக்கை மநதினில் லயிப்பிக்க, அதை ஞாநாத்மாவில் லயிப்பிக்க, அதை மஹாத்மாவில் லயிப்பிக்க, அதை சாந்தாத்மாவில் லயிப்பிக்க" என்னும் (கடோபநிஷத் 1—2—13.) சுருதியாம். இதன் பொருள் இதுவாம்:— விவேகியாகிய முமுக்ஷு புருஷன்,

$ பஞ்ச தசி. "சீர்த்த பாபா வனைமுதிர்ச்சி செறியுஞ் சமாதி யாமிதனாற், கூர்த்த நிரோத சமாதிமெலக் கூடும் வருத்த மறத்தானே." (9—56.) உரைசெய் நிரோதம் பெறிற்புருடர்க் குள்ளே யசங்க்ப் பொருண்மீரும், வரையி லதைமேன் மேற்கருதின் வாய்மை யுரம்வாக் கியத்துண்டாம்." (9—57.)

வாக்கை மநதில் நிரோதஞ் செய்க. வாக்கு ஸர்வேந்திரியங் கட்கும் உபலக்ஷணமாம். முதலில் வாக்கிந்திரிய வியாபாரத் தினை விட்டு மநோமாத்திர வியாபாரத்தினுல் இருக்குக என்பது பொருளாம். அதை—மநதை, ஞாநாத்மாவில்—தேகேந்திரிய வியாபார ஸாக்ஷியாகிய சித்பிரகாச ஆத்மாவில், லயிப்பிக்க—மநம் முதலியவற்றில் ஆத்ம புத்தியினை விட்டு அதன் ஸாக்ஷி சைதந்யத்தின்கண்ணே ஆத்ம புத்தியினைச் செய்க என்பது பொருளாம். அது, ஆசாரியரால், "ஸத்தியா நந்த ஸ்வரூப ஞாந விக்ரஹமாகிய புத்தி ஸாக்ஷியை நித்தியம் ஆத்மாவாக தேஹாதியி லுள்ள புத்தியை விட்டுச் சிந்திக்க." எனக் கூறப்பட்டிருக்கின்றது. ஞாநம்—மநம் முதலியவற் றிற்குச் சாக்ஷி சைதந்யத்தை, மஹா—தேச கால பரிச் சேத மின்றிய, ஆத்மாவில்=பிரஹ்மத்தில், லயிப்பிக்க= ஒன்று செய்க என்பது பொருளாம். அந்த—மஹாத்மாவை, ஸாக்ஷித் தன்மை, பிரஹ்மத் தன்மை விகல்ப நிவிர்த்தி பூர்வ கம், சாந்த—ஸர்வ வியாபாரமு மின்றிய, "தர்மத்தினின்றும் அந்யவிடத்து, அதர்மத்தினின்றும் அந்யவிடத்து", என்ப தாதி (கடோபநிஷத் 1-2-14.) சுருதியினுல் விசேஷிக்கப்பட்ட ஆத்மாவினிடத்தில் லயிப்பிக்க—"நான் பிரஹ்மமா யிருக்கின் றேன்" என்னும் விருத்தியின் தோற்றத்தினை விட்டு ஸ்வயம் பிரகாசமாகிய பரமாநந்த பரிபூரண பிரஹ்ம ரூபமாக இருக்குக என்பது பொருளாம். அது, பராசரரைக் குறித்து, வசிஷ்ட ரால், "ஏ பிரஹ்மந்! தர்சநாதரிசநங்களை விட்டு ஸ்வயம் கேவல ரூபத்தினுல் எவன் இருக்கின்றுன் அவன் ஸ்வயம் பிரஹ்மமே பிரஹ்மவித் தன்றும்." எனக் கூறப்பட்டிருக்கின்றது. 6.

"தீரர்களாகிய பிராஹ்மணர்கள் அதனை யறிந்து பிரஜ்ஞை செய்கின்றனர்." (பிருஹதாரண்யகோபநிஷத் 4-4-21) அதனை—பரமாத்மாவினை, அறிந்து—விசேஷமாக அறிந்து, தீரர்கள்—புத்திமாந், அல்லது, விஷயத்தால் கவரப்பட்ட சித்த மின்றியவர்கள், பிரஜ்ஞையை—ஞாந சந்ததியைச் செய்கின்றனர். "என்னை எவர்கள் அநந்ய மாகச் சிந்தித்து உபாஸிக்கின்றனரோ, அந்த நித்திய அபியுக்தர்களின் யோக க்ஷேமத்தை நான் வஹிக்கின் றேன்." (பகவற் கீதை ¶ 9—22.), "சிலர்கள் தியாநத் தினுல் ஆத்மாவில் பார்க்கின்றனர். ஆத்மாவை ஆத்மா வால்" (13-24.) என்பன வாதி சுருதி ஸ்மிருதிகளும், இவ் வர்த்தத்தினைக் கூறுகின்றன வென்று கூறுகின்றர்.



यं ब्रह्माख्यं देवमनन्यं परिपूर्णं
हृत्स्थं भक्तैर्लभ्यमजं सूक्ष्ममतर्क्यम् ।
ध्यात्वात्मस्थं ब्रह्मविदो यं विदुरीशं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥७॥

(பதப் பொருள்.) १. यं—எந்த, २. देवं—ஸ்வப்பிர காசத்தினை, ३. अनन्यं—வேறு வஸ்து இன்றியதை, ४. परिपूर्णं—எவ்விடத்தும் எக்காலத்தும் இருப்பதை, ५. ब्रह्म—आख्यं—பிரஹ்மம் என்னும் பெயரினை யுடையதை, ६. भक्तैः—நிரந்தரம் சிரவணுதிகளால் ஆத்மாவினைப் பஜநஞ்

¶ பகவற் கீதை "மின்னையேய் வேலோ யென்னை மேவுவார் வேண்டிற் றெல்லாம், பின்னையே யென்னு தன்றே யளித்தவை காப்பேன்" (9-17.) "செறியுமிப் பொருளினைச் சிலர்தி யாநமாங், குறியினுற் றம்முளே காண்கு வார்" (13—23.)

செய்யும் புருஷர்களால், ७. **लभ्यं**—அடையத் தகுந்ததை, ८. **अजं**—ஜந்ம மின்றியதை, ९. **सूक्ष्मं**—இந்திரிய அக்கிரா கியத்தை, १०. **अतर्क्यं**—தர்க்கத்தினல் அறிய முடியாததை, ११. **आत्म—स्थं**—காரிய காரண சங்காதத்தில்—ஜீவ ரூப மாகப் பிரவேசித்திருப்பதை, १२. **ध्यात्वा**—தியானித்து, १३. **ब्रह्म-विदः**—பிரஹ்ம வித்துக்கள் (ஆகின்றனரோ), १४. **यं**—எந்த, १५. **हृत्**—இருதயத்தில், १६. **स्थं**—(அந்தர்யாமி ரூபமாக) இருக்கின்றதை, १७. **ईशं**—ஈச ரூபமாக, १८. **विदुः**—அறிகின்றனரோ, १९. **तं**—அந்த, २०. **संसार—ध्वांत—विनाशं**—சம்சார—இருளினை—நாசம் செய்யும், २१. **हरिं**—ஹரியினை, २२. **ईडे**—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

**देवं** (தேவம்) = ஸ்வப்ரகாசத்தை, "ஈண்டு இப் புருஷன் ஸ்வயம் ஜோதி" என்னும் (பிரஹதாரண்யகோபநிஷத் 4–3–9.) சுருதியினல். **अनन्यं** (அநந்யம்) = அந்யவஸ்து சூந்யத்தை. "எதனினின்றும் பரம் அபரம் இன்று" என்னும் (சுவேதாசுவதரோபநிஷத் 3—9.) சுருதியினல். **परिपूर्णं** (பரிபூர்ணம்) = ஸர்வ தேசத்திலும், ஸர்வ காலத்திலும் யாண்டும் இருப்பதை, "பிரஹ்மமே இவ் வமிர்தம், முன்னும் பின்னும் பிரஹ்மம் தக்ஷிணத்திலும் உத்தரத்திலும் கீழும், மேலும் வியாபிக்கப்பட்டிருக்கின்றது" என்னும் (முண்டகோபநிஷத் 2—11.) சுருதியினல். "அதுவே இன்றும், அதுவே நாளைக்கும்" என்பதாதி (கடவல்லி உபநிஷத் 2—1—13.) சுருதியாலும். இதனனே மூவித பரிச்சேத சூந்யத்தினல், **ब्रह्माख्यं** (பிரஹ்மாக்யம்) = பிரஹ்மம் என்னும் பெயரை யுடையதை, **भक्तैः** (பக்தை:) = பக்தர்களால் நிரந்தரம் சிரவணதிகளினல், ஆத்மாவினை பஜனை செய்யும் புருஷர்களால், **लभ्यं** (லப்யம்) = அடையத் தக்கதை, "அந்த



ஸர்வ வியாபகத்தை ஸர்வப் பிரகாரத்தாலும் யத்ந முடைய மந முடையவர்களான தீரர்கள்" என்னும் (பிரஹதாரண்யகோபநிஷத் 4–14–25.) சுருதியினல், சிரவணதிகளோடு கூடிய நியதமாகிய சித்த முடையவர்கள் என்பது பொருளாம். **अजं** (அஜம்) = ஜந்ம மின்றியதை, "மஹாந் அஜ:" என்னும் (பிரஹதாரண்யகோபநிஷத் 4–4–22.) சுருதியினல். **सूक्ष्मं** (சூக்ஷமம்) = இந்திரியத்தினல் கிரகிக்கப்படாததை, "சூக்ஷமத்தினின்றும் சூக்ஷம தரம்" என்ப தாதி (கைவல்யோபநிஷத் 1–6.) சுருதியினல். **अतर्क्यं** (அதர்க்யம்) = கேவல தர்க்கத்தினல் அறியக் கூடாததை, பின்னையோ, உபநிஷத்தால் அறியக் கூடியதை, "அந்த ஔபநிஷதத்தை" என்ப தாதி (பிரஹதாரண்யகோபநிஷத் 3–9–26.) சுருதியால். **आत्मस्थं** (ஆத்மஸ்தம்) = ஆத்மாவில்—காரிய காரண ஸங்காதத்தில், ஜீவத் தன்மையினல் பிரவேசித்து இருப்பதை, "அதுவே பிரவேசித்தது" (தைத்திரியோபநிஷத் 2—6.), "இச் சீவ ரூபத்தினல் பிரவேசித்து" என்பன வாதி (சாந்தோக்யோபநிஷத் 6–3–2.) சுருதிகளால். இவ்வித விஷ்ணுவை, **ध्यात्वा** (த்யாத்வா) = தியானஞ் செய்து, **ब्रह्मविदः (भवंति)** (பிரஹ்மவித: பவந்தி) = பிரஹ்மவித் ஆகின்றனரோ. **यं हृत्स्थं** (யம் ஹ்ருத்ஸ்தம்) = ஸர்வ பிராணிகளின் ஹிருதயத்தில் அந்தர்யாமி ரூபத்தால் இருக்கும், **ईशं** (ஈசம்) = ஈசுவரனை, **विदुः** (வித:) = அறிகின்றார்கள். ஆண்டும், "அங்குஷ்ட மாத்ர புருஷன் மத்யாத்மாவில் இருக்கின்றான். பூத பவ்யங்களுக்கு ஈசாநன்" என்ப தாதி (கடோபநிஷத் 2—4—12.) சுருதியால். ஹிருதய உபாதியினல் அங்குஷ்ட மாத்ர ஸ்வத புருஷன் பூர்ணன், **मध्ये** (மத்தியே) = தேஹ மத்தியில், ஆத்மாவில்—ஹிருதயத்தில் என்பது பொருளாம்.7

இங்ஙனம், பக்தியாதி ஸாதநங்களோடு கூடியவர்களானே கிரஹிக்கத்தக்க தத்வத்தினை ஸ்துதித்து, இப்பொழுது, தத், த்வம், பதார்த்த விவேகத்தோடு கூடியவர்களானே கிரஹிக்கத் தக்க விஷ்ணுவினை ஸ்துதித்தற்கு உபக்ரமஞ் செய்கின்றார்.

**मात्रातीतं स्वात्मविकाशात्मविबोधं**
**ज्ञेयातीतं ज्ञानमयं हृद्युपलभ्यम् ।**
**भावग्राह्यानन्दमनन्यं च विदुर्यं**
**तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥८॥**

(பதப் பொருள்.) १. **मात्रा—अतीतं**—சக்ஷுः முதலியவற்றினால் கிரகிக்கப்படாததை, २. **स्व-आत्म-विकाश-आत्म-विबोधं**—பிரத்தியக்—ஸ்வரூபத்தினால், வெளிப்படும்—அந்தக்கரணத்தில்-விசேஷ-போத முடையதை, ३. **ज्ञेय-अतीतं**—ஞாந விஷய வஸ்துக்களைக்—கடந்திருப்பதனை, ४. **ज्ञान—मयं**—ஞாந—ஸ்வரூபத்தினை, ५. **हृदि-उपलभ्यं**—புத்தியின்கண்—நன்கு விளங்குவதை, ६. **भाव—ग्राह्य—आनंदं**—பாவரூபத்தினால்-கிரகிக்கப்படும்- ஆநந்தத்தினை, ७. **अनन्यं**-८. **च**—இரண்டாவ-தற்றதனை, ९. **यं**—எதனை, १०. **विदुः**-அறிகின்றார்களோ, ११. **तं**—அந்த, १२. **संसार-ध्वांत—विनाशं**—சம்சார-இருளினை-நாசம் செய்யும், १३. **हरिं**—ஹரியினை, १४. **ईडे**-நமஸ்க்கரிக் கின்றேன், என்றவாறு.

*அர்த்தங்கள் இதனால் அறியப்படுவதனால்,* **मात्रा** *(மாத்ரா)=மாத்திரைகளாம்—சக்ஷுராதி முதலியனவாம். அவைகளால்,* **अतीतं** *(அதீதம்)=சக்ஷுராதி அக்ராஹியத்தை என்பது பொருளாம். "சக்ஷுவினால் கிரஹிக்கப்படுவதன்று, வாக்கினாலு மன்று. அந்ய தேவர்களாலுமன்று. தபஸினால், அல்லது, கர்மத்தினா லன்று." என்னும் (முண்டகோபநிஷத்* 2, 1, 8.) *சுருதியினால். அந்ய தேவர்களால்—அந்ய வாக்கு, சக்ஷு இந்திரியங்களால், தபஸால்—கிருச்ர சாந்தராயணாதியால், கர்மத்தால்—அக்நிஷ்டோமம் முதலியவற்றால், கிரஹிக்கப்படுவதன்று—அறிதற்கு ஸமர்த் தின்று. ரூபம் ஜாதி முதலியன இன்மையால் என்பது பொருளாம். ஆயினும், சக்ஷு முதலியவைகளினால் கிரஹிக்கப்படாமையின் இன்றென்றே கூறற்க எனக் கூறுகின்றார்.* **स्वात्मविकाशात्मविबोधं इति** *(ஸ்வாத்மவிகாசாத்மவிபோதம் இதி)=தனது ஆத்மாவினைப் பிரகாசிக்கும் ஆத்ம போதத்தினை, தனது—பிரத்யக், ஆத்மா—ஸ்வரூபத்தை, அதனினின்றும், விகாசம்—வெளிப்படுதல், எதற்கு அந்த, ஆத்மாவினிடத்தில்—அந்தக் கரணத்தில், விபோதம்—விசேஷ ஞாநம், எதற்கு அது, ஸ்வாத்மவிகாசாத்மவிபோதமாம். ஆயின், புத்தியினால் கிரஹிக்கப்படும் எனப் பிராப்தம். அஃதன் றெனக் கூறுகின்றார்.* **ज्ञेयातीतं इति** *(ஞேயாதிதம் இதி)=ஞேயம்—ஞாந விஷயத்தை, வஸ்து அதிக்ரமித்து இருப்பதனை. ஞேயத்தினைக் கடந் திருப்பது ஞேய மாவ தில்லை. "அது அறியப்பட்டதினின்றும் அந்யமே;" [கேநோபநிஷத்* 1—3.] *"அப்ரமேயத்தை, அநாதியை" என்பதாதி [அமிருத பிந்தூபநிஷத்] சுருதியால். அறியப்படுதலினின்றும்—ஞாந விஷயத்தினின்றும், அப்ரமேயத்தை—பிரமையாகிய புத்தி விருத்திக்கு விஷய மின்றியதை யென்பது பொருளாம். இதில்*

ஹேதுவைக் கூறுகின்றார். **ज्ञानमयं इति** (ஞாநமயம் இதி) = ஞாந ஸ்வரூபம் என்பது பொருளாம். "ஸத்திய ஞாநம் அநந்தம் பிரஹ்மம்" என்பதாதி [தைத்திரீயோபநிஷத் 2, 1.] சுருதியினால்.

அற்றேல், அஃதாகுக. ஆயின், ஞேயத்தினைக் கடந்ததற்கு அந்தக் கரணத்தில் விசேஷ ஞாநம் யாங்ஙனம் எனக் கடாவிப் புகல்கின்றார். **हृद्युपलभ्यं इति** (ஹ்ருத்யுபலப்யம் இதி) = ஹிருதயத்தில் தோற்றுகின்றதை. ஹிருதயத்தில்— புத்தியில், பாஸ்யங்களை அதிக்ரமித்திருக்கும் ஸூர்யனுக்கும் தர்ப்பணத்தில் ஸ்பஷ்டமாகப் பிரதிபிம்பத்தால் பாநம் போன்று, ஞேயத்தினை அதிக்ரமித்திருக்கும் விஷ்ணுவிற்கும் புத்தியில் ஸ்பஷ்டமாகப் பிரதிபிம்பத்தால் ஸ்வயமாக விளக்கம் பொருந்துகின்றது. ஆகவே, "மநதானே இது அடையத் தக்கது [கடவல்லியுபநிஷத் 2—1—11.] "இவ்வாத்மா அணு. புத்தியால் அறியத் தக்கது. கூர்மையான புத்தியினால் பார்க்கப்படுகின்றது" என்ப தாதி சுருதியால். இவ் வாக்கியங்களில் ஆத்மாவிற்குப் புத்தியினால் கிரஹிக்கப்படும் தன்மை தோற்றுகின்ற தென்னற்க. "மநதோடு கூட அடையாது", "மதியினை மநநஞ் செய்வதை மநநிப்பவன் இன்று. விஞ்ஞாதாவின் விஞ்ஞாதாவை அறிபவ ரின்று." [பிரஹதாரண்யகோபநிஷத் 3-4-2.], "மநதானே இது அடையத் தக்கது.", [கடவல்லியுபநிஷத் 2—1—11] "எது மநதினால் அறியப்படுவ தில்லை. எதனால் மநோ மத மென்று கூறப்படுகின்றது" என்பன வாதி சுருதி விரோதப் பிரஸங்கத்தினால். அற்றாயின், இரு சுருதிகட்கும் பரஸ்பரம் அவிரோதார்த்தம் யாதெனின், கேட்பாயாக. "மநதினால் இது அடை



யத் தக்கது" என்பதாதியால், ஆத்மாவிற்கு விருத்தி வியாப்யத் தன்மை தாத்பர்யமாம். "அப்ரமேயம்" என்பதாதி சுருதியால் பல வியாப்யத் தன்மை நிஷேதிக்கப்படுகின்றது. ஆத்மாவிற்கு விருத்தி வியாப்யத் தன்மை யென்பது அந்தக் கரண விருத்தியில் பிரதிபிம்பத்தினால் ஸ்வயமே ஸ்பஷ்டமாக விளங்குந் தன்மையாம். பல வியாப்யத் தன்மை யென்பது அதன்கண் ணுள்ள சிதாபாஸனாகிய பலத்தினால் விளக்கப்படும் தன்மையாம். ஆகவே, இரு மறைகளும் இகலில தென்றறிக. அது பாரதீ தீர்த்தர்களால், * "ஸ்வயம் பிரகாசமாகிய சாக்ஷியும் புத்தி விருத்தியினால் அங்யம் போன்று வியாபிக்கப்படுகின்றது. இதற்கு பல வியாப்யத் தன்மையே சாஸ்திரக்காரர்களால் நிவாரணஞ் செய்யப்பட்டிருக்கின்றது." (பஞ்ச தசி 7—90.) "அப்ரமேயத்தை, அநாதியை" என்னும் இவ்விடத்தும் சுருதியினால் இதுவே கூறப்படுகின்றது. மநதினால் இது அடையத் தக்கது எனப் புத்தி வியாப்யத் தன்மை கேட்கப்படுகின்றது." (பஞ்ச தசி 7–95.) எனக் கூறப்பட்டிருக்கின்றது. இதனால், அவிஷயத்திற்கும் ஞாநம் பொருந்துகின்றது என்பது கருத்தாம்.

"எந்த இந்த விஞ்ஞாநமயன் பிராணன்களில் ஹிருதயத்தினுள் ஜோதி புருஷன்" [பிரஹதாரண்யகோபநிஷத் 4—3—7.] என்ப தாதி அவாந்தா வாக்கியத்தினால் தேஹம்

* பஞ்ச தசி "கரிய தாமிது தன்னொளி யேனுங்க டாதிபோல, வுரிய புத்திவி ருத்தியி னோர்வுற லாகுமிந்தத், துரிய நற்பொருடன்னைப்ப லத்தினற் சுட்டொணாவென், றரிய நூல்புக லாரியரோதின ரன்பினாலே." (7—57). "சரிப்பி லப்பிர மேயமநாதியென் றிங்கு சாற்றுங், கருத்திற் கிட்டுமி தென்பது புத்தியாற் காணலாகும்." (7—60.)

முதலியவற்றின் அந்யத் தன்மையினுல், "ஈண்டு இப் புருஷன் ஸ்வயம் ஜோதியாகின்ருன்." [பிரஹதாரண்யகோபநிஷத் 4—3—9] என்ப தாதியால், ஸ்வயம் ஜோதித் தன்மையால், "இப் புருஷன் அஸங்கன்" [பிரஹதாரண்யகோபநிஷத் 4–3–16.] என்ப தாதியால், அஸங்கத்தன்மையால், "அவன் பார்ப்ப தில்லை" [பிரஹதாரண்யகோபநிஷத் 4—3—23.] என்ப தாதியால், லோப மின்றிய சித்துத் தன்மையால் பிரதிபாதிக்கப்படும் த்வம் பதார்த்தமாகிய ஹிருதயத்தில் விளங்கும் எதை அறிகின்ருர்கள் என்பது சம்பந்தம்.

தத் பதார்த்தத்தைக் கூறுகின்ருர். **भावग्राह्यानन्दं इति** (பாவக்ராஹ்யாநந்தம் இதி)=பாவ ரூபமாகக் கிரஹிக்கப்படும் ஆநந்தத்தை. பாவ ரூபத்தினுல் கிரஹிக்கப்படுவதாகிய ஆநந்தம் பாவக் கிராஹ்யாநந்தமாம். அதனை, "ஸாது யௌவந ஞகின்ருன். அத்யாபகன் யௌவந ஞகின்ருன்" [தைத்திரீயோபநிஷத் 2—8.] என்ப தாதியால், ஸார்வ பௌமனை ஆரம்பித்து மநுஷ்ய கந்தர்வாதி ஸ்தாநங்களில் உயர்வாகக் கேட்கப்படும் ஆநந்தம் யாண்டு முடிவினை அடைகின்றதோ, அது நிரதிசயாநந்தமாக விருக்கின்றது. "எதனினின்றும் மநதோடு கூட வாக்கு அடையாது நிவிர்த்திக்கின்றன பிரஹ்மத்தின் ஆநந்தத்தினை அறிந்தவன் ஒன்றினின்றும் பயப்படுவ தின்று" (தைத்திரீயோபநிஷத் 2—9.) என வாக்கு மநதுகளின் அகோசரத் தன்மையினுல் கேட்கப்படுகின்றமையின், இவ்வாறு பாவக்ராஹ்யாநந்தத்தை யென்பது பொருளாம். **अनन्यं** (அநந்யம்)=அந்யம், இரண்டாவது எதனுல் இன்று அது அநந்யமாம், அந்த அத்விதீயத்தை. நிரதிசயாநந்தம் தத் பதார்த்தம் என்பது பொருளாம்.





அற்றேல், பிரஹ்மத்திற்கு அநந்யத் தன்மை யாங்ஙனம். இரண்டாவ தாகிய அந்ய கடாதிகள் அநுபவிக்கப்படுதலின் எனச் சங்கித்து எல்லா இரண்டாவது பதார்த்தங்கட்கும் திருசியத் தன்மையினுல் சுக்தி ரஜதாதி போன்று அதனிடத்து ஆரோபிதமாகலின். ஆரோபிதத்திற்கும் பரமார்த்த ரூப அதிஷ்டாந மாத்திரத் தன்மையாகலின். "இவ் வெல்லாம் பிரஹ்மம்", (சாந்தோக்யோபநிஷத் **3—14—1.**) "இவ் வெல்லாம் ஆத்மாவே" (**7–25–27**), "இவ் வெல்லாம் பிரஹ்மமே" [முண்டகோபநிஷத் **2—2—11.**] "இவ் வெல்லாம் இவ் வாத்மா" (பிரஹதாரண்யகோபநிஷத் **2—4—6.**) "இவ் வெல்லாம் புருஷனே" (முண்டகோபநிஷத் **2—1—10.**) "இவ் வெல்லாம் விசுவம்", என்பன வாதி சுருதிகளினுலும் பிரஹ்மத்திற்கு அநந்ய பதத்தினுற் கூறிய அத்விதீயத் தன்மைக்கு நாசம் இன் றேனக் கருதிக் கூறுகின்றர்.

यद्यद्वेद्यं वस्तुसतत्त्वं विषयाख्यं
तत्तद्ब्रह्मैवेति विदित्वा तदहं च ।
ध्यायन्त्येवं यं सनकाद्या मुनयोऽजं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥ ९ ॥

(பதப் பொருள்.) १. यत्—२. यत्—எந்த—எந்த, ३. विषय—आख्यं—சப்தாதி, ४. वस्तु—स तत्वं—வஸ்து—பரமார்த்த ரூபம், ५. वेद्यं—திருசியம், ६. तत्—तत्—அது-

அது, ७. ब्रह्म—एव—பிரஹ்மமே, ८. इति—என்று, ९. विदित्वा—உணர்ந்து, १०. तत्—அந்த பிரஹ்மமே, ११. अहं—१२. च—நான், (நானே அந்தப் பிரஹ்மம் என்று), १३. एवं—இவ்வாறு, १४. यं—எந்த, १५. अजं—பரமாத்மாவை, १६. सनक-आद्याः-சநகாதி, १७. मुनयः-முநிகள், १८. ध्यायंति—தியாநிக்கின்றனரோ, १९. तं—அந்த, २०. संसार—ध्वांत—विनाशं—சம்சார—இருளினை-நாசம் செய்யும், २१. हरिं-ஹரியினை, २२. ईडे-நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

यद्यत् (யத்யத்)=விஷயம், விஷிணு என்னும் விசேஷணத்தால் புருஷனை பந்தநஞ் செய்வதால், விஷயம்—சப்தாதிகள், அந்த விஷய மென்னும் பெயரை யுடைய वस्तुसतत्वं (வஸ்துஸதத்வம்)=வஸ்து பரமார்த்த பூதத்தை, பிரஹ்மமே ஸ்வரூபம் எதற்கு. அதில் விஷய மென்னும் பெயரை யுடைய எல்லாம் ஆரோபிதமாகலின் என்பது பொருளாம். அதில் எதுத் தன்மை யபிப்பிராயத்தினல் கூறுகின்றார். वेद्यं इति (வேத்யம் இதி)=திருசியம், திருசியமாகலின். அதில், ஆரோபிக்கப்படுவதால் விஷய மென்னும் பெயரை யுடைய வஸ்து ஸதத்வம் என்பது பொருளாம். இதனல், तत् ब्रह्मैव (தத் பிரஹ்மைவ)=அந்தப் பிரஹ்மமே, அதனி னின்றும் அந்யம் இன்று என, विदित्वा (விதித்வா)= அறிந்து, तत् (தத்)=பிரஹ்மம், अहं (அஹம்)=நான். சகாரத்தினல் பிரித்து நான் பிரஹ்மம் என, एवं (ஏவம்)= கூறிய பிரகாரத்தினல், यं अजं (யம் அஜம்)=எந்தப் பரமாத்மா வாகிய, हरिं (ஹரிம்)=ஹரியை, सनकाद्याः



(ஸநகாத்யா:)=ஸநகர் ஸநந்தரர் ஸநத் குமாரர் ஸநாதநர் முதலிய, मुनयः(முநய:)=மநநசிலர்கள், ध्यायन्ति(த்யாயந்தி)= தியாநிக்கின்றனர், அந்த விஷ்ணுவை நமஸ்க்கரிக்கின்றேன். 9

அற்றேல், நான் என்னும் ஞாநத்திற்கு விஷய மாகிய ஆத்மா பிரசித்தமாம், அதற்கு ஞேயத்தின் அதீதத் தன்மைச் சம்பாவனை யாங்ஙனம் என்று சங் கித்துக் கூறுகின்றர்.

यद्यद्वेद्यं तत्तदहं नेति विहाय

स्वात्मज्योतिर्ज्ञानमयानन्दमवाप्य ।

तस्मिन्नस्मीत्यात्मविदो यं विदुरीशं

तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥१०॥

(பதப் பொருள்.) १. यत्—எது, २. यत्—எது, (தேஹாதி அகங்கார பரியந்தமான), ३. तत्—அது, ४. तत्—அது, ५. अहं—ஆத்மா, ६. न—அன்று, ७. इति—என்று, ८. वेद्यं-வேத்தியத்தினை, ९. विहाय—விட்டு, १०. स्व-आत्म-ज्योतिः—ஸ்வப் பிரகாச, ११. ज्ञान—मय—आनंदं—ஞாந—ஸ்வரூப—ஆநந்தத்தினை, १२. अवाप्य—அடைந்து, १३. तस्मिन्—அஹம் பத லக்ஷியத்தில், १४. अस्मि-இருக்கின்றேன், १५. इति—என்று, १६. आत्म—विदः—ஆத்ம வித்துக்கள், १७. यं—எந்த, १८. ईशं—ஈசனை, १९. विदुः-அறிகின்றார்களோ, २०. तं—அந்த, २१. संसार—ध्वांत—विनाशं—சம்சார—இருளினை—நாசம் செய்யும், २२. हरिं-ஹரியினை, २३. ईडे-நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

தேஹாதி அஹங்கார பரியந்தம், **तत्तदहं** (தத்ததஹம்)= அந்தந்த நான்—**न इति** (ந இதி)=ஆத்மா வன் றென, **विहाय** (விஹாய)=விட்டு, வேத்யம் கடாதி போன்று அநாத்மத் தன்மையினல் வியாபிக்கப்பட்டிருத்தலின், அஹங்காராதிகளும் வேத்யமாகலின் ஆத்மா அன் றென தியாகித்து என்பது பொருளாம். இது தாத்பர்யமாம். ஆத்மா, நான் என்னும் ஞாநத்திற்கு விஷய மெனக் கூறும் வாதியைக் கேட்கத் தக்கது:— ஆத்ம ஸ்வரூபம் அஹம் பிரத்யய விஷயமா? அல்லது ஆத்மாவின்கண் ணுள்ள அஹம் பிரத்யய விஷயமா? முதல தன்று. தனக்குத் தன் கர்மத் தன்மை பொருந்தாமையின். இரண்டாவதிலும், ஆத்மாவின்க ணுள்ள பிரத்யயம் ஜடமா? அல்லது ஸ்வப்ரகாசமா? முதல தன்று. ஜடத்தினல் ஆத்மாவின் பாநம் பொருந்தாமையின். இரண்டாவ தன்று, ஸ்வப்ரகாச பிரத்யய விஷயத்திற்கு கடாதி போன்று ஆத்மத் தன்மை பொருந்தாமயின். ஸ்வப்ரகாசப் பிரத்யயத்திற்கு ஆதாரத்தானே விஷயத் தன்மை யின்றி ஆத்மா விளங்குகின்றது எனக் கூறற்க. பிரத்யயத்திற்கு அந்யமாய்ப் பிரத்யய அதீநப் பிரகாசத் திற்குப் பிரத்யய விஷயத் தன்மை நியமத்தால் ஆத்மாவிற்கு அநாத்மத் தன்மை தோஷம் அங்ஙனமே யாகலின். ஆகலின், எது எது பிரத்யய விஷயமாகிய அஹங்காரம் முதல் தேக பரியந்தம் அது அது அநாத்மாவாம். மற்றும், **यद्यद् वेद्यं तत्तत्** (யத் யத் வேத்யம் தத் தத்)=எது எது வேத்யம் அது அது. தன் விலக்ஷண வேத்யம் என்னும் வியாப்தி பார்க்கப்படுதலின், ஸ்வப்ரகாசம் ஆத்மா வென நிச்சயிக் கப்படுகின்றது என்று கூறுகின்றார். **स्वात्मा इति** (ஸ்வாத்மா இதி). **स्वात्मज्योतिर्ज्ञानमयानन्दं** (ஸ்வாத்மஜ்யோதிர்ஜ்ஞாநமயா



நந்தம்)=ஸ்வாத்மஜ்யோதி—ஸ்வப்ரகாசம், ஞாநமயம்—ஞாந ஸ்வரூபம் ஆகிய, ஆநந்தம்—ஆநந்தத்தை, **अवाप्य** (அவாப்ய) =பரப்பிரேமையின் ஆஸ்பதத் தன்மையினல் அடைந்து, **तस्मिन्** (தஸ்மிந்)=ஸம்பாதிக்கப்பட்ட அஹம் பத லக்ஷியத் தில். **अस्मि इति आत्म विदः** (அஸ்மி இதி ஆத்ம விதஃ)= இருக்கின்றேன் என ஆத்மாவினை அறிபவர்கள், **यं ईशं** (யம் ஈசம்)=எந்த ஈசுவர பத லக்ஷியத்தை, 'பிரஹ்மம்' என்று **विदुः** (விதுஃ)=ஸாக்ஷாத் அநுபவிக்கின்றனர் என்பது பொருளாம். த்வம் பத லக்ஷிய ஞாந மின்றி அவர்கட்குப் பிரஹ்மத் தன்மையின் ஞாநம் பொருந்தாமையின் என்பது தாத்பர்யமாம். ஆகவே, "மூன்றிடத்திலும் உள்ள, போக்யம் போக்தா போகங்களி னின்றும் விலக்ஷணமாய், சாக்ஷியாய், சிந் மாத்திரமா யுள்ள சதாசிவன் நான்". என்னும் (கைவல்யோபநிஷத் 1—18.) சுருதியில் போக்யம் ஆகிய, ஸ்தூலமாய் வெளிப்பட்டிருக்கும் ஆநந்தத்தினின் றும், போக்தாவாகிய உபாதியோடு கூடிய விசுவ தேஜஸ பிராக்ஞர்களினின்றும் விலக்ஷணமாம். எல்லாவற்றினையும் விளக்கும் எச்சிந்மாத்திரம் அஹம்பத லக்ஷியம் என ஸாக்ஷாத் காரம் செய்த அஹம் பத லக்ஷியத்தை அநுவதித்து அதற்கு சதாசிவ சப்த லக்ஷிய அத்வைதாநந்த பிரஹ்மமாகிய தன்மை யினைப் போதிக்கப்படுகின்றது. த்வம் பத லக்ஷியார்த்தத்தினை ஸாக்ஷாத்காரம் செய்யாதவனுக்குப் பிரஹ்மத் தன்மையின் ஸாக்ஷாத் காரம் பொருந்தாமையின்.



அற்றேல், இங்ஙனம், தேகாதி விலக்ஷணமான ஆத்மாவினையும், அதற்குப் பிரஹ்மத் தன்மையினையும் அறிந்தும் சிலருக்கு முக்தி யுண்டாவ தில்லை. மீண்டும்

தேஹாதிகளில் ஆத்ம புத்தியும் பார்க்கப்படுகின்றது. இதனால், தேகாதிகட்கு அந்யமான ஆத்ம ஞானம் நிஷ்பல மெனக் கடாவி, அவர்கட்குப் பிரதிபந்த மின்றிய ஆத்ம ஞாந மின்மையானே முக்தி யின்று, ஞாநத்திற்கு அதன் ஸாதகத் தன்மை யின்மையினால் அன்றும். பிரதிபந்தமும் அஸத்யமாகிய பிரபஞ்ச அநாத்ம தேஹாதிகளில், சத்தியத் தன்மை, ஆத்மத் தன்மை புத்தி, பூர்வ பூர்வ வாஸனையினால் அடையப் பட்டது. பிரபஞ்ச தேஹாதிகளில் அசத்தியத் தன்மை, அநாத்மத் தன்மைப் பாவனையினாலும், ஆத்மாவிற்குச் சித்து நுபத் தன்மைப் பாவனையினாலும் நீணாள் நிரந்தர ஸத்கார அப்யாஸத்தினால் நிவிர்த்திக்கின்றது. அது நிவிர்த்திக்கின் ஞாநத்தினால் அஞ்ஞாநம் நஷ்டமாயின், அவ் வெல்லாம் பிரஹ்மமே யாசின்றன என்னும் அபிப்பிராயத்தினால் அறைகின்றார்.

हित्वा हित्वा दृश्यमशेषं सविकल्पं
मत्वा शिष्टं भाद्दशि मात्रं गगनाभम् ।
त्यक्त्वा देहं यं प्रविशन्त्यच्युतभक्ता-
स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥ ११ ॥

(பதப் பொருள்.) ௧. दृश्यं—திருக்குக்குக் கோசரமாகிய, ௨. सविकल्पं—(கட பட பிராமணாதி) விகற்பத்தோடு கூடிய, ௩. अशेषं—யாவற்றையும், ௪. हित्वा—விட்டு, ௫. हित्वा—விட்டு, ௬. शिष्टं—மிச்சமான, ௭. भा—दृशि—मात्रं—ஸ்வப் பிரகாச—சித்—மாத்திரத்தினை, ௮. गगन—आभं—ஆகாச—சமானத்தினை, ௯. मत्वा—(ஆத்ம நுபமாக) அறிந்து, ௧௦. देहं—தேகத்தினை, ௧௧. त्यक्त्वा—(ஆத்ம நுப அபிமானத் தினை) விட்டு, ௧௨. अच्युत—भक्ताः—பிரஹ்மத்தின்கண் ஆத்ம நுபமாகப் பக்தி செய்பவர்கள், ௧௩. यं—எதனை, ௧௪. प्रविशन्ति—அடைகின்றனரோ, ௧௫. तं—அந்த, ௧௬. संसार—ध्वांत—विनाशं—சம்சார—இருளினை—நாசம் செய்யும், ௧௭. हरिं—ஹரியினை, ௧௮. ईडे—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.



दृश्यं (திருச்யம்)=திருசியால் கோசரிக்கப்படுவதை, सविकल्पं (ஸவிகல்பம்)=கடத் தன்மை படத் தன்மை பிராஹ்மணத் தன்மை முதலிய விகல்பத்தோடு கூடியதை, अशेषं (அசேஷம்.)=ஸர்வ பாஹ்யாந்தரப் பிரபஞ்சங்களை, हित्वा (ஹித்வா)=அசத்தியத் தன்மைப் பாவனையினாலும், அநாத்மத் தன்மைப் பாவனையினாலும் நிவாரணஞ் செய்து, தேஹாதிகட்கு அநாத்மத் தன்மையும், ஜகத்திற்கு மித்யாத் தன்மையும் அறிந்து என்பது பொருளாம். அது பாரதீ தீர்த்தர்களால், "ஆத்மா தேகாதிகளினின்றும் பிந்நம். இச் சகத் மித்தை. (இங்ஙன மாயினும்,) ஆத்மாவிற்குத் தேகாதி ரூபப் புத்தியும், தேஹாதிகட்குச் சத்தியத் தன்மைப் புத்தியும் விபரீத பாவனையாம்", ‡ "அது தத்வ பாவனையினால் நசிக்கின்றது. அதனால், தேஹாதி அதிரிக்தத் தன்மை ஆத்மாவிற்குப் பாவிக்க. அது போன்று ஜகத்திற்கு

---

‡ பஞ்ச தசி: "தீதிருனுட லாதியின் வேறிச்செ கம்பொ யாகும், பேதபாவனை மாலுறக் காண்பதிப் பெற்றிவிட்டே" 7-68. "மெய்ம்மை நாட்டத்தி லுறுமிது வாகலின் மெய்ம்மைவேறு, பொய்ம்மை யாஞ்செக மென்றுநி ரந்தரம் புந்திசெய்க." 7—68½.

நிரந்தரம் மித்யாத் தன்மையினைப் பாவிக்க.” பஞ்சதசி (7, 111, 112.) எனக் கூறப்பட்டிருக்கின்றது. **विशिष्टं** (விசிஷ்டம்)=பரிசிஷ்டத்தை, **भादृशिमात्रं** (பாதிருசிமாத்ரம்)=ஸ்வப்ரகாச சின்மாத்திரத்தை, ஸ்வச்சத் தன்மை அசங்கத் தன்மை விபுத் தன்மைகளினால் ஆகாச ஸதிருசமென, **मत्वा** (மத்வா)=ஆத்மத் தன்மையினால் அறிந்து, அது வித்யாரண்ய குரவரால் † “பஞ்ச கோசத்தினைப் பரித்யாகஞ் செய்யில் சாக்ஷி ஞான மானது எஞ்சுகின்றது. தனது ஸ்வரூபம் அதுவேயாம். அதற்குச் சூந்யத் தன்மை ஸம்பாதித்தற் கியலாதாம்.” (பஞ்ச தசி 3–22.) எனக் கூறப்பட்டிருக்கின்றது. அதனால், **देहं त्यक्त्वा** (தேகம் த்யக்த்வா)=தேகத்தினை விட்டு—ஆத்மத் தன்மையினால் அபிமானம் செய்யாது, **यं** (யம்)=விஷ்ணுவை, **प्रविशान्ति** (ப்ரவிசந்தி)=பிரவேசிக்கின்றனர். ஆண்டுப் பிரவேசம், அவ்வாத்மரூபமாக இருத்தலேயாம். முக்யப் பிரவேசம் பொருந்தாமையின், “பிரஹ்மவித் பிரஹ்மமே யாகின்றான்” என்னும் சுருதியால். **अच्युतभक्ताः** (அச்யுதபக்தா:)=ச்யுத மின்றிய பக்தர்கள்—நாச மின்றிய பிரஹ்மத்தில் ஆத்மத் தன்மையினால் பஜனம் செய்பவர்கள் என்பது பொருளாம். “எவன் இது வேறு நான் வேறா யிருக்கின்றேன் என அந்ய தேவதையினை உபாஸிக்கின்றான் அவன் அறியாதவ னாகின்றான்” என்னும் சுருதியினால். (பிரஹதாரண்யகோபநிஷத் 1—4—10.) 11

பிருகதாரண்யத்தின் ஐந்தாவது அத்யாயத்தில் ஆக்யாயிகை (கதை) யிருக்கின்றது. ஜநகர் அநேக

† “விலகினைங்கோ சமுமிஞ்சுங் கரியுணர்வே தற்சொரூபம் வெறும்பொய் யாகா.” 3—10½.



தக்ஷிணையினை யுடைய யஞ்ஞத்தை ஆரம்பித்தனர். ஆண்டு அநேக தேசங்களினின்றும் வந்து பிராஹ்மணர்களாகிய பிரஹ்ம வித்துக்கள் யஞ்ஞத்தினைப் பார்க்கும் இச்சையினாலும், தநம் முதலியவற்றின் ஆசையினாலும் ஒன்று சேர்ந்தனர். ஆண்டு, பிரஹ்மவித்துக்களின் ஸமூஹத்தினைப் பார்த்த மாத்திரத்தினால், ஜநகனுக்கு அறியும் இச்சை யுண்டாயிற்று. “அந்தப் பிரஹ்ம வித்துக்களுள், பிரஹ்ம நிஷ்ட புருஷரை அறிந்து, அவரை அடைந்து, தத்வத்தை அவரிடத்தினின்றும் அறிவேன்” எனக் கருதி, ஸ்வர்ணம் ரத்நம் முதலியவற்றால் எங்கும் அலங்கரிக்கப்பட்ட ஆயிரம் பசுக்களை, பிரஹ்ம வித்துக்களின் ஸபையில் கோண்டு வந்து நிறுத்தி, அவர்களைப் பார்த்து “ஏ பகவந்களாகிய பிராஹ்மணர்காள்! உங்களுள் எவர் பிரஹ்ம நிஷ்டர், அவருக்கு இந்த ஆயிரம் பசுக்களும் என்னால் கோடுக்கப்பட்டது கிரஹித்துக் கோள்ளுங்கள்” எனக் கூறினர். அவர்கள் பய முடையவர்களாய்ச் சும்மா விருந்தனர். பின் யாஞ்ஞவல்கியர் சும்மா விருக்கும் அவர்களைப் பார்த்துத் தமது சிஷ்யனிடத்தில் “இந்தப் பசுக்களை நமது கிரஹத்திற்குக் கோண்டு போவாய்” என்றனர். அவன் அங்ஙனஞ் செய்தனன். அதனைப் பிராஹ்மணர்கள் பார்த்துக் குரோத முடையவர்க ளாயினர். குரோதத்தை யடைந்த அவர்களுள், “ஹோதா வாகிய அச்வலர், ஆர்தபாகர், புஜ்யுர், லாஹ்யாயநி, உஷஸ்தர், கஹோலர்,” என்னும் பிரஹ்ம வித்துக்கள் யாஞ்ஞவல்கியரால் அப்போழுதே பராஜய மடைந்தார்கள். பின், உத்தாலக ர்ஷியினால் அந்தர்யாமி வினவப்பட்டது. அதற்கு

யாஞ்ஞவல்கியர் உத்தாலகரின் பொருட்டு அந்தர்யாமியைக் கூறினர். அச் சுருதி:— "எது பிருதிவியில் இருந்து பிருதிவியின் உள்ளும், எதைப் பிருதிவி யறிவதில்லை. எதற்குப் பிருதிவி சரீரம், எது பிருதிவியின் உள்ளிருந்து அசைக்கின்றது அவ் விவ் வாத்மா அந்தர்யாமி அமிர்தமாம்" (பிரஹதாரண்யகோபநிஷத் **3—7—3.**) என்பதாம். இங்ஙனமே, "எது, ஜலத்திலிருந்து," "எது அக்நியில்," "எது அந்தரிக்ஷத்தில்," "எது ஸ்வர்க்க லோகத்தில்," "எது ஆதித்யனிடத்தில்," என்ப தாதி அநேக பரியாயங்களினுல் ஸர்வாந்தர்யாமியாகிய விஷ்ணு நிருபிக்கப்பட்டிருக்கின்றது. அச் சுருதியின் பொருள் இதுவாம்:— எது பிருதிவியில் இருக்கின்றது. அது அந்தர்யாமி. கடபடாதிகளா? (எனின்,) அற் றன் றென்று கூறுகின்றுர். பிருதிவியினுள் என. இத னுள் ளிருப்பது பிருதிவி தேவதையா? (எனின்,) அற் றன்று என்கின்றுர். எதனைப் பிருதிவி தேவதை யறிய வில்லை அது அந்தர்யாமியாம். பிருதிவி தேவதை தனது ஆத்மாவினை "இது நானுக இருக்கின்றேன்" என அறிவ தில்லை. ஆகலான் அது அன்று. சரீரமா? அது (எனின்,) அன் றென்கின்றுர். எதற்குப் பிருதிவீ சரீரம் என. எதற்குப் பிருதிவியே சரீரம். நியமிக்கப்பட்ட சரீரத்தினின்றும் அந்ய சரீரம் இன்றென்பது பொருளாம். இங்ஙனம் எது உள்ளி லிருந்து பிருதிவியையும், பிருதிவி தேவதையையும், அசைக்கின்றது—தனது வியாபாரத்தில் பிரேரிப்பிக்கின்றது. இது அமிர்தம், கூடஸ்த நித்ய அந்தர்யாமியாம். ஏ! உத்தாலக! உனது ஆத்மாவாம் என. இங்ஙனம் ஸர்வ



பரியாயங்களிலும் பொருளை உணர்க. இங்ஙனம் பிரஹ்மவித்துக்களின் ஸபையில் ஸர்வ அந்தர்யாமித் தன்மையினுல் சித்தித்த விஷ்ணுவை ஸ்துதிக்கின்றுர்.

**सर्वत्रास्ते सर्वशरीरी न च सर्वः**
**सर्वं वेत्त्येवेह न यं वेत्ति हि सर्वः।**
**सर्वत्रांतर्यामितयेत्थं यमयन्य—**
**स्तं संसारध्वांतविनाशं हरिमीडे॥ ॥१२॥**

(பதப் பொருள்.) १. **यः**–எது, २. **सर्वत्र**–பிருதிவியாதிகளில், ३. **आस्ते**—உபாதாந ருபமாக இருக்கின்றதோ, ४. **सर्व—शरीरी**—எல்லாவற்றையும்—சரீரமாக வுடையதோ, ५. **सर्वः**—எல்லாமும், ६. **न**—७. **च**—அன்றே, ८. **इह**–பிருதிவி முதலியவற்றில் இருந்து, ९. **सर्वं**—எல்லாவற்றையும், १०. **वेत्ति**–११. **एव**—அறிகின்றதோ, १२. **यं**—எதனை, १३. **सर्वः**—பிருதிவியாதிகள், १४. **न**—१५. **वेत्ति**—१६. **हि**–அறிவ தில்லையோ, १७. **यमयन्**–பிருதிவியாதிகளை நடத்திக் கொண்டு, १८. **इत्थं**—கூறிய பிரகாரத்தினுல், १९. **सर्वत्र**—எல்லாவிடத்தும், २०. **अंतर्यामितया**—அந்தர்யாமி ருபமாக இருக்கின்றதோ, २१. **तं**–அந்த, २२. **संसार-ध्वांत-विनाशं**—சம்சார-இருளினை-நாசஞ் செய்யும், २३. **हरिं**—ஹரியினை, २४. **ईडे**—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

*எது,* **सर्वत्र** *(ஸர்வத்ர)=ஸர்வவிடத்தும்–பிருதிவியாதிகளில் தந்துக்களில் படம் போன்று உபாதாநத்தினுல் இருக்கின்றது. எவனுக்கு ஸர்வமும் சரீரம் அவன்,*

**सर्वशरीरी** (ஸர்வசரீரீ)=ஸர்வ சரீரியாவன், **न च सर्वः** (ந ச ஸர்வ:)=ஸர்வ மன்று. எது, **न सर्वः** (ந ஸர்வ:)= ஸர்வ மன்று. பின்னையோ, அதிஷ்டாநத்தினால் எல்லா வற்றுள்ளு மிருப்பதாம். எது **इह** (இஹ)=ஈண்டு— பிருதிவியாதிகளில் இருந்து, **सर्वं वेत्ति** (ஸர்வம் வேத்தி)= எல்லாவற்றையும் அறிகின்றது. எதனை **सर्वः** (ஸர்வ:)= பிருதிவியாதிகள் அறிவ தில்லை. "அது வேத்தியத்தினை யறிகின்றது. அதனை அறிவ தின்று." என்பதாதி (சுவேதா சுவதரோபநிஷத் 3—19.) சுருதியால். $ "ஹே அர்ஜுந! நான் சென்றதும் வருவதும் நிகழ்காலத்தி லிருப்பதுமாகிய பூதங்களை அறிவேன் என்னை ஒருவரும் அறியார்" (பகவற் கீதை 7—26.) என்னும் ஸ்மிருதியானும். **यः यमयन्** (ய: யமயந்)=எது பிருதிவியாதிகளைப் பிரேரிப்பித்து விஹித நிஷித்தங்களில் பிரவிர்த்தியினையும், நிவிர்த்தியினையும் செய் விக்கின்றது. **इत्थं** (இத்தம்)=கூறிய பிரகாரத்தினால், ஸர் வாந்தர்யாமித் தன்மையினால் இருப்பதை யென்பது பொரு ளாம். ஆகவே, "தர்மத்தினை யறிகின்றேன், எனக்குப் பிரவிர்த்தி யுண்டாவ தில்லை. அதர்மத்தினை யறிகின்றேன், எனக்கு நிவிர்த்தி யுண்டாவ தில்லை. ஹிருதயத்தின்கண் ணிருக்கின்ற ஒரு தேவனால் எங்ஙனம் ஆட்டி அசைப் பிக்கப்படுகின்றதோ, அங்ஙனமே செய்கின்றேன்," (பாண் டவ கீதை 57.) * "ஹே அர்ஜுந! ஸர்வ பூதங்களின்

$ பகவற் கீதை. "போனவை யினிமேற் புகுதநின் றவையிப் பொழுதுபோ கின்றவை யனைத்தும், யானறிந் திருப்ப னியாவுமா மென்னை யுலகின்மற் றியாவரு மறியார்," 7—22.

* "பொறிக ளுண்ணின்ற வற்றின்பு ணர்ப்பெலா, மறிய வாட்டினன் போலாக்கை கடொறு, மறைவி னின்றுதன் மாயையி னால்வினைக், குறிகள் செய்விப்ப னீசனென் றேகொள்வாய்."18-50



ஹிருதயத்தில் ஈசுவரன் இருக்கின்றான். யந்தரத்தில் ஆரூடம் போன்று மாயையால் ஸர்வ பூதங்களையும் ஆட்டி அசைப்பிக்கின்றான்" (பகவற் கீதை 18—61.) என்னும் ஸ்மிருதியானும்.



ஸர்வ வேதாந்தங்களும் பிரஹ்மத்திற்கு அத்விதீயத் தன்மையும், பிரத்ய காத்மாவிற்கு அதன் ரூபத் தன்மை யும் போதிக்கின்றன. இதில் ஐதரேய சுருதி, "ஸிருஷ் டிக்குப் பூர்வம் இவ் வெல்லா ஜகத்தும் ஒரு ஆத்மா வாகவே யிருந்தன." என்னும் (1—1—1.) அவாந்தர வாக்கியத்தினால், பிரஹ்மத்திற்கு அத்விதீயத் தன்மை யினைக் கூறி, பிரத்ய காத்மாவிற்கு அத்விதீயப் பிரஹ்மத் தன்மையினை மகா வாக்கியத்தினால், "பிரக்ஞை, பிரதிஷ்டை, பிரஞ்ஞாநம் பிரஹ்மம்" (3—3.) எனப் போதிக்கின்றது. தைத்திரீய சுருதியும், "ஸத்திய ஞாநம் அநந்தம் பிரஹ்மம்" என்னும் (2—1.) அவாந்தர வாக்கியத்தினால், அத்விதீயப் பிரஹ்மத்தினைப் புகன்று, "இப் புருஷனிடத்து யாது? இந்த ஆதித்யனிடத்து யாது? அது ஒன்றும்" என்னும் (2—8.) மகாவாக்கியத் தினால், பிரத்ய காத்மாவிற்கு அவ்விதப் பிரஹ்மத் தன்மையினைப் போதிக்கின்றது. அங்ஙனமே சாந் தோக்ய சுருதியாலும், "ஏ ஸௌம்ய! சிருஷ்டிக்குப் பூர்வம் இவ் வெல்லா ஜகத்தும் சத்தாகவே யிருந்தன. ஏகமேவ அத்விதீயம்" (6—2—1.) என்பதாதியால், அவ்விதப் பிரஹ்மத் தன்மையினைப் புகன்று, "தத்த்வ மஸி" (6–8–7.) என்னும் மகாவாக்கியத்தினால், ஜீவப் பிரஹ்மங்களின் அபேதம் போதிக்கப்படுகின்றது இங்

னமே, ஒவ்வோரு வேதாந்தத்திலும் ஆண் டாண்டு அறிக.

அற்றேல், ஆண்டுப் பிரஹ்மத்திற்கு அத்விதீயத் தன்மை யாங்ஙனம்? ஆகாசாதி இரண்டாவது பதார்த் தம் இருத்தலின். பிரத்யக்கிற்கு பிரஹ்மத் தன்மை யாங்ஙனம்? அவ் விரண்டற்கும் பேதமே அநுபவித்த லான் என்னும் சங்கையில். "அது லோகங்களைச் சிருஷ்டிப்பாம் என ஈக்ஷித்தது. அது இந்த லோகங் களைச் சிருஷ்டித்தது", (ஐதரேயோபநிஷத் 1—1.), "அவ் விவ் வாத்மாவினின்றும் ஆகாசம் உண்டா யிற்று." (தைத்திரீயோபநிஷத் 2—1.), "அது அநேக, பிரஜைகளாவோம் என ஈக்ஷித்தது. அது அக்நியைச் சிருஷ்டித்தது" (சாந்தோக்யோபநிஷத் 6—2—3.) என் பன வாதி சிருஷ்டி முதலிய அர்த்த வாத நுப சுருதிகள், ஆகாசாதி ஸர்வ ஜகத்திற்கும், பிரஹ்மத்தினின்றும் உற் பத்தியால், அதன்கண்ணே ஸ்திதியால், மீண்டும் அதன் கண்ணே லயத்தால், மண்ணினின்றும் உண்டாய் நிலைத்து லய மடையும் கடாதிகட்கு மண்ணோ டபேதம் போன்று,காரணப் பிரஹ்ம மாத்ரத்தால் அவாந்தர வாக் கியம் புகன்ற பிரஹ்மத்திற்கு அத்விதீயத் தன்மையினை ஸம்பாவனை செய்கின்றன. அங்ஙனமே "அது இந்தக் கரையைப் பிளந்து கோண்டு இந்தத் த்வாரத்தால் அடைந்தது" (ஐதரேயோபநிஷத் 3—12.), "அது சிருஷ்டித்து அதுவே பிரவேசித்தது." (தைத்திரீயோப நிஷத் 2-6.), "இந்த ஜீவ நுபத்தினுல் பிரவேசித்து" (சாந்தோக்யோபநிஷத் 6—3—2.) என்பன வாதி சுருதி



கள், பிரஹ்மத்திற்கு ஜீவ நுபத்தினுல் பிரவேசத்தினைக் கூறுவனவாய், வெளியி லிருந்து உள் கிரஹத்தில் பிரவேசிக்கும் தேவதத்தனைப் போன்று கூறுதனவாய், மகாவாக்கியத்தினுல் பிரதிபாதிக்கப்படும் ஜீவப் பிரஹ் மங்களின் அபேதத்தினைச் சம்பாவனை செய்கின்றன. அங்ஙனமே, நியமந சுருதிக்கும் அத்தியந்த பேதத்தில், நியம்ய நியாமக பாவம் பொருந்தாமையின், அவ் விரண் டற்கும் அபேதத்தினையே ஸம்பாவனை செய்கின்றது. அங்ஙனமே "அவ் விப் புருஷன் அந்ந ரஸ மயன்", (தைத்திரீயோபநிஷத் 2—1.) "எது, அக்நியின் சிவப்பு நுபம்" (சாந்தோக்யோபநிஷத் 6—4—1) என்பன வாதி தத் த்வம் பதார்த்தங்களின் சோதனை நுப சுருதிகள், ஜீவேசுவரர் என்னும் இருவரிடத்து முள்ள விருத்த தர்ம நிவிர்த்தி வாயிலாய், அவ் விரண்டற்கும் ஐக்கியத் தையே ஸம்பாவனை செய்கின்றன. அங்ஙனமே, "பிரஹ்மவித் பரத்தினை யடைகின்றுன்" (தைத்திரீயோப நிஷத் 2-1.), "அமிர்த மாகின்றுன்." என்பன வாதிகள், அபேத ஞாநத்திற்கு நிரதிசய பலத்தினைக் காண்பித்த லால் அபேதத்தின் அபிப்பிராயத்தினை அறிவிப்பனவாய் அதனையே சம்பாவனை செய்கின்றன. இவ்வாறு, சிருஷ்டி ஸ்திதி லயம் பிரவேசம் ஸம்யமநம் தத் த்வம் பதார்த் தம் பலங்களைப் பிரதிபாதிக்கும் எழ வகைத்தாய அர்த்த வாதங்களால் அநுக்ரஹிக்கப்பட்ட அவாந்தர வாக்யத்தோடு கூடிய மகா வாக்கியம் எந்தத் தத்வத் தினைப் பிரதிபாதிக்கின்றதோ, அதை இப்போழுது ஸ்துதிக்கின்றூர்.

सर्वं दृष्ट्वा स्वात्मनि युक्त्या जगदेतत्
दृष्ट्वात्मानं चैवमजं सर्वजनेषु ।
सर्वात्मैकोऽस्मीति विदुर्यं जनहृत्स्थं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥१३॥

(பதப் பொருள்.) १. सर्वं—எல்லா, २. एतत्—இந்த, ३. जगत्—ஜகத்தும், ४. युक्तया—யுக்தியினுல், ५. स्व—தனது, ६. आत्मनि—ஆத்மாவினிடத்தில், ७. दृष्ट्वा—பார்த்து, ८. एवं—இவ்வாறே, ९. सर्व-जनेषु—எல்லோரிடத்திலும், १०. अजं—அஜமான, ११. आत्मानं १२. च—ஆத்மாவினை, १३. दृष्ट्वा—பார்த்து, १४. जन-हृत्-स्थं-ஜநங்களின்-புத்தி விருத்தியில்-உள்ள, १५. यं—எதை, १६. सर्वं—எல்லா, १७. आत्मा—ஆத்மருப, १८. एकः—ஒன்றுக, १९. अस्मि—இருக்கின்றது, २०. इति—என்று, २१. विदुः—அறிகின்றனரோ, २२. तं—அந்த, २३. संसार-ध्वांत-विनाशं—சம்சார-இருளினை-நாசம் செய்யும், २४. हरिं—ஹரியினை, २५. ईडे—நமஸ்க்கரிக்கின்றேன் என்றவாறு.

**सर्वं** (ஸர்வம்)=ஆகாசாதி, **जगदेतत्** (ஜகதேதத்)=அநுபவிக்கப்படுவது, **स्वात्मनि** (ஸ்வாத்மநி)=தன்னிடத்தில், **युक्त्या** (யுக்த்யா)=யுக்தியால்—ஜடத்திற்கு திருக்கின் சம்பந்த மின்றி விளக்கம் பொருந்தாமையின். திருக் திருசியங்கட்கு ஸையோகம் முதலியன பொருந்தாமையின். விஷய விஷயீ பாவத்திற்கு ஸையோகம் முதலிய முக்கிய ஸம்



பந்த பூர்வமாகலின். எல்லா ஆகாசாதி ஜடப் பிரபஞ்சத்தின் விளக்கம் வேறு வகைத்தாய்ப் பொருந்தாமையின் சித் சக்தியின்கண் அத்யஸ்தத் தன்மையே ஸம்பந்தம் என்பதாதி யுக்தியால், **दृष्ट्वा** (த்ருஷ்ட்வா)=பார்த்து—ஸர்வ ஜகத்தும் தன்னிடத்தில் கற்பிதத் தன்மையினுல் அறிந்து என்பது பொருளாம். “முப்புரங்களிலும் கிரீடிக்கும் ஜீவனிடத்தினின்றும் ஸகல விசித்திரமும் உண்டாயின.” என்னும் (கைவல்யோபநிஷத் 1—14.) சுருதியால். முப்புரங்களில் ஜாக்ரம் முதலிய அவஸ்தாத் திரயங்களில் என்பது பொருளாம். **अजं** (அஜம்)=உற்பத்தி யின்றியதை, அபரோக்ஷத் தன்மையால் அநுபவிக்கப்படும், **आत्मानं** (ஆத்மாநம்)=ஆத்மாவை, **सर्वजनेषु** (ஸர்வஜநேஷு)=உற்பத்தி யுடைய அந்தக் கரணுதி உபாதியை யுடையவர்களிடத்தில், பிரதிபிம்பத்தால் இருப்பதனை, **दृष्ट्वा** (திருஷ்டவா)=அறிந்து, “எவன் யோநியை அதிட்டித்து ஒருவன் இருக்கின்றுன்” (சுவேதாசுவதரோபநிஷத் 4—11.), “பரமாத்தமா, மாயையினுல் அநேகமாகப் பார்க்கப்படுகின்றது.” (பிரஹதாரண்யகோபநிஷத் 2—5—19.), “அக்நி எங்ஙனம் ஒன்று, புவநத்தில் பிரவேசித்து ஒவ்வொரு ரூபங்களைக் குறித்துப் பிரதி ரூபமாய் இருக்கின்றதோ, அங்ஙனம் ஸர்வ பூதங்களுள்ளும் இருக்கும் ஒரு ஆத்மா, ஒவ்வொரு ரூபங்களைக் குறித்துப் பிரதி ரூபமும் வெளியுமாம்” என்பன வாதி (கடோபநிஷத் 5—9.) சுருதிகளால். யோநி மாயை முதலிய சப்தங்கள், அந்தக் கரணம் முதலிய உபாதிபரங்களாம். அநேக ரூபம்—தேவ திரியக் முதலிய அநேக ரூபமாம். பிரதி ரூபம்—ஸமாந ரூபமாம். மற்றவை வெளிப்

படையாம். **सर्वात्मा** (ஸர்வாத்மா)=ஸர்வ, ஆகாசாதிகளின் அதிஷ்டாத்ருத் தன்மையினுலும், தனக்கே ஸர்வ சரீரங்களிலும் ஜீவ ரூபமாகப் பிரவேசிக்கும் தன்மையினுலும் ஸர்வாத்மா—ஸர்வ ரூபமாம். இதனல், **एकः अस्मि** (ஏக: அஸ்மி)=ஒருவனுய் இருக்கின்றேன் என, **यं** (யம்)=எந்த அத்விதீயத்தை, **जनहृत्स्थं** (ஜநஹ்ருத்ஸ்தம்)=ஜநங்களினது, ஹிருதயத்தில்—புத்தியில், ஸ்தம்—நித்திய அபரோக்ஷத்தையென்பது பொருளாம். "எது ஸாக்ஷாத் அபரோக்ஷம் பிரஹ்மம்" என்னும் (பிரஹதாரண்யகோபநிஷத் 3—4—1.) சுருதியினுல். ஸாக்ஷாத்—விருத்தி வியவதாநம் இன்றி என்பது பொருளாம். ஈண்டுச் சுருதி, "ஸர்வ பூதங்களிலுமுள்ள ஆத்மாவை, ஸர்வ பூதங்களையும் ஆத்மாவினிடத்தில் நன்கு பார்த்துப் பரப்பிரஹ்மத்தினை அடைகின்ருன். அந்ய ஹேதுவால் அன்று." (கைவல்யோபநிஷத் 1—10.), "என்னிடத்தில் ஸகலமும் உண்டாகின்றன. என்னிடத்தில் ஸர்வமும் இருக்கின்றன. என்னிடத்தில் ஸர்வமும் லயத்தை யடைகின்றன. அந்த பிரஹ்ம அத்வயம் நானுயிருக்கின்றேன்" (கைவல்யோபநிஷத் 1-19.) என்பன வாதியாம். பொருள் வெளிப்படையாம். 13.

"ஒரு தேவன் ஸர்வ பூதங்களிலும் கூடன், ஸர்வ வியாபி. ஸர்வ பூதாந்தராத்மா கர்மாத்யக்ஷன் ஸர்வ பூதங்களிலும் வசிப்பவன் ஸாக்ஷி சேதா கேவலன் நிர்க்குணன்", (சுவேதாசுவதரோபநிஷத் 6—11.) "இரண்டு ஸுபர்ணங்கள் (பக்ஷிகள்) கூடினவாய் ஸகாயங்கள், ஸமாந விருக்ஷத்தில் வசிக்கின்றன. அவ்விரண்டுள், ஒன்று கர்ம பலத்தின் ருசியைப் புஜிக்கின்றது. மற்றேன்று, அதனைப் புசியாது பார்க்கின்றது". (முண்டகோப



நிஷத் **3—1.**) என்னும் இம் மந்திரங்கள், ஆத்மாவிற்கு அவித்யா கர்த்ருத்வாதிகளையும், பரமார்த்தமாக அதன் இன்மையினையும் போதிக்கின்றன. இரண்டற்கும் இங்ஙனம் பொருளாம்:- புராணப் பிரசித்தமாகிய பிரஹ்ம விஷ்ணு ருத்ரர்களின் பேதத்தினை நிவாரணஞ் செய்கின்றது 'ஒன்று' என. தேவன்-ஸ்வப்ரகாச சித்ருபன். அவன் யாண்டு என்னும் ஆகாங்க்ஷையில் கூறப்படுகின்றது, 'ஸர்வ பூதங்களில்' என-பிரஹ்மாதி ஸ்தம்ப பரியந்தங்களில். ஆயின், ஏன் அநுபவிக்கப்படுவ தில்லை யெனின், கூறப்படுகின்றது 'கூடம்' என. அஞ்ஞாநத்தினுல் மறைக்கப்பட்டிருத்தலினுல் ஸாமாந்ய புத்திமான்களினுல் அநுபவிக்கப்படுவ தில்லை என்பது பொருளாம். அதற்கு மூவித பரிச்சேத மின்மையைக் கூறுகின்றர் ஸர்வ வியாபி என. தேசம் காலம் ஜீவன் ஈசுவரன் ஜகத்து என்னும் எல்லா வற்றையும் வியாபித்து இருக்கும் ஸ்வபாவம் எதற்கு அது, ஸர்வ வியாபியாம். அதனையே பிரதிபாதித்து மூதலில் சேதநத்தினைப் பிரதியோகியாக வுடைய பேதாபாவத்தினைக் கூறுகின்றர், ஸர்வ பூத அந்தராத்மா என. சைதந்யம் ஒன்றே ஸர்வ பூதங்களாகிய பிரஹ்மாதி ஸ்தாவராந்தங்களில் பிரவேசித்து உள்ளில் ஜீவ ருபமாக இருக்கின்றது என்பது பொருளாம். அதுவே, சுத்த சத்வ மாயாப் பிரதிபிம்பத்தால் ஈசுவரனு யிருந்து எல்லோருக்கும் கர்ம பலத்தினைக் கோடுக்கின்றது என்று கூறுகின்றர், கர்மாத்யக்ஷன் என. கர்மங்கள் புண்ணிய பாப ருபங்கள், அத்யக்ஷன்-அதிஷ்டித்துப் பலனைக் கோடுப்பவன் என்பது பொருளாம். ஜடப் பிரதியோகியினை யுடைய பேதத்தினை நிவாரணஞ் செய்கின்றர், ஸர்வ பூதாதிவாஸன் என. ஸர்வம்-பிருதிவியாதிகளாகிய பூதங்களின், அதி

வாஸம்-அதிஷ்டாநம் என்பது போருளாம். ஆரோபிதத்திற்கு அதிஷ்டாநத்தினின்றும் அந்ய மின்மையின், அதனுல் நிருபிக்கப்படும் பேதம் இன் றேன்பது போருளாம். ஜீவேசுவர நுப மாக யிருத்தலால், அடையப்பட்ட புண்யம் முதலிய கர்த்ருத்தன்மையும், ஜகத்தினைச் சிருஷ்டித்தல் தன்மை முதலியனவும் நிவாரணஞ் செய்யப்படுகின்றது, ஸாக்ஷி என. தனது சந்நிதியில் பிரவிர்த்திக்கும் காரிய கரணங்கட்கும், ஜகதாகாரமாகப் பரிணமிக்கும் அவித்தைக்கும், ஸாக்ஷி — ஸாக்ஷாத் ஈக்ஷிப்பவன். ஸாக்ஷித் தன்மையில் ஹேதுவினைக் கூறுகின்றுர், சேதா என. சைதந்ய நுபம் என்பது போருளாம். உண்மையாக ஸாக்ஷித் தன்மை முதலியன இன்மையைக் கூறுகின்றுர் கேவலம் என. ஸகல விசேஷ சூந்யம் என்பது போருளாம். ஞாந ஆநந்தங்கட்கு குணத் தன்மை சிலர் இச்சிக்கின்றனர் அதனை நிவிர்த்திக்கின்றுர், நிர்க்குணன் என. "விஞ்ஞாநம் ஆநந்தம் பிரஹ்மம்" என்னும் (பிரஹுதாரண்யகோபநிஷத் 3-9-28.) சுருதியால், ஞாநம் ஆநந்தம் என்பன ஸ்வநுபமே என்பது போருளாம். ஸுபர்ணங்கள்-ஸுபர்ணம் போன்று ஸுபர்ணங்கள். கூடின (11) நித்யம் நீங்காதன. ஸகாயங்கள்-சித்து நுபங்கள், அந்தக்கரண உபஹிதம் உபஹித மற்றன. ஸமாந விருக்ஷத்தில், वृश्च्यते தத்வ ஞாநத்தினுல் மூல ஸஹிதம் நாசஞ் செய்யப்படுவது விருக்ஷமாம். காரிய கரண உபாதியாம். அதனை ஆசிரயிக்கின்றன. எங்ஙனம், லௌகிக பக்ஷிகள் பரஸ்பரம் ஸகாயங்கள். ஒரு அரசாதி விருக்ஷத்தை ஆசிரயிக்கின்றன; அது போன்று. அவ்விரண்டுள் ஒன்று கர்ம பலத்தை ரஸம் போன்று



அநுபவிக்கின்றது. இது உபலக்ஷணமாம். ஸுக துக்கம் என்பது போருளாம். புஜிக்கின்றது-கர்த்ருத்வாதி நுப காரிய கரண விவேக மின்மையால் புஜிக்கின்றது. மற்றேன்று—காரிய கரணத்தினின்றும் விவேக முடையது. பார்க்கின்றது—கர்த்ருத்வ போக்த்ருத்வ நுப காரிய கரணத்தைக் கேவலம் பார்க்கின்றது என்பது போருளாம். இங்ஙனம், இம் மந்திரங்களால் அவித்தியாவஸ்தையில் கர்த்ருத்வாதி நுபத் தன்மையால், ஸ்வயம் ஸாக்ஷி கூடஸ்த சிந்மாத்ர நுபத்தினுல் பிரதிபாதிக்கப்படும் விஷ்ணுவை ஸ்துதிக்கின்றுர்.

सर्वत्रैकः पश्यति जिघ्रत्यथ भुंक्ते
स्प्रष्टा श्रोता बुध्यति चेत्याहुरिमं यम् ।
साक्षी चास्ते कर्तृषु पश्यन्निति चान्ये
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥१४॥

(பதப் போருள்.) ௧. सर्वत्र—யாண்டும், ௨. एकः—ஒருவனு யிருந்தும், ௩. पश्यति—பார்க்கின்றுன், ௪. जिघ्रति—முகருகின்றுன், ௫. अथ—பின், ௬. भुंक्ते—புஜிக்கின்றுன், ௭. स्प्रष्टा—பரிசிக்கின்றுன், ௮. श्रोता—கேட்கின்றுன், ௯. बुध्यति=௧௦. च—அறிகின்றுன், ௧௧. इति—என்று, ௧௨. यं—எந்த, ௧௩. इमं—இந்த அவித்யாவஸ்துவை, ௧௪. आहुः—கூறுகின்றனரோ, ௧௫. अन्ये—விவேகிகள், ௧௬. कर्तृषु—காரிய கரணங்களில், ௧௭. पश्यन्—விளக்கிக்கோண்டு, ௧௮. साक्षी-௧௯. च—சாக்ஷி

யாக, २०. **आस्ते**—இருக்கின்றது, २१. **इति**–२२. **च**—என்று (கூறுகின்றனரோ), २३. **तं**—அந்த, २४. **संसार–ध्वांत–विनाशं**—சம்சார–இருளினை–நாசம் செய்யும், २५. **हरिं**—ஹரியினை, २६. **ईडे**—நமஸ்க்கரிக்கின்றேன் என்றவாறு.

**सर्वत्र** (ஸர்வத்ர)=பிரஹ்மாதி ஸ்தாவராந்தங்களாகிய காரிய காரண சங்காதங்களில், பிரவேசித்து உண்மையாக, **एकः** (ஏக:)=ஒன்றாய் இருந்தும் அநேக பிரகாரமாகப் பேதமாய், **पश्यति** (பச்யதி)=தரிசந வியாபாரத்தைச் செய்கின்றது. **जिघ्रति** (ஜிக்ரதி)=க்ராணேந்திரியத்தினால் கந்தத்தினைக் கிரஹிக்கின்றது. **भुंक्ते** (புங்க்தே)=போஜநஞ் செய்கின்றது. **स्प्रष्टा** (ஸ்ப்ரஷ்டா)=த்வக்கால் சீதோஷ்ணத்தை அறிகின்றது. **श्रोता** (சுரோதா)=சுரோத்திரத்தினால் சப்தத்தினைக் கிரஹிக்கின்றது. **बुध्यति** (புத்யதி)=கேவலம் உள்ளிலுள்ள புத்தியால்—சென்றதையும் வருகின்றதையும் அறிகின்றது. சகாரமானது கூறப்படாத ஸர்வேந்திரிய வியாபாரங்களின் ஸமுச்சயத்தின் பொருட்டாம். இங்ஙனம், அநேக வியாபார முடைமையால், **यम् इमं** (யம் இமம்)=எந்த இதை—அபரோக்ஷமாக அநுபவிக்கப்படும் அவித்தியா அவஸ்தையைக் கூறுகின்றனர். **अन्ये** (அந்யே)=விவேகிகள். அல்லது வாஸ்தவ ஸ்வரூபத்தினைப் பிரதிபாதிக்கும் மந்திரங்கள், **कर्तृषु** (கர்த்ருஷு)=காரிய காரண உபாதிகளில், தனது வியாபாரத்தில் பிரவிர்த்திப்பதில், **पश्यन्** (பச்யந்)=கர்த்ரு காரிய கரணங்களை விளக்கிக் கொண்டு, **साक्षी** (ஸாக்ஷீ)=கேவலமாக, **आस्ते** (ஆஸ்தே) =இருக்கின்றது. பரமார்த்தமாக அற்பமும் செய்வ தில்லையென்று எதனைக் கூறுகின்றனர் அதனை யென்பது பொரு



ளாம். அது, வாசிஷ்ட ராமாயணத்தில், * "இந்தப் பெரிய அநந்த ஜகத் ஸமூஹத்தை ஸிருஷ்டித்தும் ஒரு காலத்தும் பரமார்த்தமாகச் செய்வ தில்லை. தனது ஆத்மாவினிடத்தில், ஒடுக்க மின்றிய ஸம்வித்தாகிய நிர்விகல்பத்தில், உத்பத்தி ஸ்திதி மரணம் இன்றியதில், ஒன்றாகவே இருக்கின்றது." (3—5—82) என்று கூறப்பட்டிருக்கின்றது. 14.

அற்றேல், இங்ஙனம், ஆத்மாவிற்கு கர்த்ருத்வாதி ரூபத்தன்மை, அஃதின்றிய தன்மை யென்னும் இரண்டினையும் பிரதிபாதிக்கும் சுருதி ஸ்மிருதிகள் இருக்குங்கால் இரண்டில் ஒன்று மித்யாத் தன்மை ஏன் அங்கீகரிக்கப்படுகின்றது; ஸ்வாபாவிகத் தன்மை ஔபாதிகத் தன்மைகளால், இரண்டற்கும் வாஸ்தவத் தன்மை போருந்துதலின். அல்லது, இரண்டி லொன்று மித்யாத்தன்மையில் அகர்த்ருத்தன்மைக்கே மித்யாத்தன்மை ஏன் உண்டாகாது என ஆசங்கித்து ஸ்வயம் விருத்தமாய இரண்டற்கு உபாதியானும் ஓரிடத்து இருத்தல் போருந்தாமையின். ஸ்படிகத்தில் ஔபாதிகமான சிவப்பிற்கு வாஸ்தவத் தன்மை பார்க்கப்படாமையின். கர்த்ருத்வாதிகட்கு வாஸ்தவத் தன்மையில் ஸுஷுப்தி முதலியவற்றிலும் அதன் பிரசங்கத்தால் கர்த்ருத்வாதிகட்கே காரிய காரண அந்வய வ்யதிரேக அநுவிதாநம் பார்க்கப்படுதலின். சூத்திரக்காரராலும் "எங்ஙனம் தக்ஷனது உபயத்

* ஞான வாசிஷ்டம் ஞாந விண்மகன் கதை, "இத்தனையுஞ் செய்யவுந்தா னித்தனையுஞ் செய்யாம லிருக்குமன்றே." 33.

"நிருவிகற்ப வான்மாவிற் சகத்தோற்ற மொடுக்கமிவை யோரா யில்லை." 33¼.

தன்மை” என்னும் (பிரஹ்ம சூத்திரம் **2-3-40.**) சூத்ரத்தி னல் எங்ஙனம் லோகத்தில் வாஸ்யாதி ஸாதநங்களைக் கையிலுடைய தக்ஷனுகிய கர்த்தா துக்கியாகின்றன். அவனே வாஸ்யாதி சாதநங்களை விட்டால் ஸ்வஸ்தனுய் ஸுகியாகின்றன். இங்ஙனம் அவித்தையினல் உண்டாக் கப்பட்ட காரிய காரண உபாதியையுடைய ஆத்மா ஸ்வப்ந ஜாகரங்கட்குக் கர்த்தாவாய்த் துக்கியாகின்றது. அதுவே அந்தச் சிரமம் நீங்கும் பொருட்டுத் தன தாத்மாவினைப் பரமாத்மாவில் பிரவேசிக்கச்செய்து காரிய காரண சங்கா தங்களை விட்டு அகர்த்தாவாய்ச் சுகியாகின்றது. ஆகலின், கர்த்ருத்வத்திற்கு ஔபாதிகத் தன்மை கூறப்படுவதால், ஔபாதிகத்திற்கு ஸத்தியத் தன்மை பொருந்தாமையின். அநுபவமும், அதன் பரமாகிய சுருதி விரோதத்தினுல் பிராந்தி யாகலின். காரிய காரண உபாதி யியற்றிய பிராந் தியே ஆத்மாவின் கர்த்ருத் தன்மை முதலியன பாரமார்த் திக மன்று என்னும் அபிப்பிராயத்தினுல் கூறுகின்றர்.

पश्यन् शृण्वन्नत्र विजानन् रसयन् सन्
जिघ्रन् बिभ्रद्देहमिमं जीवतयेत्थम् ।
इत्यात्मानं यं विदुरीशं विषयज्ञं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥१५॥

(பதப் பொருள்.) १. अत्र—இவ்விடத்து, २. इमम्—இந்த, ३. देहं—தேஹத்தினை, ४. जीवतया—ஜீவருப மாக, ५. बिभ्रत्—பிரவேசித்திருந்து, ६. शृण्वन्—கேட்டு,



७. इत्थं—இவ்வாறு, ८. पश्यन्—பார்த்து, ९. विजानन्—நிச்சயித்து, १०. रसयन्—ருசித்து, ११. जिघ्रन् सन्—மோந்து கொண்டு, १२. इति—(இருக்கின்றது) என்று, १३. यं—எந்த, १४. विषयज्ञं—விஷயத்தினை உணர்வ தாகிய, १५. आत्मानं—ஆத்மாவினை, १६. ईशं—ஈசுவர னுகவே, १७. विदुः—அறிகின்றனரோ, १८. तं—அந்த, १९. संसार—ध्वांत—विनाशं—சம்சார—இருளினை—நாசம் செய்யும், २०. हरिं—ஹரியினை, २१. ईडे—நமஸ்க்கரிக் கின்றேன், என்ற வாறு.

इमं देहं (இமம் தேஹம்) = இந்தத் தேஹத்தை, காரிய காரண ஸங்காதத்தை, जीवतया (ஜீவதயா) = ஜீவ ரூபமா கப் பிரவேசித்து, बिभ्रत् (பிப்ரத்) = தரித்து, ஆத்மா, इत्थं (இத்தம்) = இவ்வாறு, நெத்திரோபாதியினல், पश्यन् (பச் யந்) = பார்க்கின்றதாகின்றது. அங்ஙனமே, சுரோத்திர உபா தியினல், शृण्वन् (சிருண்வந்) = ஸப்தத்தைக் கிரஹிப்ப தாகின்றது. அங்ஙனமே, புத்தி உபாதியினல், विजानन् (விஜாநந்) = நிச்சயஞ் செய்கின்ற தாகின்றது. அங்ஙனமே, ரஸநேந்திரியத்தினல், रसयन् (ரஸயந்) = ரஸத்தினைக் கிர ஹிப்பதாகின்றது. அங்ஙனமே, கிராணேந்திரியத்தினல் கந்தத்தை, जिघ्रन् (ஜிக்ரந்) = கிரஹிப்பதாகின்றது. உண் மையில் அன்று. ஆகவே, “இந்திரிய மநங்களோடு கூடிய ஆத்மா போக்தா எனப் பண்டிதர்கள் கூறுகின்றனர்.” என்னும் (கடோபநிஷத் 3–4.) சுருதியாம். இதன் பொருள் இதுவாம்:— ஆத்ம சப்தத்தினல் புத்தி கூறப்படுகின்றது. புத்தி முதலிய உபாதிகளோடு கூடிய ஆத்மாவைக் கர்த்தா போக்தா வென்று கூறுகின்றனர். அல்லது, ஆத்மா ஜீவ

ஞம். (ஜீவர்) இந்திரிய மநங்களோடு கூடிப் போக்தா வாம் என்று கூறுகின்றனர் (எனக் கொள்க). முதல் வேற்றுமையின் ஸ்தாநத்தில் இரண்டாம் வேற்றுமை சாந் தஸமாம். இங்ஙனம், **यं** (யம்) = எந்த, **विषयज्ञं** (விஷயக்ஞம்) = விஷயத்தை அறிவதாகிய, **आत्मानं** (ஆத்மாநம்) = ஆத் மாவை, **ईशं** (ஈசம்) = ஈசனுகவே, **विदुः** (விது:) = தமது வாஸ்தவ ரூபத்தால் அறிகின்றனர், அதை யென்பது பொருளாம். 15.

மாண்டுக்யத்தில் "அவ்விவ் வாத்மா நான்கு பாதங் களை யுடையது. (2) ஜாக்கிர ஸ்தாநம், பஹிர் பிரஜ்ஞை, ஏழ அங்கம், பத் தோன்பது முகம், ஸ்தூல போகத்தை அநுபவிக்கும் வைசுவாநரன் பிரதம பாதமாம். (3) ஸ்வப்ந ஸ்தாநம் அந்தர் பிரஜ்ஞை, ஏழங்கம் பத் தோன் பது முகம், பிந்ந பிந்நமாகப் போகங்களை யநுபவிக்கும் தைஜஸன் இரண்டாவது பாதமாம். (4) யாண்டு தூங்கி னவன் ஒன்றினையும் இச்சிப்ப தில்லை, ஒரு ஸ்வப்நத்தினை யும் பார்ப்ப தில்லை, அது சுழுத்தியாம். சுழுத்தி ஸ்தாநத் தில் ஒன்றுகச் சேர்ந்த பிரக்ஞாந கநமே ஆநந்தமயம். ஆநந்தத்தினை அநுபவிக்கும் சைதந்ய முகப் பிராக்ஞன் மூன்றவது பாதமாம். (5) அதிருசியம் அவ்யவகார்யம் அக்ராஹ்யம் அலக்ஷணம் அசிந்தியம் அவ்யபதேசியம் ஒரு ஆத்ம ஞாந ஸாரம், பிரபஞ்ச உபசமம், சாந்தம், சிவம், அத்வைதத்தை நான்காவதாக அங்கீகரிக்கின்ற னர். (7)" எனக் கேட்கப்படுகின்றது. இது பொருளாம்:- அவ்விவ் வோங்காரத்தால் பிரதிபாதிக்கப்படும் ஆத்மா விசுவாதி ரூப நான்கு பாத முடையது. ஆண்டு முதற்



பாதம் காண்பிக்கப்படுகின்றது, "ஜாக்ரம்" என்ப தாதி யால். ஜாக்ர ஸ்தாநம்-விஷயம் வெளிப்படும் ஸ்தாந மாம். பஹிர்-தேகத்தினின்றும் வெளி விஷயங்களில் ஞாநம். (ஏழங்கம்—) ஸ்வர்க்கம் சிரஸ், ஆதித்யன் நேத்ரம், அக்நி முகம், வாயு பிராணன், ஆகாசம் சரீர மத்தியம், ஸமுத்ரம் மூத்ரம், பிருதிவியே பாதங்கள் என ஏழங்கங்களாம். பத் தோன்பது முகம்—ஞாநேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, பிராணன் ஐந்து, அந்தக் காரணம் நான்கு என்பன பத் தோன்பதாம். முகம் விஷ யம் வெளிப்படுதற்கு வாயில். ஸ்தூல போகத்தை அநு பவித்தல்-ஸ்தூலமாகிய பஞ்சீகிருத பூத காரியமான கட படாதிகளைப் பார்த்தலாம். வைசுவாநரன்-வைசுவாநர க்ரஹணம், வியஷ்டி ஸமஷ்டி அபிமாநிகளின் அபேத அபிப்பிராயத்தினுல் விசுவன் என்பது பொருளாம். இது முதற் பாதமாம். ஸ்வப்ந ஸ்தாநம் வாசநா மய போக ஸ்தாநமாம். அந்தர்-தேகத்தினுள் வாஸநாமயப் பிரபஞ்ச விஷய ஞாநமாம். பிந்ந பிந்நம்-ஸூக்ஷ்ம வாஸநாமய மாத்திர ரூப விஷயம். தைஜஸன்-தேஜஸாகிய லிங்கத் தில் உற்பத்தியானவன், அதன் அபிமாநி என்பது பொரு ளாம். அது இரண்டாவது பாதமாம். தூங்கிய புருஷன் எந்த அவஸ்தையில் ஒரு இச்சையினையும் இச்சிப்ப தில்லை. ஒரு ஸ்வப்நத்தினையும் பார்ப்ப தில்லை அது சுழுத்தி யெனச் சுழுத்தி அவஸ்தை நிருபிக்கப்பட்டிருக் கின்றது. "ஒன்றையும்" என்னும் வசநத்தினுல் ஜாக்கி ரத்தினையும் ஸ்வப்ந மென்றே கருதுகின்றது சுருதி. சுழுத்தி ஸ்தாநத்தினை யடைந்த புருஷன், ஒன்றுகச் சேர்ந்த—ஏகத் தன்மையினை யடைந்த—அநேகப் பிர

கார மாகப் பகுக்கும் சக்ஷுராதிகள் அக்கால் லய மாகலின். இதனுல், பிரக்ஞாந கநமே—நாநாத் தன் மையினை அடையாத பிரக்ஞாநகநம், ஆநந்த மயம்= ஆநந்த மிகுதி; துக்க ஹேதுவாகிய லிங்கம் உபரம மாகலின். ஆநந்தம்—ஸ்வநுபாநந்தமே. ஆநந்த போகத்தில் ஸாதநம் கூறப்படுகின்றது, சைதந்ய முகம் என. சித்துப் பிரதிபிம்பத்தோடு கூடிய ஆஞ்ஞாநவிர்த் தியே, முகம்—ஆநந்த போஜநத்தில் வாயில், பிராஞ் ஞன்—நன்கு உள்ளிலும் வெளியிலும் அறிகிற தில்லை. இது மூன்றவது பாதமாம். அவஸ்தாத்திரயங்களில் அநுஸ்யூதமான சுத்த சைதந்யமே நான்காவது பாத மாம் எனக் கூறப்படுகின்றது, அதிருசியம் என்பதாதி யால். அதிருசியம்—ஞாநேந்திரிய அவிஷயத்தை, அவ்ய வகாரியம்—(கொள்ளல்) தள்ளல் முதலிய வியவகார அகோசரத்தை, அக்ராஹ்யம்--கர்மேந்திரிய அவிஷ யத்தை, அலக்ஷணம்—லக்ஷணம்—லிங்கம், அஃதின் றியதை, அநுமான அவிஷயத்தை என்பது பொரு ளாம். அசிந்தியம்--அந்தக்கரண அகோசரத்தை, அவ்யபதேசியம்—சப்த அவிஷயத்தை, அதன் பிர விர்த்தி நிமித்தமாகிய ஜாதி முதலியன இன்மையின். பின்னையோ, ஒரு ஆத்ம ஞாந ஸாரம்—ஒன்று அத்விதீ யம், ஆத்மா—ஸ்வநுபம், ஞாநம்—பிரகாசமே, ஸாரம் —பலம், தனது இருப்பில் பிரமாணம் எதற்கோ அதை. பிரபஞ்ச உபசமம்—பிரபஞ்ச நிவிர்த்தி நுபத்தை, ஆரோபிதத்தின் அபாவத்திற்கு அதிஷ்டாந அபிந்நத் தன்மையினுல். சிவம்—ஆநந்த நுபத்தை, அத்வைத —த்வைத மின்றியதை, பிரஹ்மமே நான்காவது



பாத மென வித்வான்கள் அங்கீகரிக்கின்றனர். இங்ஙனமே, வேறு கைவல்யோபநிஷத் முதலியவற்றிலு மாம். ஆத்மாவிற்கு அவித்தையினுல் அவஸ்தையுடை யதும் ஸ்வயம் அஃதின்றியதும் கேட்கப்படுகின்றது. அவ்வித சுருதி சித்த விஷ்ணுவை இப்பொழுது ஸ்துதிக் கின்றர்.

जाग्रद्दृष्ट्वा स्थूलपदार्थानथ मायां
दृष्ट्वा स्वप्नेऽथापि सुषुप्तौ सुखनिद्राम् ॥
इत्यात्मानं वीक्ष्य मुदास्ते च तुरीये
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥ १६ ॥

(பதப் பொருள்.) १. जाग्रत्—ஜாக்கிரத்தில், २. स्थूल—पदार्थान्—ஸ்தூல—பதார்த்தங்களை, ३. दृष्ट्वा—அநுபவித்து, ४. अथ—பின், ५. स्वप्ने—ஸ்வப்நத்தில், ६. मायां—பொய்யாகிய வாசநாமயத்தினை, ७ दृष्ट्वा—பார்த்து, ८. अथ—९. अपि—பின்னரும், १०. शुषुप्तौ—சுழுத்தியில், ११. सुख—निद्रां—சுகத்தினை உண்டாக்கும் அஞ்ஞாநத்தினை (அநுபவித்து), १२. इति=இவ்வாறு, १३. आत्मानम्—ஆத்மாவை, १४. तुरीये—१५. च—சமாதியவஸ்தையில், १६. वीक्ष्य—பார்த்துக்கொண்டு, १७. मुदा—சந்தோஷமாக, १८. आस्ते—இருக்கின்றதோ, १९. तं—அந்த, २०. संसार-ध्वांत-विनाशं—சம்சார-இருளினை-நாசம் செய்யும், २१. हरिं—ஹரியினை, २२. ईडे—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

**जाग्रत्** (ஜாக்ரத்)=ஜாக்ரத்திலிருக்கும் எது, **स्थूल पदार्थान्** (ஸ்தூல பதார்த்தாந்)=பஞ்சீகிருத பூத காரியங்களை, **दृष्ट्वा** (த்ருஷ்ட்வா)=அநுபவித்து, **अथ** (அத)=அநந்தரம், **स्वप्न मायां** (ஸ்வப்நே மாயாம்)=ஸ்வப்ந மாயையில், மித்தையாகிய ரதம், கஜம் முதலிய வாஸநாமயத்தை, **दृष्ट्वा** (த்ருஷ்ட்வா)=பார்த்து, **सुषुप्तौ सुखनिद्राम्** (ஸுஷுப்தௌ ஸுகநித்ராம்)=சுழுத்தியில், தனது சுகத்தினை வெளிப்படுத்தும் கேவல அஞ்ஞாநத்தை அநுபவித்து, அவித்யாதசையில், **इति** (இதி)=இவ்வாறு, **आत्मानं** (ஆத்மாநம்)=ஆத்மாவை, **तुरीये स्ताने** (துரீயே ஸ்தாநே)=ஸமாதி யவஸ்தையில், ஸ்வரூபமாகக் கேவலம், **वीक्ष्य मुदा आस्ते** (வீக்ஷ்ய முதா ஆஸ்தே)=பார்த்துக்கொண்டு சந்தோஷமா யிருக்கின்றது—தனது ஆத்மாநந்த அநுபவத்தினால் ஜநிக்கப்பட்ட சந்தோஷத்தினால் இருக்கின்றது அதை என்பது பொருளாம்.

அற்றேல், அவஸ்தாத்ரய விசிஷ்டமாய், சுகியாய்த் துக்கியாய் ஆத்மா ஒவ் வோரு தேகத்திலும் பிந்நமாகவே விளங்குகின்றது. அதற்கு ஏகத் தன்மையில் சுகித் தன்மை துக்கித் தன்மை முதலிய வைசித்திரியம் பொருந்தாமையானும் தேவதத்தனுக்கு யஞ்ஞ தத்தனது துக்கம் முதலியன அநுஸந்தாநப் பிரஸங்கத்தானும். எங்ஙனம், அத்விதீய ஆநந்த ரூபத்தினால், வேதாந்தத்தால் அறியப்படும் தன்மை யெனச் சங்கித்து, அது எல்லாத் தேகங்களிலும் உண்மையில் ஒன்றாகவே யிருப்பினும், அவச்சேதக உபாதியால் அநிர்வசநீய பேதம் அங்கீகரித்தலின். ஒரு சரீராவச்சிந்ந ஆத்மாவில் “பாதத்தில் எனக்குத் துக்கம், சிரஸில் எனக்குச்



சுகம்” என்னும் அநுபவ அநுஸாரத்தினால் அந்த அந்த அவயவ அவச்சேதத்தினால் சுக துக்க வைசித்திரியம் போன்று ஒன்றனிடத்திலும் அந்தந்தச் சரீராவச்சிந்நத்தினிடத்தில் அது பொருந்துகின்றது. தேக பேதத்தால் ஜந்மாந்தரத்தி லுள்ள ஸுகாதிகளின் அநுஸந்தாந மின்மை போன்று தேவதத்தனுக்கு யஞ்ஞதத்தனது சுகாதி அநுஸந்தாநம் பொருந்தாமையானும் என்று கூறுகின்றார்.

पश्यन् शुद्धोऽप्यक्षर एको गुणभेदान्
नानाकारान् स्फाटिकवद्भाति विचित्रः ॥
भिन्नश्छिन्नश्चायमजः कर्मफलैर्य-
स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥१७॥

(பதப் பொருள்.) १. **यः**—எது, २. **शुद्धः**—சுத்தம், ३. **अक्षरः**—அக்ஷரம், ४. **अजः**—உத்பத்தியின்றியது, ५. **एकः**—६. **अपि**—ஏகமாயினும், ७. **गुण—भेदात्**—குண—பேதத்தினால், ८. **नाना—आकारान्**—அநேக—பேதங்களை, ९. **पश्यन्**—பார்த்து, १०. **कर्म—फलैः**—கர்ம—பலமாகிய சுக துக்கங்களால், ११. **विचित्रः**—நாநாரூபமாய், १२. **भिन्नः**—அநேகமாய், १३. **स्फाटिक-वत्**—ஸ்படிகம்—போன்று, १४. **भाति**—விளங்குகின்றதோ, १५. **अयं**—१६. **च**—இத்தேகத்தினுள், १७. **छिन्नः**—அறியப்படாததாகின்றதோ, १८. **तं**—அந்த, १९. **संसार—ध्वांत—विनाशं** சம்சார—இருளினை—நாசம் செய்யும், २०. **हरिं**—ஹரியினை, २१. **ईडे**—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

**यः** (ய:)=எது, ஸ்வயம், **शुद्धः** (சுத்த:)=சுக துக்காதி சம்பந்த சூந்யம், **अक्षरः** (அக்ஷர:)=நாச ரகிதம், அல்லது, வியாபகம், **अजः** (அஜ:)=உற்பத்தி யின்றியது, **एकः** (ஏக:)=அத்விதீய மாயினும், **गुणभेदात्** (குணபேதாத்) =ஸத்வ ரஜ தம பரிணாம பேதத்தினால், **नानाकारान्** (நாநாகாராந்)=ஸுர நர திர்யக்காதி ஆகார பேதங்களை, **पश्यन्** (பஸ்யந்)=பார்த்து, ஆண்டு, தாதாத்மிய அத்யாஸத்தினால், **कर्मफलैः** (கர்மபலை:)=சுக துக்கங்களால், **विचित्रः** (விசித்ர:)=நாநாரூபமாய், **भिन्नः** (பிந்ந:)=அநேகமாய், பரிச்சிந்நமாய், **स्फाटिकवद्भाति** (ஸ்பாடிகவத் பாதி)=ஸ்படிகம் போன்று விளங்குகின்றது. எங்ஙனம், ஸ்படிகக் கல் சிவப்பு முதலிய உபாதி பேதத்தினால், விசித்ரமாயும், அநேகமாயும் விளங்குகின்றதோ, அங்ஙனமே என்பது பொருளாம். **अयं छिन्नः** (அயம் சிந்ந:)=தேகத்தினுள் அறியப்படாததாகின்றது. ஆகவே, சுருதி, "ஒரே பூதாத்மா பூதங்கள் தோறும் இருக்கின்றது. ஜலத்தில் சந்திரன் போன்று ஏகமாகவும் நாநாவாகவும் பார்க்கப்படுகின்றது." (பிரஹ்ம பிந்தூபநிஷத் 12.) எனக் கூறுகின்றது. பூதம்—பரமார்த்த ஆத்மா. பூதங்கள் தோறும்—தேஹங்கள் தோறும். ஏகம்—தனது ரூபத்தால். நாநாவாகவும்—உபாதி ஸம்பந்த ரூபத்தினால் என்பது பொருளாம். ஸூத்ரக்காரரும், "அஸந்ததியால் அவ்யதிகரம்" (பிரஹ்ம ஸூத்ரம் 2—3—49.) என்னும் ஸூத்திரத்தினால், அஸந்ததியால்—உபாதிபரிச்சேதத்தினால், அவ்யதிகரம்—ஜீவர்களின் ஸுக துக்காதிகளின் ஸாங்கரிய மின்மை யெனத் தமது மதத்தில் சுக துக்காதி வைசித்திரியத்தை உபபாதநம் செய்து, "அதிருஷ்ட அநியமத்தால்" (பிரஹ்ம ஸூத்ரம் 2—3—51.) என்பதாதி ஸூத்



திரம் மூன்றினால் ஸர்வகத வாஸ்தவ அநேக ஆத்ம வாதி மதத்தில் ஸர்வ சரீரங்களிலும் எல்லா ஆத்மாக்களின் சந்நிதானத்தால் ஸர்வ சந்நிதியில் உண்டாகும் அதிருஷ்டத்தின் ஸாதாரண்யத்தால் சுக துக்காதிகளின் ஸாங்கர்யத்தை அடைவித்திருக்கின்றார். அதனால், ஒரு ஆத்மாவில் தோஷமின்மையின். ஆகலின், அத்வய ஆநந்த ரூபத்தினால் வேதாந்த வேத்தியத் தன்மை பொருந்துகின்றது என்பது தாத்பரியமாம். 17.

"இந்த்ரனை, மித்ரனை, வருணனை, அக்நியைக் கூறுகின்றனர். இதனால் திவ்யமாம். அது ஸுபர்ணத்தோடு கூடியது. கந முடையது.......", "ஒன்று யிருப்பதே பிராஹ்மணர்கள் அநேகமாகக் கூறுகின்றார்கள். அக்நி, பநி, வாயு என்று கூறுகின்றனர்.", "அதுவே அக்நி, அது வாயு, அது ஸூரியன், அது சந்திரன்," "அது சுக்ரம், அமிர்தம், அது பிரஹ்மம், அது ஆபம், அது பிரஜாபதி,", "அது பிரஹ்மா, அது சிவன், அது இந்திரன், அது அக்ஷரம், பரமம், ஸ்வராட், அதுவே விஷ்ணு, அது பிராணன், அது காலம், அக்நி, அது சந்திரன்" (கைவல்யோபநிஷத் 1–8.) என்பதாதி மந்திரங்கள் பிரஹ்மத்திற்கே ஸகல தேவதை ரூபமாக இருத்தலைக் கூறுகின்றன. சுக்ரம்=ஜோதியை யுடையது. பிரஹ்ம வேதமாம். ஆப சப்தத்தால் அதன் அதிஷ்டாந வருணன் கூறப்படுகின்றான். பிராணன்–வாயுவாம், காலம்–பிரஜைகளைக் கொல்லும் யமனும். இம் மந்திரங்களால் ஸர்வ தேவதை ரூபமாகச் சித்தித்த விஷ்ணுவினை ஸ்துதிக்கின்றார்.

**ब्रह्माविष्णू रुद्रहुताशौ रविचन्द्रा-**
**विन्द्रो वायुर्यज्ञ इतीत्थं परिकल्प्य ॥**
**एकं सन्तं यं बहुधाहुर्मतिभेदात्**
**तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥१८॥**

(பதப் பொருள்.) १. **एकं**—ஒன்றய், २. **संतं**—இருந்தும், ३. **यं**—எதனை, ४. **ब्रह्मा**—பிரஹ்மா (என்றும்), ५. **विष्णुः**—விஷ்ணு (என்றும்), ६. **रुद्रः**—ருத்ரன் (என்றும்), ७. **हुत—अशः**—அக்நி (என்றும்), ८. **रविः**—சூரியன் (என்றும்), ९. **चंद्रः**—சந்திரன் (என்றும்), १०, **इंद्रः**—இந்திரன் (என்றும்), ११. **वायुः**—வாயு (என்றும்), १२. **यज्ञः**—யக்ஞம், १३. **इति**—என்றும், १४. **इत्थं**—இவ்வாறு, १५. **मति**—புத்தி, १६. **भेदात्**—பேதத்தினல், १७. **परिकल्प्य**—கற்பித்து, १८. **बहुधा**—அநேக பிரகாரமாக, १९. **आहुः**—கூறுகின்றனரோ, २०. **तं**—அந்த, २१. **संसार—ध्वांत—विनाशं**—சம்சார—இருளினை—நாசம் செய்யும், २२. **हरिं**—ஹரியினை, २३. **ईडे**—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

**ब्रह्मा** (ப்ரஹ்மா)=அபஞ்சீகிருத பூதத்தின் அங்யமான எல்லாவற்றினையும் சிருஷ்டிக்கும் ஹிரண்யகர்ப்பனும். **विष्णुः** (விஷ்ணு:)=ஸத்வ ஸாதநத்தினை யுடையவராய் ஸகல ஜகத்தையும் பரிபாலிக்கும் பரமேசுவரனும். **रुद्रः** (ருத்ர:)= ஸத்வோபாதியை யுடையவராய், தம ஸாதநத்தை யுடையவராய் ஜகத்தின் ஸம்ஹார கர்த்தா பரமேசுவரனும், அவருக்குத் தமோபாதி யுடையதாந் தன்மை, ஜீவத் தன்மை



யினல் ஆரோபிக்கப்படுதலின். ஜீவத்வம் அநேக சுருதி ஸ்மிருதி இதிகாச புராண விருத்தத்தால் அதனைக் கூறு பவர்கட்குப் பாஷண்ட சிரோமணித் தன்மை வருதலின். "ஸத்வம் தேவர் ஹரர் முதலியோர்" என்னும் வாசிஷ்ட வசநத்தினுலும், "என்று அந்தக் குருவால் உபதேசிக்கப் பட்ட பகவாந் நீலலோஹிதர் ஸத்வாகிருதி ஸ்வபாவ மாகலின், தமது ஸமாநமான பிரஜைகளைச் சிருஷ்டித்தார்" என்னும் பாகவத வசநத்தினுலும். சிலவிடத்துக் கேட்கப் பட்ட தம ஸம்பந்தத்திற்குக் காரியார்த்தத் தன்மையினு லும் பொருந்துதலின். **यज्ञ इति** (யஜ்ஞ இதி)=யஜ்ஞம்— பகவானுகிய விஷ்ணுவிற்கு வேறு மூர்த்தியாம். **मति भेदात्** (மதி பேதாத்)=புத்தி வைசித்திரியத்தினல் என்பது பொரு ளாம். 18.

தைத்திரீயோபநிஷத் இங்ஙனம் பிரஹ்மத்தைப் பிரதிபாதிக்கின்றது. முதலில், "பிரஹ்மவித் பரத்தை யடைகின்றன்" (தைத்திரீயோபநிஷத்-பிரஹ்மாநந்த வல்லி 2-1.) என ஸம்ஹிதாதி உபாஸநாதிகளால் ஏகாக்ரச் சித்தத்தினை யுடைய அதிகாரியைக் குறித்துப் பலமும் விஷயமு முடைய பிரஹ்மவித்தை சூத்ரஞ் செய்யப்படுகின்றது. பிரஹ்மம் என்பது விஷய நிர்தேச மாம். வித் என்பதால், வித்தை கூறப்படுகின்றது. "பரப் பிரஹ்மத்தை யடைகின்றன்" என்பது வித்யா பலத் தைக் கூறுகின்றது என விபாகமாம். அதன் பின், சூத் திரத்தின் பொருள் ஸங்க்ஷேபமாகக் கூறப்படுகின்றது. "ஸத்திய ஞாந மநந்தம் பிரஹ்மம், எவன் பரம வியோம மாகிய குகையில் இருப்பதை யறிகின்றன், அவன் சர் வஞ்ஞனுகிய பிரஹ்மத்தினல் ஸர்வ காமங்களையும் அநு

பவிக்கிறன்" (தைத்திரீயோபநிஷத்-2-1.) இந்த ரிக்கு உதாகரணத்தோடு காட்டப்படுகின்றது. ஸத்தியம் என்பதாதி, சூத்திரத்தி லுள்ள பிரஹ்ம பத வியாக்யாநமாம். எவன் அறிகின்றன் என்பதாதி வித் தேன்னும் பதத்தின் வியாக்யாநமாம். அவன் அநுபவிக்கின்றன் என்பதாதி, பரத்தை யடைகின்றன் என்னும் இரண்டு பதங்களின் வியாக்யாந மேனப் பகுப்பாம். ரிக்கிற்குப் பொருள் இதுவாம்:—ஸத்யம்–காலத்திரய பாதாபாவத்தினுல் உபலக்ஷிக்கப்பட்ட ஞாநம் ஸ்வப்ரகாச மாம். அநந்தம்-அந்தம், பரிச்சேதம், தேச கால வஸ்துவினுல் செய்யப்பட்டது. அம் மூவித பரிச்சேத அபாவத்தினுல் உபலக்ஷிக்கப்பட்டதாம். பிரஹ்மம் என்பது லக்ஷிய நிர்த்தேசமாம். ஸத்யாதி பத மூன்றும் லக்ஷணமாம். குகையில்–புத்தியில், எது காரணத் தன்மையினுல் இருக்கின்றது. பரமம் வியோமம்–அவ்யாகிருத ஆகாசம், அதில் இருத்தல்-பிரதிபிம்பமாக இருத்தல், எச் சைதந்யம் அது (தனைப்,) பிரஹ்மத் தன்மையினுல் எவன் அறிகின்றன் அவன், ஸர்வகாமங்களை—ஸார்வபௌமன் முதல் ஹிரண்யகர்ப்பாந்தங்களைக் கூட ஒரே காலத்தில் அநுபவிக்கின்றன். எப் பிரகாரத்தால் எனின், ஸர்வஞ்ஞனுல், ஸர்வஞ்ஞ நுபத்தினுல்–உபாதி பரிச்சேத நுபத்தினு லன்று, பிரஹ்மாநந்தத்தில் ஸ்வல்ப்பாநந்தங்களின் அந்தர்பாவத்தால். ஸர்வபௌமன் முதல் ஹிரண்யகர்ப்ப பரியந்தமான போகங்கள் பிரஹ்மவித்தின் ஸ்வநுப பூதமாகலானும், சைதந்யத்தால் விளக்கப்படுவதனுனும் பிரஹ்ம வித்திற்கு ஒரே காலத்தில் ஸர்வ போக்த்நுத் தன்மை யேன்பது பொருளாம். பின்னர் பிரஹ்மத்திற்குச் சூத்திர வியாக்



யாந நுப ரிக்கினுல் கூறப்பட்ட ஆநந்திய சித்தியின் பொருட்டு ஆகாசாதிக்குப் பிரஹ்மத்தினின்றே உத்பத்தியினைக் கூறுகின்றது. அதன்பின் "எவன் அறிகின்றன்" (2-1.)என்பதாதியால் கூறப்பட்ட பிரஹ்மத்தின் ஸ்வநுபத்தைக் கூறுதற்கு, "அவ் விப் புருஷன் அந்நரஸமயன்" (2—1.) என ஆரம்பித்துத் தேகாதிப் பஞ்ச கோச ஆத்மா உபதேசக் கிரமத்தால், "பிரஹ்ம புச்சம் பிரதிஷ்டை" (2—5) என, மீண்டும் விஸ்தரத்தினுல் பிரதிபாதித் திருக்கின்றது. அதனுல், நாம நுபங்கள் இன்றிய பிரஹ்மத்திற்குப் பிரத்தியக்ஷாதி அவிஷயத் தன்மையினுல் அஸத்துத் தன்மைச் சங்கையில், "அது இச்சித்தது" (2—6) என, இச்சிக்கும் தன்மையினுல் ஸ்வர்க்க காமி போன்று, "அது தபஸ் செய்தது" (2—6.) என, ஆலோசிக்கப்படுதலினுல், மந்திரி போன்று, "இவ்வெல்லாவற்றையும் சிருஷ்டித்தது" (2—6.) எனச் சிருஷ்ட்நுத் தன்மையினுல் குலாலன் போன்று, "அதுவே, பிரவேசித்தது" (2—6.) எனப் பிரவேஷ்ட்நுத் தன்மையினுல் ஸர்ப்பாதி போன்றும் ஸத்வத்தினைக் கூறி, மீண்டும் "எவன் சலிப்பன்" (2—7.) (அபாந வியாபார நிசுவாசம்) என்பதாதியில், ஸர்வப்பிராணிகளின் ஜீவந ஹேதுத் தன்மையினுல், "எப்பொழுது இது" என்பதாதியால், வித்வத் அவித்வத் பய அபய ஹேதுத் தன்மையினுலும் அதனது ஸத்வமே திடஞ் செய்யப்படுகின்றது. பின்னும், "அவ் விவ் வாநந்தத்தின்" என்பதாதியில் ஆநந்த விசாரத்தினை ஆரம்பித்து, ஸார்வபௌமன்

முதல் இரண்யகர்ப்பாந்தமாக உள்ள ஆநந்தங்கட்கு உத்தரோத்தரம் நூறு மடங்கு உயர்வினைக் காண்பித்தல் பூர்வகம் பிரஹ்ம வேத்தாவிற்கு, "மநதோடு கூட வாக்கு அடையாது எதனினின்றும் நிவிர்த்திக்கின்றன. பிரஹ்மத்தின் ஆநந்தத்தை அறிந்தவன் ஒன்றினின்றும் பயப்படுவ தில்லை" என, (தைத்திரீயோபநிஷத் **2—9.**) வாக்கு மநதுகளின் அகோசரமாய நிரதிசயப் பிரஹ்மாநந்த அடைவினையும் நிரதிசய அநர்த்த நிவிர்த்தியினையும் பிரதிபாதித்து, மீண்டும் "இதை" **(2—9.)** என்பதாதியால் அநர்த்த நிவிர்த்தியினை விஸ்தரித்து, நிரதிசயாநந்த பிரஹ்மாபரோக்ஷ ஞாநத்தில் ஸாதந ஆகாங்க்ஷையில், "பிருகு, வாருணி," **(3—1.)** என்பதாதியால் பிருகு வருண ஸம்வாதத்தை ஆரம்பித்து, "எதனினின்றும்" **(3—1.)** என்பதாதியால் பிரஹ்மத்தின் தடஸ்த லக்ஷணத்தினைப் புகலுதல் பூர்வகம் பிரியமாகிய புத்ரன் பொருட்டு வருணனாகிய பிதாவால் உபதேசிக்கப்பட்ட "தபம்" என்னும் பெயரை யுடையது மீண்டும் மீண்டும், விசாரமே பிரஹ்ம அபரோக்ஷத்தின் பொருட்டு முக்கிய ஸாதநத்தை உபதேசித்து, பிரஹ்மவித்தின் திருப்தி காநத்தையும் அந்தத்தில் அறிவித்து உபராமத்தைத் தைத்திரீய உபநிஷத் அடைந்தது. இவ்வாறு மாதா போன்று ஸர்வப் பிராணிகளுக்கும் ஹிதத்தைக் கொடுக்கும் அச் சுருதியில் பிரதிபாதிக்கப்படும் விஷ்ணுவை இரண்டு சுலோகங்களால் துதிக்கின்றார்.



सत्यं ज्ञानं शुद्धमनन्तं व्यतिरिक्तं
शान्तं गूढं निष्कलमानन्दमनन्यम्।
इत्याहादौ यं वरुणोऽसौ भृगवेऽजं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे॥ ॥१९॥

(பதப் பொருள்.) १. **यं**—எந்த, २. **अजं**—உத்பத்தியின்றியதை, ३. **आदौ**—முதலில், ४. **असौ**—இந்த, ५. **वरुणः**—வருணன், ६. **भृगवे**—பிருகுவின் பொருட்டு, ७. **सत्यं**—அபாத்யம் (என்றும்), ८. **ज्ञानं**—ஜட விரோதி (என்றும்), ९. **शुद्धं**—கால சம்பந்தம் அற்றது (என்றும்), १०. **अनंतं**—மூவித பரிச்சேத சூந்யம் (என்றும்), ११. **व्यतिरिक्तं**—பஞ்சகோச பிந்நம் (என்றும்), १२. **शांतं**—சர்வ துக்க மற்றது (என்றும்), १३. **गूढं**—வாக்கு மநங்களைக் கடந்தது (என்றும்), १४. **निष्कलं**—நிரவயவம் (என்றும்), १५. **आनंदं**—பரமப் பிரேமைக் கிடம் (என்றும்), १६. **अनन्यं**—கேட்பவனது ஸ்வரூபம், १७. **इति**—என்றும், १८. **आह**—கூறினரோ, १९. **तं**—அந்த, २०. **संसार-ध्वांत-विनाशं**—சம்சார-இருளினை-நாசம் செய்யும், २१. **हरिं**—ஹரியினை, २२. **ईडे**—நமஸ்க்கரிக்கின்றேன் என்ற வாறு.

**सत्यं** *(ஸத்யம்)=அபாத்யத்தை,* **ज्ञानं** *(ஞாநம்)=ஜட விரோதியை,* **शुद्धं** *(சுத்தம்)=மல ஸம்பந்த மற்றதை,* **अनंतं** *(அநந்தம்)=மூவித பரிச்சேத சூந்யத்தை,* **व्यतिरिक्तं** *(வ்யதிரிக்தம்)=பஞ்ச கோசங்களினின்றும் பிந்நமாய அதன் ஸாக்ஷியை,* **शान्तं** *(சாந்தம்)=ஸர்வ துக்க மற்றதை, ஈண்டு "எப்பொழுது, இவன் இதில் அதிருசியத்தில், அநாத்மயத்*

தில், அநிருக்தத்தில், அநிலயத்தில் அபயமாகிய பிரதிஷ்டையை யடைகின்றனர்.'' என (தைத்திரீயோபநிஷத் 2-7.) சுருதியாம். இதன் பொருள் இதுவாம். எப்பொழுது இவன் ஸாதகன், இதில்—நித்ய அபரோக்ஷத்தில், அதிருசியத்தில்—திருசியப் பிரபஞ்ச மின்றியதில், தத் பத லக்ஷியத்தில் என்பது பொருளாம். அநாத்மயத்தில்—ஸ்தூல தேக மின்றியதில், அநிருக்தத்தில்—நிருத்தி—லிங்கம், அஃதின்றியதில், அநிலயத்தில்— பிரபஞ்ச தேக லிங்கங்கள் இதில் லயத்தினை அடைகின்றன. அஞ்ஞாநம் நிலயமாம். அஃதின்றியதில், த்வம் பத லக்ஷியத்தில் என்பது பொருளாம். பிரத்ய கபிந்ந பிரஹ்மத்தில் என்பது நான்கு பதத்தின் பொருளாம். அதில், அபயம்—பய மின்மை எங்ஙனம் உண்டாகின்றதோ அங்ஙனம் அடைகின்றனர். கூறிய ரூபத்தைப் பிரஹ்மமாக அறிகின்றனர் என்பது பொருளாம். "பின் அவன் அபய மடைந்தவன் ஆகின்றான்'' (2—7.) பின்—அநந்தரமே, புகன்ற வேதநத்தின் பிற்காலமே, அவன்—பிரஹ்மவித்; அபயம்—ஜநந மரண பிரவாக நிமித்த பய மின்மையை, அடைகின்றான். **गूढं** (கூடம்)=அறியக் கூடாததை, வாக்கு மநங்களின் அகோசரத்தை யென்பது பொருளாம். "எதனினின்றும் வாக்கு'' என்னும் (தைத்திரீயோபநிஷத் 2—9.) சுருதியினால். **निष्कलं** (நிஷ்கலம்)=நிரவயவத்தை, **आनन्दं** (ஆநந்தம்)=பரமப் பிரேமைக் கிடத்தை, **अनन्यं** (அநந்யம்) =சுரோத்திரிய ஸ்வரூபத்தை, ஈண்டு, "அது எது இப் புருஷனில், எது இந்த ஆதித்யனிடத்து அது ஒன்றே'' (தைத்திரீயோபநிஷத் 2—8.) எனச் சுருதியாம். புருஷ



னிடத்தில்—காரிய காரண சங்காதத்தில், இது—அபரோக்ஷமாக அநுபவிக்கப்படும், எது—சித்துத் தாது ஸாக்ஷியாக இருக்கின்றது. எது—ஆதித்யனிடத்தில் அந்தர்யாமித் தன்மையினால், இது—பரோக்ஷத் தன்மையால் விளங்கிக் கொண்டிருக்கின்றது. அது—அவ் விரண்டிடத்தும் இருக்கும் சித்துத் தாது, ஒன்றே—பிந்ந மன் றென்று பொருளாம். **इति** (இதி)=இவ்வாறு, **आदौ** (ஆதௌ)=ஆநந்த வல்லியில், பிரதிபாதிக்கப்படும், **यं विष्णुं** (யம் விஷ்ணும்)= எந்த விஷ்ணுவை, **अजं** (அஜம்)=ஜந்ம மின்றியதை, **असौ वरुणो भृगवे** (அஸௌ வருணோ பிருகவே)=இந்தப் பிருகுவின் பொருட்டு வருணன்—பிருகு வென்னும் பெயரினையுடைய மகரிஷியின் புத்ரன் பொருட்டு, **आह** (ஆஹ)= "எதனினின்றும்'' (தைத்திரீயோபநிஷத் 3—1.) என்பதாதியால் கூறினர். அதை யென்பது பொருளாம். 19.

எங்ஙனம் பிருகு அறிந்தார் என்னும் ஆகாங்க்ஷையில் அவர் அறிந்த பிரகாரத்தினைக் கூறுகின்றார்.

कोशानेतान्पञ्चरसादीनतिहाय
ब्रह्मास्मीति स्वात्मनि निश्चित्य दृशिस्थः ।
पित्रादिष्टो वेद भृगुर्यं यजुरन्ते
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥२०॥

(பதப் பொருள்.) १. यं—எதை, २. एतान्—இந்த, ३. रसादीन्—அந்ந ரசாதிகளாகிய, ४. पंच—பஞ்ச,

५. कोशान्=கோசங்களை, ६. अतिहाय—விட்டு, ७. ब्रह्म—अहम्—अस्मि—நான்—பிரஹ்மமா—யிருக்கின்றேன், ८. इति—என்று, ९. दृशि—திருசியில், १०. स्थः=இருந்து, ११. स्व—आत्मनि—தனது—ஆத்மாவில், १२. निश्चत्य—நிச்சயித்து, १३. पित्रा—பிதாவினுல், १४. आदिष्टः—உபதேசிக்கப்பட்டு, १५. भृगु—பிருகுவானவர், १६. यजुः—யஜுர் வேதத்தின், १७. अंते—முடிவாகிய தைத்திரீய உபநிஷத்தில், १८. वेद—அறிந்தனரோ, १९. तं—அந்த, २०. संसार—ध्वांत—विनाशं—சம்சார—இருளினை—நாசஞ்செய்யும், २१. हरिं—ஹரியினை, २२. ईडे—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

**रसादीन्** (ரஸாதீந்)=அந்ந ரஸ விகார ரூப ஸ்தூல தேஹாதிகளாகிய பஞ்ச கோசங்களை, **अतिहाय** (அதிஹாய)=அநாத்மத் தன்மையினுல் விட்டு, பஞ்ச கோச ஸ்வரூபமோ, பிரத்யக் தத்வ விவேகத்தில் வித்யாரண்ய குரவர் அவர்களால், * பஞ்சீகிருத பூதத்தினின்றும் உண்டாகிய, ஸ்தூல தேஹம் அந்நம் என்னும் பெயரை யுடையதாம். லிங்க தேஹத்தில், கர்மேந்திரியங்களோடு கூட ரஜோ குணத்தினின்று முண்டாய பிராணனுல் பிராண

* பஞ்சதசி—"பஞ்சமா பூதத்தாம் பருத்த வாக்கையே, யெஞ்சலி லந்நமா மிலிங்கத் தேய்வுறும், விஞ்சிரா சதத்தெழு மிகுபிராணனு, மைஞ்சுங்கன் மேந்திய மமர்பி ராணமாம்." 1–30. "சத்துவத் தெழும்புத்தீந் திரியந் தன்னுடன், செத்தரு மநமுமே சேர்ம நோமயம், புத்திநிச் சயவுருப் போந்த வற்றெடே, சுத்தவிஞ் ஞாநமாச் சொல்லுங் கோசமாம்." 1—31. "ஒதுகா ரணத்துறு மொளிசெய் சத்துவ, மோதமுன் விருத்தியு மொழியு மாநந்தம்." 1—31½.



மயமாம். (1—34) "ஸத்வ குணத்தினின்று முண்டாய, ஞாநேந்திரியங்களோடு கூட ஸங்கற்ப ரூபம் மநோமயமாம். ஞாநேந்திரியங்களோடு நிச்சய ரூப புத்தி விஞ்ஞாநமயமாம்." (1—35) "காரண சரீரத்தில் மோதம் முதலிய விருத்திகளால் ஸத்வ குணம் ஆநந்த மயமாம்." (35½) என்று காண்பிக்கப்பட்டிருக்கின்றது. ஞாநேந்திரியங்கட்கு ஸம்ஸய நிச்சய மென்னும் இரண்டின் ஹேதுத்தன்மையினுல் மநோ மயத்திலும் விஞ்ஞாந மயத்திலும் ஸம்பந்தமாம். **दृशिस्थः** (திருசிஸ்த:)= திருசியில் இருப்பது, காரிய காரண ஸங்காதத்தில் ஸாக்ஷித் தன்மையினுல் எந்தச் சைதந்யம் அதன் ரூபமாக இருந்து, **स्वात्मनि** (ஸ்வாத்மநி) =தன்னிடத்தின்கண்ணே, "ஆநந்தம் பிரஹ்மம் என அறிந்தான்" (தைத்திரீயோபநிஷத் 3—5.) என்பதாதியால், "எதனினின்றும்" (தைத்திரீயோபநிஷத் 3—1.) என்பதாதி லக்ஷணத்தினைப் பொருத்துதல் பூர்வகம் ஸர்வப்ரதிஷ்டா ரூபமான பிரஹ்மத்தினை, **निश्चित्य** (நிச்சித்ய)= நிச்சயித்து, **पित्रादिष्टः भृगुः** (பித்ராதிஷ்ட: பிருகு:)= பிதாவினுல் உபதேசிக்கப்பட்ட பிருகுவானவர், **यजुः अन्ते** (யஜு: அந்தே)=யஜுர் வேதத்தின் முடிவாகிய தைத்திரீய உபநிஷத்தில், **ब्रह्मास्मि इति** (பிரஹ்மாஸ்மி இதி)=நான் பிரஹ்மமா யிருக்கின்றேன் என, **यं वेद** (யம் வேத)= எதை அறிந்தனர், அதை யென்பது பொருளாம். 20.

அற்றேல், ஜீவர்களினின்றும் அந்யமாய் ஜகத்தினைச் சிருஷ்டிக்கும் ஒரு ஈசுவரன் பிராணிகளின் பய அபயங்களின் காரணமா யிருப்ப தில்லை, ஜகத்து நித்யமாகலின். ஸுக துக்கங்கள் புண்ய பாப மூல

மாகலின். வேதாந்தங்களும், கர்மத்திற்கு அங்க நுப மான கர்த்தா முதலியவற்றை ஸ்துதித்தலினுல் பிரத யக்ஷாதி விருத்த அத்விதீய ஈசுவரனிடத்தில் பிரமாணத் தன்மை யின்மையின் என, ஜைமினி ஸம்பந்தமான மதத்தினை ஆசங்கித்து, ஸாவயவத் தன்மை முதலிய வற்றல், காரியத் தன்மையால் அநுமிக்கப்படும் ஸர்வ ஜகத்திற்கும் அதிஷ்டாதாவாய் இருக்கும் பரமேசு வரனை இன்றி உற்பத்தி பொருந்தாமையின். இவ்வித ஜகத்தினை ஸ்ருஷ்டிப்பதில் ஜீவர்கட்கு ஞாநம் ஸாமர்த் தியங்கள் இன்மையின்; சேதநத் தன்மையினுல் ஸ்வ தந்தரமாய் இருக்கும் அவர் (ஜீவர்) கட்கும் பரவச மின்றி ஸ்வயம் துக்க ஹேதுவாகிய கர்மாநுஷ்டாநத் தினுல் அதன் போகம் பொருந்தாமையின். கர்மங்களும் ஜட மாகலின் ஜகத்தை ஸ்ருஷ்டிப்பதிலும், ஜீவர்கட்கு ஸுக துக்கங்களைக் கொடுப்பதிலும் அதிஷ்டாதா வை யின்றி ஸ்வயம் சாமர்த்திய மின்மையின். வேதாந் தங்களாலும் பிராணிகளின் கர்மாநுஸாரத்தால் ஜகத் தினை ஸ்ருஷ்டிப்பவனும், அதன் கர்ம பலத்தைக் கொடுப் பவனுமாகிய ஈசுவரனது சித்திப் பிரகாரம் முன்னர் புகன்றமையின். தத் பர சுருதி விரோதத்தில் பிரத் யக்ஷாதிக்கு ஆபாஸத் தன்மையாலும், கர்மங்கட்கு விருத்தமாகப் பிரதிபாதிக்கும் வேதாந்தங்கட்கு அதன் அங்க நுப ஸ்துதித் தன்மை பொருந்தாமையானும். அங்குராதி காரியம் கர்த்தாவை யுடையன, காரியமாக லின்; கடம் போன்று. என்னும் காரிய லிங்கம் முத லிய தர்க்கத்தினுல் அநுக்ரஹிக்கப்பட்ட சுருதியினுல் சித்தித்த ஒரு பரமேசுவரன் இருக்கின்றுன் என்னும் கருத்தால் கூறுகின்றனர்.



येनाविष्टो यस्य च शक्त्या यदधीनः
क्षेत्रज्ञोयं कारयिता जन्तुषु कर्तुः।
कर्ता भोक्तात्मात्र हि चिच्छक्त्याधिरूढ-
स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे॥ ॥२१॥

(பதப் பொருள்.) १. **येन**—பரமேசுவரனுல், २. **आविष्टः**—பிரவேசிக்கப்பட்டவன், ३. **यस्य** ४. **च**—எவனது, ५. **शक्त्या**—மாயையினுல், ६. **यत्**—எதனது, ७. **अधीनः**—அதீநன், ८. **अयं**—இந்த, ९. **क्षेत्रज्ञः**—க்ஷேத்திரஞ்ஞன், १०. **जंतुषु**—சர்வ ஜீவர்களிடத்திலும், ११. **कर्तुः**—கர்த்தா, १२. **कारयिता**—செய்விப்பவன், १३. **कर्त्ता**—கர்த்தா, १४. **भोक्त**—போக்தா, १५. **आत्मा**—ஆத்மா, १६. **अत्र** १७. **हि**—காரிய காரண சங்காதத் தில், १८. **चित्**—சித், १९. **शक्ति**—சக்தி, २०. **अधिरूढः**—வியாபித்திருக்கிறது, २१. **तं**—அந்த, २२. **संसार—ध्वांत—विनाशं**—சம்சார — இருளினை—நாசம் செய்யும், २३. **हरिं**—ஹரியினை, २४. **ईडे**—நமஸ்க்கரிக்கின்றேன் என்ற வாறு.

**क्षेत्रज्ञः** (க்ஷேத்ரஞ்ஞ:)=க்ஷேத்ரஞ்ஞன், **येन** (யேந)= பரமேசுவரனுல், **आविष्टः** (ஆவிஷ்ட:)=பிரவேசிக்கப்பட்ட வன், சிலவிடத்துச் செய்யக் கூடாத கர்மத்தையும் கிரஹம் பிடித்தவன் போன்று செய்கின்றுன். ஆவேச நீங்கியவன் செய்தற்கு ஸமர்த் தின்றியவ னுகின்றுன். அந்தப் பரமே சுவரன் ஒருவன் இருக்கின்றுன். அர்ஜுநன் முதலியோர் களிடத்து ஈசுவரப் பிரவேசம் கேட்கப்படுதலின். **यस्य**

**च शक्त्या** (யஸ்ய ச சக்த்யா)=எவனுடைய (சக்தியாகிய) மாயையினுல் கவரப்பட்டவன் ஞாந ஸ்வரூபனுயினும், நான் மூடன் நான் ஒன்றையும் அறியேன் அஞ்ஞன் என அபிமானிக்கின்ருன். சக்தியை யுடைய அவன் ஒருவன் இருக்கின்ருன் என அறியப்படுகின்றது. "அநீசையினுல் மோஹிக்கப்பட்டவனுய்ச் சோஹிக்கின்ருன்." என்னும் சுருதியாம். அநீசையால்—ஆத்மா அஞ்ஞாந ஆவரணத்தினுல், ஈசுவர பாவத்தை யறியாமையால், மோஹிக்கப்பட்டவனுய்—தேஹாதிகளில் அபிநிவேசம் செய்பவனுய், சோஹிக்கின்ருன்—அதன் ஸம்பந்தமான பீடையினுல் துக்கிக்கின்ருன் என்பது பொருளாம். அது பகவானுலும், "இந்த குணமயமாகிய எனது தெய்வ மாயை கடத்தற் கரியதாம்." (பகவற்கீதை 7—14.) எனக் கூறப்பட்டிருக்கின்றது. இதனுனே, இந்த க்ஷேத்ரஞ்ஞன் எதன் அதீநமாய் ஸர்வ வியாபாரங்களிலும் இருக்கின்ருன் அந்த ஈசுவரன் இருக்கின்ருன். **जन्तुषु** (ஜந்துஷு)=ஸர்வ பூதங்களிலும், **कर्तुः कारयिता** (கர்த்து: காரயிதா)=கர்த்தா செய்விக்கின்ருன் எனக் கொள்க. அது சூத்ரக்காரரால் "அது கேட்கப்படுதலால் பரனின்" (பிரஹ்ம சூத்ரம் 2—3—41.) எனக் கூறப்பட்டிருக்கின்றது. பரனின்—ஈசுவரனுகிய நிமித்தத்தால் க்ஷேத்திரக்ஞன் கர்த்தாவாம். அது கேட்கப்படுதலால், "இதுவே நற் கர்மத்தைச் செய்விக்கின்றது." (கௌஷீதகிப் பிராமணேபநிஷத் 3—8.) என ஈசுவரனுக்குப் பிரயோஜகத் தன்மை கேட்கப்படுதலின். எந்தப் பரமாத்மாவின், **चिच्छक्ति अधिरूढः** (சிச் சக்தி அதிரூட:)=சித் ஸ்வரூபத்தினை அடைந்தவன், **कर्ता भोक्ता आत्मा इति** (கர்த்தா



போக்தா ஆத்மா இதி)=கர்த்தா போக்தா ஆத்மா எனப் பிரசித்தம் அஹங்காரமாம்; **अत्र** (அத்ர)=இதில்—காரிய காரண சங்காதத்தில், இரும்பினிடத்துப் போன்று வியாபிக்கப்பட்டிருக்கின்றது. அதனை நமஸ்க்கரிக்கின்றேன் என்பது பொருளாம். **21.**

அற்றேல், ஜீவேசுவரர்கட்குப் பிரவர்த்திய பிரவர்த்தக பாவத்தால் பேத மாகலின், அத்வேத வாக்கியார்த்த சித்தி யின்று என ஆசங்கித்து, அவ் விரண்டற்கும் கற்பித பேத மிருக்கினும் வாஸ்தவ அபேதத்தினைக் கொண்டே அத்வேத வாக்கியார்த்தம் பொருந்துகின்றது என்னும் அபிப்பிராயத்தினுல் கூறுகின்றர்.

सृष्ट्वा सर्वं स्वात्मतयैवेत्थमतर्क्यं
व्याप्याथान्तः कृत्स्नमिदं सृष्टमशेषम् ।
सच्च त्यच्चाभूत् परमात्मा स य एक-
स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥२२॥

(பதப் பொருள்.) १. **सर्वं**—எல்லாவற்றையும், २. **सृष्ट्वा**—ஸ்ருஷ்டித்து, ३. **स्व**—४. **आत्मतया**—५. **एव**—தமது—ஆத்மத் தன்மையினுலே, ६. **इत्थं**—இவ்வாறு, ७. **अतर्क्यं**—தர்க்கிக்க முடியாததை, ८. **व्याप्य**—பிரவேசித்து, ९. **अथ**—பின், १०. **अंतः**—உள்ளில், ११. **सृष्टं** ஸ்ருஷ்டிக்கப்பட்ட, १२. **इदं**—இந்த, १३. **अशेषं**—தேவ மாநுட திரியக் காதி சரீரம், १४. **कृत्स्नम्**—எல்லாம், १५. **सत्**—१६. **च**—பரோக்ஷமும், १७. **त्यत्**—१८. **च**—அப

ரோக்ஷமும், १९. **अभूत्**—ஆயிற்று, २०. **परम**—२१. **आत्मा**
--பரமாத்மா, २२. **सः**--அது, २३. **यः**—எது, २४. **एकः**
—ஒன்றே, २५. **तं**—அந்த, २६. **संसार-ध्वांत-विनाशं**—
ஸம்சார-இருளினை-நாசம் செய்யும், २७. **हरिं**—ஹரியினை,
२८. **ईडे**—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

**स** (ஸ)=அந்த—வேறு சுருதியில் பிரசித்த, **यः** (ய:) =பரமாத்மா, **एकः** (ஏக:)=ஒன்று—உண்மையில் ஜீவனோடு அபின்னமாம். **इत्थं** (இத்தம்)=இவ்வாறு, அநுபவிக்கப்படும் அநேகப் பிரகாரத்தை, **अतर्क्यं** (அதர்க்யம்)=தர்க்கத்தை ஸஹிக்காமையை, **सर्वं इतं** (ஸர்வம் இதம்)=இந்த ஸர்வ ஜகத்தையும், **सृष्ट्वा अथ** (ஸ்ருஷ்ட்வா அத)=ஸ்ருஷ்டித்து, **सृष्टं इतं अशेषं** (ஸ்ருஷ்டம் இதம் அசேஷம்)=ஸ்ருஷ்டித்த இவ் வெல்லாவற்றை—ஸுர நர திர்யக்காதி சரீரத்தை. **कृत्स्नं** (க்ருத்ஸ்நம்)=எல்லாவற்றையும், **स्वात्मतया** (ஸ்வாத்மதயா)=தனது ஆத்ம ரூபமாக, **व्याप्य** (வ்யாப்ய)=ஆண்டுப் பிரவேசித்து, தாதாத்மிய அத்தியாஸத்தினல் தமது ரூபமாகக் கிரஹித்து என்பது பொருளாம். "அது சிருஷ்டித்து, அதுவே பிரவேசித்தது" (தைத்திரீயோபநிஷத் 2–6.) "அவ் விது ஈண்டு நகத்தின் நுனியி லிருந்து பிரவேசித்தது" என்னும் சுருதியினல். **सत् च त्यत् च अभूत्** (ஸத் ச, த்யத் ச அபூத்)=பரோக்ஷ அபரோக்ஷமாக இருந்தது. அந்த, **परमात्मा** (பரமாத்மா)=பரம ஆத்மாவை, நமஸ்க்கரிக்கின்றேன். 22.

இவ்வாறு, அத்வைத வாக்கியப் பிரதாநத்தினல் ஸ்துதித்து, இப்பொழுது ஸர்வ சாஸ்திரங்களாலும், 



ருசியின் அநுஸாரமாக ருஜுமார்க்க வக்ர மார்க்கங்களால் பிரதிபாதிக்கப்படும் விஷ்ணுவை ஸ்துதிக்கின்றார்.

**वेदान्तैश्चाध्यात्मिकशास्त्रैश्च पुराणैः**
**शास्त्रैश्चान्यैः सात्वततन्त्रैश्च यमीशम् ।**
**दृष्ट्वाथान्तश्चेतसि बुद्ध्वा विविशुर्यं**
**तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥२३॥**

(பதப் பொருள்.) १. **वेदांतैः**—२. **च**—வேதாந்தங்களாலும், ३. **अध्यात्मिक—शास्त्रैः**—४. **च**—சாங்கியாதி சாஸ்திரங்களாலும், ५. **पुराणैः**--(சிவ விஷ்ணுவாதி நுபத்தினல்) புராணங்களாலும், ६. **अन्यैः**—(வைசேஷிகாதி) அந்ய, ७. **शास्त्रैः**—८. **च**—சாஸ்திரங்களாலும், ९. **सात्वत**—१०. **तन्त्रैः**—११. **च**—வாசு தேவ பக்தர்களது வைஷ்ணவ சாஸ்திரங்களாலும், १२. **यं**—(பிரதிபாதிக்கப்படும்) எந்த, १३. **ईशं**—ஈசனை, १४. **दृष्ट्वा**—அறிந்து, १५. **अथ**—பின், १६. **अंतः**—உள்ளில், १७. **चेतसि**—சித்தத்தில், १८. **बुद्ध्वा**—அறிந்து, १९. **यं**—எதனை, २०. **विविशुः**—(முன் சில பெரியோர்கள்) அடைந்தனர், २१. **तं**—அந்த, २२. **संसार-ध्वांत-विनाशं**—ஸம்சார-இருளினை-நாசம் செய்யும், २३. **हरिं**—ஹரியினை, २४. **ईडे**—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

**वेदांतैः** (வேதாந்தை:)=வேதாந்தங்களால், ஸச்சிதாநந்த அத்வய பிரத்ய கபிந்நத் தன்மையினுல் பிரதிபாதிக்கப்படு வனவற்ருல், **अध्यात्मिक शास्त्रैः** (அத்யாத்மிக சாஸ்த்ரை:) =அத்யாத்மிக சாஸ்திரங்களால் — ஆத்மாவை — ஜீவனை, அதிஷ்டித்துப் பிரவர்த்திக்கும் ஸாங்கியாதி சாஸ்திரங்க ளால் அஸங்க சித்து ரூபம் முதலிய ரூபத்தினுல், **पुराणैः** (புராணை:)=புராணங்களால்—சிவ விஷ்ணுவாதி ரூபத்தி னுல், **अन्यैः शास्त्रैः** (அந்யை: சாஸ்த்ரை:)=அந்ய சாஸ் திரங்களால்—வைசேஷிகர் முதலியோர்களால் அங்கிகரிக் கப்படுவனவற்ருல், ஞாநாதி குண முடைமையாலும், பிரத் யக் பிந்நத் தன்மை முதலிய ரூபத்தினுலும், **सात्वत तन्त्रैः** (ஸாத்வத தந்த்ரை:)=ஸத்து ஸ்வரூபம் எதற்கு இருக்கின் றதோ அது ஸத்வ முடையது, வாஸுதேவனும். அவ னுக்குப் பக்தனும் தன்மையினுல் அங்கீகரிப்பவர்கள் ஸாத்வதர்கள், அவர்களது தந்திரங்களால் — வைஷ்ணவ சாஸ்திரங்களால் என்பது பொருளாம். அவர்களால்— வாஸுதேவாதி ரூபத்தினுல், சகாரத்தால், **अन्यैः** (அந்யை:) =அந்யர்களாகிய பிராஹ்ம சைவாதி தந்திரங்களால், அந் தந்த ரூபத்தினுல் பிரதிபாதிக்கப்படும் வஸ்து ஒன்றே. **यं ईशं दृष्ट्वा** (யம் ஈசம் திருஷ்ட்வா)=எந்த ஈசுவரனை அறிந்து—முதலில் சாஸ்திர ஆசாரியர்களிடத்தினின்றும் அறிந்து, **अथ** (அத)=அநந்தரம், தியாநத்தினுல், **अन्तः चेतसि बुद्ध्वा** (அந்த: சேதஸி புத்வா)=உள் புத்தியில் அறிந்து—ஈசுவரனுய் இருக்கின்றேன் என ஸாக்ஷாத் அநு பவித்து, சில முன்ன ரிருந்த மஹாத்மாக்கள், **यं विविशुः** (யம் விவிசு:)=எதனை ஆத்மத் தன்மையினுல் அடைந்தார் கள், அதை யென்பது பொருளாம்.





அற்றேல், இங்ஙனம் எல்லோரும் சாஸ்திர ஆசாரியர்களிடத்தினின்றும் ஈசுவரனை அறிந்து புத்தி யின்கண் நேரே அநுபவித்து அதை ஏன் அடை கின்றர்க ளில்லை எனச் சங்கித்து, "சிரத்தை யுடைய வனுய், வித்த முடையவனுய், ஆத்மாவின்கண்ணே ஆத் மாவினைப் பார்க்கின்றன்.", "எவனுக்குத் தேவதையி னிடத்து மேலான பக்தி யிருக்கின்றதோ, எங்ஙனம் தேவதையினிடத்தில் அங்ஙனமே குருவினிடத்தும் இருக் கின்றதோ, அந்த மஹாத்மாவிற்கு இந்தக் கூறப்பட்ட அர்த்தங்கள் பிரகாசிக்கின்றன.'' (சுவேதாசுவதரோப நிஷத் 6-23.) "அதனுல் அதைப் பார்க்கின்றனர். நிரவய வத்தைத் தியாநிப்பவனுய் சாந்தி தாந்தி உபரதி திதிக்ஷை ஸமாதி யுடையவனுய் ஆத்மாவின்கண்ணே ஆத்மா வினைப் பார்க்கின்றன்.'' என்பதாதி சுருதியினுல். இந்தச் சாதநங்களானே விஷ்ணுவை ஆத்மத் தன்மையால் அடைதற்கு ஸமர்த்து இருக்கின்றது. அஃதின்றிச் சப்த மாத்திர பண்டிதனுல் அடைதற்கு ஸமர்த் தில்லை என்று கூறுகின்றர்.

श्रद्धाभक्तिध्यानशमाद्यैर्यतमानै-
ज्ञातुं शक्यो देव इहैवाशु य ईशः ।
दुर्विज्ञेयो जन्मशतैश्चापि विना तै-
स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥२४॥

(பதப் பொருள்.) १. श्रद्धा-भक्ति-ध्यान-शम-आद्यैः— சிரத்தை—பக்தி—தியாநம்—சமம் முதலியவற்றல், २.

यतमानैः—(அறிவதில்) யத்நம் செய்பவர்களால், ௩. देवः—ஸ்வப்பிரகாச, ௪. यः—எந்த, ௫. ईशः—பரமேசுவரன், ௬. इह—௭. एव—இந்த லோகத்திலேயே, ௮. आशु—சீக்கிரம், ௯. ज्ञातुं—அறிதற்கு, ௧௦. शक्यः—சக்கியமாம், ௧௧. तैः—அந்த, ௧௨. विना—(சாதநங்கள்) இன்றி, ௧௩. जन्य—शतैः—௧௪. च—௧௫. अपि—நூறு—ஜென்மங்களாலும், நூறு சாஸ்திரங்களாலும், நூறு பாண்டித்யங்களாலும், ௧௬. दुर्विज्ञेयः—அறியக்கூடாதாம், ௧௭. तं—அந்த, ௧௮. संसार-ध्वांत-विनाशं—சம்சார-இருளினை-நாசம் செய்யும், ௧௯. हरिं—ஹரியினை, ௨௦. ईडे—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

श्रद्धा (சிரத்தா)=சுருதி குரு வாக்கியங்களில் விசுவாசமாம். भक्तिः (பக்தி)=குருவினிடத்திலும், விஷ்ணுவினிடத்திலும் பிரேமையாம். ध्यानं (தியாநம்)=குருவால் உபதேசிக்கப்பட்ட அர்த்தமாகிய பிரஹ்மத்தில் விஜாதீய பிரத்தியய (ஞாந)த்தின் திரஸ்காரத்தினால், ஸஜாதீயப் பிரத்தியய (ஞாந)ப் பிரவாகத்தின் ஸம்பாதநமாம். शमः (சம:)=அந்தக்கரணம் விஷயங்களினின்றும் வியாவிர்த்தியாதலாம். ஆதி சப்தத்தினால், தமம்—பாஹ்யேந்திரியங்கள் தத்தம் விஷயத்தினின்றும் வியாவிர்த்தி யாதலாம். உபரதி—நாநாவித ஸகல லௌகிக வைதிக கர்மங்களின் தியாகமாம். திதிக்ஷை—அபராதிகளிடத்துக் குரோத மின்மையாம். ஸமாதாநம்—ஸமாதி யநுஷ்டாநம் என இச் சாதநங்கள் கிரஹிக்கப்படுகின்றன. இந்தச் சாதநங்களால், यतमानैः (யதமாநை:)=தரிசநத்தில் யத்நம் செய்பவர்களால், देवः (தேவ:)=ஸ்வப் பிரகாச, य ईशः (ய ஈச:)=எந்தப்



பரமேசுவரன், इह (இஹ)=இந்த லோகத்தின்கண்ணே, ज्ञातुं (ஞாதும்)=பிரத்யக் தன்மையால் ஸாக்ஷாத்காரம் செய்தற்கு, शक्यः (சக்ய:)=ஆற்ற லுடைத்தாம். तैः (தை:)=இந்தச் சாதநங்களா லன்றி, जन्मशतैः अपि (ஜந்ம சதை: அபி)=நூறு ஜந்மங்களாலும், நூறு சாஸ்திரங்களாலும், நூறு பாண்டித்யத்தினாலும், यः दुर्विज्ञेयः (ய: துர்விஞ்ஞேய:)=எது அறிதற்கு அசக்கியமாம், அதை யென்பது பொருளாம். ஆகவே. "நிஷித்த காரியத்தினின்றும் நிவிர்த்தி யடையாத புருஷனாகிய அசாந்தன் அசமாஹிதன், அடையான். அசாந்த மநஸை யுடையவனாயினும் பிரக்ஞையினால் இவ்வாத்மா அடையப்படுவ தில்லை." (கடோபநிஷத் 2–23.) என்னும் சுருதியாம். அசாந்தன்—விஷயங்களினின்றும் வியாவர்த்தி யடையாத சித்த முடையோன். அஸமாஹிதன்—ஸமாதி யநுஷ்டாந மின்றியவன். அசாந்த மநஸை யுடையவன்—நிமித்த மின்றி யிருப்பினும் குரோதாதிகளைச் செய்பவன். "ஆயின்" என்னும் சப்தத்தால் ஸ்திதப் பிரக்ஞை முதலியவற்றோடு கூடிய லக்ஷண மின்றியவன் கிரஹிக்கப்படுகின்றான். பிரஞ்ஞாநத்தால்—நல்ல—அஸம்பாவனை முதலிய பிரதிபந்த மின்றிய, ஞாநம்—பிரஞ்ஞாநமாம். அந்தப் பிரஞ்ஞாநத்தால் இவ்வாறு கூறிய ஸாதநத்தோடு கூடியவர்களால் அபரோக்ஷமாக அநுபவிக்கப்படும் அளவிறந்த ஆநந்தத்தை யுடைய ஆத்மாவை யடையப்படுவ தில்லை. அவ்விதப் புருஷனுக்கு அதன் பிராப்தியின் ஸம்பாவனையும் இன் றென்பது சுருதியின் பொருளாம். 24.

"வேதாந்தங்களால் ஈசுவரனை யறிந்து" (23) என யாது கூறப்பட்டது அதனை ஸ்பஷ்டஞ் செய்கின்றார்.

**यस्यातर्क्यं स्वात्मविभूतेः परमार्थं**
**सर्वं खल्वित्यत्र निरुक्तं श्रुतिविद्भिः ।**
**तज्जादित्वादब्धितरंगाभमभिन्नं**
**तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥२५॥**

(பதப் பொருள்.) ௧. **यस्य**—எவருடைய, ௨. **स्व—आत्म—विभूतेः**—தமது—ஆத்ம—விபூதிக்கு, ௩. **अतर्क्यं**—தர்க்கிக்க முடியாத, ௪. **परमार्थं**—வாஸ்தவ ஸ்வருபம், ௫. **सर्वं**—௬. **खलु**—எல்லாம், ௭. **इति**—என்னும், ௮. **अत्र** சுருதியில், ௯. **श्रुतिविद्भिः**—ஆசாரியர்களால், ௧௦. **निरुक्तं**—கூறப்பட்டிருக்கின்றது, ௧௧. **तत्**—சுருதியில், ௧௨. **जादित्वात्**—ஜாதியாகலின், ௧௩. **अब्धि-तरंग-आभं**—சமுத்திர-அலை-சமானம், ௧௪. **अभिन्नं**—அபிந்நமான, ௧௫. **तं**—அந்த, ௧௬. **संसार-ध्वांत-विनाशं**—சம்சார-இருளினை-நாசம் செய்யும், ௧௭. **हरिं**—ஹரியினை, ௧௮. **ईडे**—நமஸ்க்கரிக்கின்றேன், என்ற வாறு.

**स्वात्म विभूतेः** (ஸ்வாத்ம விபூதே:)=தமது ஆத்ம விபூதியால், தமது ஆத்மாவிற்கே வேறு ஸாதந அபேக்ஷையின்மையால், விபூதி—நாநாவித ஜகதாகாரமாக ஜநித்தல் எதற்கு, அது ஸ்வாத்ம விபூதியாம். அவ்வித பரமேசுவரனுடைய, **अतर्क्यं** (அதர்க்யம்)=அதர்க்கியத்தை—தர்க்கத்தினால் அறியப்படாமையானே, **परमार्थं** (பரமார்த்தம்)=விகார மின்றிய வாஸ்தவ ஸ்வரூபத்தை, பரமேசுவரனுக்குத் தர்க்கத்தினால் அறியப்படாத் தன்மையில் இந்த இரண்டு மந்திரங்களும் ஸாக்ஷிகளாம். "எவன் அத்தா எவன் அறி



கின்றான், ஈண்டுக் கூறுகின்றான். எதனினின்றும் வந்தன. எதனினின்றும் இச் சிருஷ்டி, எதனினின்றும் இதன் ஸ்திதி, இந்தச் சிருஷ்டியினால் தேவர்கள் தாழ்வுடையவர்களே. அதனால் எவன் அறிகின்றான், எதனில் இருக்கின்றது." (ரிக்வேதம் 10–129–6.), "எதனினின்றும் இச் சிருஷ்டி யுண்டாயிற்று என, அல்லது, தாரணை செய்கின்றான், அல்லது, தரிப்ப தில்லை. எவன் இதனைப் பார்ப்பவன். பரம வ்யோமத்தில் இருக்கின்றான், அவன் அங்கத்தை அறிந்தானாயினும், அறியாதவனாயினும் ஆவன்." என. இதன் பொரு ளிதுவாம்:—ஈண்டு—இந்த ஸம்ஸார மண்டலத்தில், எவன்—எந்தப் புருஷன், அத்தா—நிச்சயமாக அறிகின்றான், அநுபவிக்கப்படும் இந்த ஜகத்து எதனினின்றும் உண்டாகின்றது, எதனினின்றும் ஸ்திதியினை அநுபவிக்கின்றது, அவனை எவன் அறிகின்றான் என்பது பொருளாம். தேவர்கள் அறிவார்கள் எனச் சங்கித்துக் கூறுகின்றார் தேவர்கள் என்பதாதியால். பரனுடைய சிருஷ்டியாகிய ஹேதுவினால், இந்தப் பரமேசுவரனால் ஸிருஷ்டிக்கப்படுதலின், தேவர்கள்—பிரஹ்மாதிகள், தாழ்வுடையவர்களே. இதனால் அவர்கட்குத் தமது பூர்வ சரீர ஞானத்தில் ஸாமர்த்திய மின் றென்பது பொருளாம். இங்ஙனமாயினும், எதனினின்றும் இது உண்டாகின்றதோ அந்தப் பரமேசுவரனை ஒருவரும் அறிவ தில்லை என்பது பொருளாம். இந்தப் பரமேசுவரன் அறியக்கூடாதவன் என்பதை உத்தர மந்திரம் விரிக்கின்றது. இந்தச் சிருஷ்டி எந்தக் காரணத்தினின்றும் உண்டாயிற்று. அல்லது, எது ஜகத்தைத் தரிக்கின்றது. அல்லது, பிரளய காலத்தில் ஸ்தாபிப்ப தில்லை. அதனை எவன் அறிகின்றான். அநேகமாய்க்

கூறுவதா லென்? ஈசுவரனும் தனது மஹிமையை அளவிடுதற்கு ஸமர்த்துடையனா? அன்றா? என்னும் ஸம்சயத்தில் கூறுகின்றார். இந்தப் பார்க்கப்படும் ஜகத்தின் அத்யக்ஷன்—அதிஷ்டித்துப் பிரவர்த்தகனாகிய பரமேசுவரன் அவித்தை அதன் காரியங்களினின்றும், பரம வியோமத்தில்—தனது ஸ்வரூப சிதாகாசத்தில் இருக்கின்றான். அவனும் தனது மஹிமையை அறிகின்றான். அல்லது அறிவதில்லை. அபரிச்சிந்ந ஸ்வப்பிரகாச சித்ரூபத்திற்கு பரிச்சேத மின்மையானும், அவிஷயத் தன்மையானும் அறியக் கூடாமையான். ஸகுண ஸ்வரூபமும், குணங்கள் அநந்தமாகலின் அங்ஙனமேயாம். ஆகலின், ஈசுவரனுக்குச் சர்வஞ்ஞத் தன்மைப் பிரசித்தியாலும், ஈசுவரனுக்குத் தனது ஸ்வரூபத்தில் இவ்வளவு என்னும் ஞாநம் இருக்கின்றதா? இன்றா? என்பது சுருதிக்குச் சம்சயமாம். நாமோ நிர்ணயிப்போம் இல்லை என்பது எங்ஙனம், இரண்டும் அநந்த மாகலின். அதற்கு ஸர்வஞ்ஞத் தன்மை வியாகாதம் என்னற்க, ஸ்வரூபத்தில் இவ்வளவு என்பது இன்மையின். ஸசவிஷாண ஞாந மின்மையில் அதற்கு அஸர்வஞ்ஞத்தன்மை யென்னற்க. இங்ஙனமாயினும் “சர்வம் கல்விதம் பிரஹ்மம்” “இவ்வெல்லாம் பிரஹ்மம்” (சாந்தோக்யோபநிஷத் 3–14–1.) என. **अत्र** (அத்ர)=சுருதியில், **श्रुतिविद्भिः** (சுருதிவித்பி:)=சுருதியினை அறியும் ஆசாரியர்களால், சில ஸர்வாதிஷ்டாநத் தன்மையால் எதற்குப் பாரமார்த்திக ரூபம் கூறப்பட்டிருக்கின்றது. எங்ஙனம் என்னும் அபேக்ஷையில் கூறுகின்றார். **तत् जातित्वात्** (தத் ஜாதித்வாத்)=அந்த ஜாதியாகலின்—ஆண்டு—சுருதியில், தத் ஜலாநி என்னும் இரண்டு பதங்களால்



எதனால் இந்த ஜகத்து தத் ஜலங்கள். அதனினின்றும் உண்டாகின்றது. லயத்தை யடைகின்றது. நிலை பெறுகின்றது என்னும் அர்த்தத்தால், **अब्धितरंग आभं** (அப்திதரம்க ஆபம்)=ஸமுத்ர தரங்க ஸமாநத்தை, இக் காரிய ஸமூஹம் அதனினின்று உண்டாவதாலும், அதனில் லய மடைவதாலும், அதனால் இரக்ஷிக்கப் படுவதனாலும், **अभिन्नं** (அபிந்நம்)=அபிந்நத்தை, பிரஹ்மத்தினின்றும் பேதமாக ஸத்தையினை யடையாதது அதனால் அபிந்நமாம். அதன் அதிஷ்டாந ரூபம் உண்மையாக நிஷ்பிரபஞ்ச சச்சிதாநந்த அத்வயப் பிரஹ்மமே பரமார்த்தம் என இவ்வாறு, **निरुक्तं** (நிருக்தம்)=நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. அதை ஸ்துதிக்கின்றேன் என்பது பொருளாம். 25.

அற்றேல், இங்ஙனம் பிரஹ்மத்திற்கு ஸர்வ ஜகத் அதிஷ்டாநத் தன்மையினால் அத்விதீயத் தன்மையிலும், பிரத்ய கபிந்நத் தன்மையிலும் ஸர்வஞ்ஞனாகிய பகவாந் கபிலர் முதலியோரது ஸ்மிருதியின் அநவகாசப் பிரசங்கமாம்; அந்த ஸ்மிருதிகளில் பிரதாநத்திற்குக் காரணத் தன்மை, ஜீவேசுவரர்கட்கும், ஜீவர்கட்கும், பரமார்த்தமாகப் பேதம், ஜகத்திற்குப் பரமார்த்தத் தன்மை என்னும் இவ் வர்த்தங்கள் பிரதிபாதிக்கப்படுகின்றன, அந்த ஸ்மிருதிகட்கு நிரவகாசத் தன்மை அங்கீகாரஞ் செய்தற்குப் பொருத்த மன்று, ஸர்வஞ்ஞராகிய கபிலர் முதலியோரால் இயற்றப்பட்டிருத்தலின் என ஆசங்கித்து, “விரோதத்தில் அநபேக்ஷ மாகின்றது. அநுமாந மின்றி யிருக்கில்.” என்னும் (ஜைமிநி 1–3–3.) சூத்திரத்தினால் சுருதி ஸ்மிருதிகளின் பரஸ்பர விரோதத்தில் ஸ்மிருதிக்குப் பிராமாண்யம், அநபேக்ஷம்—அங்கீகார மில்லை.

விரோத மின்றி யிருக்கில், அநுமாநம்—ஸ்மிருதி, பிரமாணம் என ஜைமிநியால் பிரதிபாதிக்கப்படும் நியாயத்தினுல். சுருதி விரோதத்தில் அவற்றிற்கு அப்ராமாண்யம் இஷ்டமா யிருப்பினும் ஸ்மிருதி விரோதத்தினைச் சங்கிப்பவர்க்கு வேறு ஸ்மிருதியின் விரோத உபந்நியாஸத்தினுலேயே உத்தரங் கொடுப்பேன் என மதித்திருப்பவன், "எது மநுவால் கூறப்பட்டது அது மருந்தாம்." என்பதாதி (தைத்திரியோபநிஷத் **2-2-10-2.**) சுருதியால் அறியப்பட்ட மாஹாத்மியத்தை யுடைய ஸர்வஞ்ஞ மநு முதலியோ ரியற்றிய ஜீவ பர அபேதம், ஜகத் மித்தையாத் தன்மையைப் பிரதிபாதிக்கும் உபநிஷத் மூலத் தன்மையினுல் பலத்தினை யுடைய அநேக திடமான அநுகூல தர்க்கங்களால் அநுக்ரஹிக்கப் பட்ட அநேக ஸ்மிருதிகளின் அநவகாச தோஷம் பிராபல்யம் என அபிப்ராயம் செய்து, ஸ்வயம் சித்த சர்வஞ்ஞ ஸ்ரீ பகவத் ஈசுவர ஸ்மிருதியிலும் அத்வைதமே பரமார்த்த மென நிருபிக்கப்பட்டிருக்கின்றது எனக் கூறுகின்றுர்.

दृष्ट्वा गीतास्वक्षरतत्वं विधिनाजं
भक्त्या गुर्व्या लभ्य हृदिस्थं दृशिमात्रम् ।
ध्यात्वा तस्मिन्नस्म्यहमित्यत्र विदुर्यं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥२६॥

(பதப் பொருள்.) १. गीतासु—பகவற் கீதையில், २. अजं—ஜந்ம மின்றிய, ३. अक्षर-तत्वं—சர்வ வியா



பக பிரஹ்ம ஸ்வருபத்தினை, ४. विधिना—விதி பூர்வகமாக, ५. दृष्ट्वा—(ஆசாரியரிடத்து) அறிந்து, ६. गुर्व्या—கௌரவ முடைய, ७. भक्त्या—பக்தியினுல், ८. हृदि-स्थं—ஹிருதயத்தில்-உள்ள, ९. दृशि-मात्रं—சைதந்ய-மாத்திரத்தை, १०. लभ्य—அடைந்து, ११. ध्यात्वा—(ஐக்கியமாகத்) தியாநித்து, १२. अत्र—பிரத்தியக் கபிந்ந, १३. तस्मिन्—அக்ஷரத்தில், १४. अहं—நான், १५. अस्मि—இருக்கிறேன், १६. इति—என்று, १७. यं—எதனை, १८. विदुः—அறிந்தனர், १९. तं—அந்த, २०. संसार-ध्वांत-विनाशं—சம்சார-இருளினை-நாசம் செய்யும், २१. हरिं—ஹரியினை, २२. ईडे—ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு.

**गीतासु** (கீதாஸு)=(பகவத்) கீதையில், "அக்ஷரம் பரமம் பிரஹ்மம்" (பகவத் கீதை 8—3.) என்பதாதிகளில், **अजं** (அஜம்)=உற்பத்தி யின்றியதை, **अक्षरतत्वं** (அக்ஷர தத்வம்)=ஸர்வ வியாபக பிரஹ்ம ஸ்வரூபத்தை, **विधिना** (விதிநா)=விதிபூர்வகமாக, "அதனை அறி நமஸ்காராதியால்" (4—34.) என்பதாதியால், **दृष्ट्वा** (திருஷ்டவா)= ஆசார்யர்களினிடத்தினின்றும் அறிந்து, **गुर्व्या भक्त्या** (குர்வ்யா பக்த்யா)=ஆத்மாநாத்ம விஷயமாகிய அந்வய வ்யதிரேகங்களால் த்வம் பதார்த்த சோதந ரூப, பக்தியால்—பசநத்தால், **अहं इत्यत्र** (அஹம் இத்யத்ர)=அஹம் என்னுமிடத்தில் வேத்யமாகிய அநாத்ம அம்ச தியாகத்தினுல் சைதந்ய மாத்திரத்தை, **हृदिस्थं** (ஹிருதிஸ்தம்)=புத்தியில் சாக்ஷித் தன்மையா யிருப்பதை, ஆத்மத் தன்மையால், **उपलभ्य** (உபலப்ய)=அறிந்து, திருசிய அக்ஷரமாகிய அவ்

விரண்டிற்கும் ஏக லக்ஷணத் தன்மையினுல் ஐக்கியத்தை, **ध्यात्वा** (தியாத்வா)=தியாநித்து, **अत्र** (அத்ர)=ஈண்டு அநுபவிக்கப்படும் பிரத்ய கபிந்ந, **तस्मिन्** (தஸ்மிந்)= அக்ஷரத்தில், **अहं अस्मि** (அஹம் அஸ்மி)=நான் இருக்கின்றேன் என்னும் அபேத தரிசநத்தினுல், **यं** (யம்)= எதனை, **विदुः** (விது:)=அறிகின்ருர் அதை யென்பது பொருளாம். "எது அக்ஷரம் அநிர்த்தேசியம் அவ்யக்தம் ஸர்வத்ரகம் அசிந்தி॥ம் கூடஸ்தம் அசலம் துருவத்தை உபாஸிக்கின்ருர்கள்." (பகவற் கீதை 12—3.) † "ஏ பாரத! ஸர்வ க்ஷேத்ரங்களிலும் என்னை க்ஷேத்ரக்ஞனுக அறி" (பகவத் கீதை 13—2.) ‡ "அறியத்தக்கது எது அதைக் கூறுகின்றேன். எதை யறிந்து அமிர்தத்தை அநுபவிப்பாய். அநாதியையுடைய பரப்ரஹ்மம் ஸத்து மன்று அஸத்து மன்று எனக் கூறப்படுகின்றது" (பகவத் கீதை 13-—12.) $ என்பன வாதியிலும், அத்தியாய ஸமாப்தியில், "ஸர்வ பூதங்களிலும் எவர்களால் ஓரவ்யய பாவம் பார்க்கப்படுகின்றது, விபக்தங்களில் அவிபக்த மாயிருக்கின்றது அந்த ஞாநம் ஸாத்விகம் என்றறி." (பகவத் கீதை 18–20.) * என்பதாதி

† பகவற் கீதை–"உரைசெயற் கரிதாய் நெஞ்சி னுணர்விடப் படாதா யெங்கும் புரையறக் கலந்து போக்கு வரவின்றிப் பொலிந்த தொன்றைக்" 12—3.

‡ "மன்னவுடல் யாவையினு மன்னியறி வாய்நின், றுன்னு முயி ரியான்" 13—2.

$ "ஆதியந்த மிலதழி யாதுநின்ற பெருமைய, தோதிலுண்ட திலையெனு மூனமின்றி யொளிர்வது" 13—12.

* "நன்ருய் ஞாநத் திரளாகி நாநா விதமாய் விரிந்தெங்கும், பொன்ரு நின்ற பூதங்க டோறும் பொன்ருப் பொருளாகி, யொன்ருய் நிற்ப தொன்றினையப் படியே யுணரு முணர்வதனை, யன்ரு மென்னுர் சாத்துவிக ஞாந மெனவே யமைப்பாரால்" 18—20.



யில் யாண்டும் கீதையில் பிரஹ்மத்திற்கு அஸங்கத் தன்மை அத்விதீயத் தன்மை பிரத்ய கபிந்நத் தன்மை முதலியன நன்கு நிரூபிக்கப்பட்டிருக்கின்றது என்பது தாத்பரியமாம். 26.

"தம்மாற் செய்யப்பட்ட விசித்ர யோநிகளில் இருப்பது போன்று ஏதுவால் தர தமமும், இதற்கு நெருப்புப் போன்று தம்மாற் செய்யப்பட்ட அநுகிருதி யாது? பின் பொய்யான இவற்றில் பொய்யின்றிய உனது தாமசத்தினை உண்டாக்கும் புத்தியினை உடையோர் அத்வயம் செய்து ஏகரசத் தன்மையினைக் கூறுகின்றனர். ஏகன் த்வம் ஆத்மா புருஷன் புராணன் சத்யன் ஸ்வயம் ஜோதி, அநந்தன், ஆத்யன், நித்யன், அக்ஷரன், நித்ய சுகி, நிரஞ்சநன், பூர்ணன், அத்வயன், உபாதியினின்றும் விடுபட்டவன், அமிருதன். அதனுல் இவ் வெல்லாச் சகத்தும் அசத்ய ஸ்வரூபம் ஸ்வரூபசமம் பிரகஸ்பதி யில்லாதது மிகுந்த துக்க துக்கம். நாசமின்றிய நித்ய சுக போத அநந்த சரீர உம்மிடத்திலே மாயையினின்றும் வெளிப்பட்டதாயினும் எது சத் போன்று விளங்குகின்றதோ, கர்மங்களினுடைய பலத்தினைப்புசிக்கும் எந்தச் சீவனே, அவன் சிவனிடத்து நின்றும் அந்யன் அலன். பேதம் இன்மையானும் சைதந்யம் கர்ம பல யோக்கிய மன்று, அதனுல் சர்வ ஜகத் சாக்ஷி சித் ரூப பரமேசுவரன் அத்விதீயன் மஹாநந்தன், கிரீடையினுல் போகம் பொருந்துகின்றது. எவன் முப் புரங்களிலும் ஜீவ ரூபம் போன்று இருந்து கிரீடிக்கின்றன், அவன் ஜீவன் அலன் சதா சம்புவாம்

சத்யமே சம்சயம் அன்று. சத்யன் அசத்தியத்திற்குச் சாக்ஷித் தன்மையால் சதா சத் சித் சுகம், பிரேமாஸ்பத மாகலின் அத்வைதன் பேத மின்மையால் சுரரிஷபன்." என்பனவற்றில் யாண்டும், சிவ விஷ்ணு புராணங்களிலும், அத்வைத விஷ்ணு பிரத்தியக் கபிந்நம் பிரதிபாதிக்கப்படுகின்றது. என்னும் அபிப்பிராயத்தில் கூறுகின்றர்.

क्षेत्रज्ञत्वं प्राप्य विभुः पञ्चमुखैर्यो
भुंक्तेऽजस्रं भोग्यपदार्थान् प्रकृतिस्थः ।
क्षेत्रे क्षेत्रेऽप्स्विन्दुवदेको बहुधास्ते
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥२७॥

(பதப் பொருள்.) १. यः—எந்த, २. विभुः—பரமாத்மா, ३. प्रकृति-स्थः—அவித்தை அதன் காரியங்களில் பிரதி பிம்ப நுபமாக இருந்து, ४. क्षेत्रज्ञत्वं—ஜீவபாவத்தினை, ५. प्राप्य—அடைந்து, ६. पंच-मुखैः—இந்திரியங்களால், ७. भोग्य-पतार्थान्—சப்தாதிகளை, ८. अजस्रं—சதா, ९. भुंक्ते—அநுபவிக்கின்றது, १०. क्षेत्रे-११. क्षेत्रे—(எது) அந்தக்கரணுதி உபாதிகள் தோறும், १२. अप्सु—(அநேக பாத்திரத்தி லுள்ள) ஜலத்தில், १३. इंदु-वत्—சந்திரன் -போன்று, १४. बहुधा—அநேக பிரகாரமாக, १५. आस्ते —இருக்கின்றது, १६. एकः—ஒன்றேயாம், १७. तं-அந்த, १८. संसार-ध्वांत-विनाशं—சம்சார-இருளினை-நாசம் செய்யும், १९. हरिं—ஹரியினை, २०. ईडे—ஸ்துதிக்கின்றேன் என்ற வாறு.



यः (ய:)=எந்த, विभुः (விபு:)=பரமாத்மா, प्रकृतिस्थः (ப்ரக்ருதிஸ்த:)=அவித்தை அதன் காரியங்களில் பிரதிபிம்ப ரூபமாக (இருந்து), क्षेत्रज्ञत्वं (க்ஷேத்ராஞ்ஞத்வம்)= ஜீவ பாவத்தினை, प्राप्य (ப்ராப்ய)=அடைந்து, पंचमुखैः (பஞ்சமுகை.)=விஷய போகத் துவாரமான இந்திரியங்களால், भोग्य-पदार्थान् (போக்ய-பதார்த்தான்)=சப்தாதிகளை, अजस्रं (அஜஸ்ரம்)=சதா, भुंक्ते (புங்க்தே)=தோற்றுகின்றது. क्षेत्रे क्षेत्रे (க்ஷேத்ரே க்ஷேத்ரே)=எது ஒவ்வொரு அந்தக்கரணுதி உபாதிகளிலும், बहुधा (பஹுதா)=அநேக பிரகாரமாக, अप्सु (அப்ஸு)=அநேக பாத்திரங்களில் உள்ள ஜலத்தில், इंदु वत् (இந்து வத்)=சந்திரன் போன்று, आस्ते (ஆஸ்தே)=இருக்கின்றது, அதனை நமஸ்கரிக்கின்றேன் என்பது பொருளாம். அது "ஒரே பூதாத்மா பூதங்கள் தோறும் இருக்கின்றது. ஜலத்தில் சந்திரன் போன்று ஏகமாகவும் நாநாவாகவும் பார்க்கப்படுகின்றது." (பிரஹ்ம பிந்துபநிஷத் 12.) எனக் கூறப்பட்டிருக்கின்றது. இதன் பொருள் முன் (17 வது சுலோக உரையில்) கூறப்பட்டிருக்கின்றது. 27.

அற்றேல் எல்லா வாதிகளும் த்வைதமே பரமார்த்தம் (என) அங்கீகரிக்கின்றனர், அநேக யுக்திகளினுலும் அதனையே உபபாதநஞ் செய்கின்றனர். அதுவே எல்லோராலும் அநுபவிக்கப்படுகின்றது. சுருதியையும் த்வைத அநுகுணமாகவே பொருத்துகின்றனர். நீங்கள் ஒருவர் மாத்திரமோ அத்வைதம் பரமார்த்தம் (எனக்) கூறுகின்றீர்கள். இதனுல் அநேக பிரதிபக்ஷ மிருத்தலின் உமது பக்ஷத்தில் எங்ஙனம்

விசுவாசம் உண்டாம் என ஆசங்கித்து, வாதி அநேகத் தன்மை, ஏகத் தன்மைகள் வஸ்து நிர்ணயத்தில் பிரயோஜகம் அன்று; பின்னேயோ, பிரமாண யுக்தி மிகுதித் தன்மையேயாம். ஆயிரம் குருடர்கள் கண்ணுடைய ஒருவனது நுப விஷயத்தில் பிரதிவாதி யாவதற்கு யோக்கியர்களல்லர். பிரமாண யுக்தி மிகுதித் தன்மையும் நமது பக்ஷத்திலேயே யாம். மற்றையவிட (த்வைத)த்திலும் பிரமாண யுக்தி ஆபாச மிகுதியே யாம். அதுவும் சர்வஞ்ஞ பகவத் வாத ராயணர் இயற்றிய பிரஹ்ம சூத்ர பரியாலோசநத்தினுல் நன்கு வெளிப்படையாக அறிதற்குச் சமர்த்தமாம் என அபிப்பிராயம் செய்து கூறுகின்றூர்.

युक्तयालोड्य व्यासवचांस्यत्र हि लभ्यः
क्षेत्रक्षेत्रज्ञान्तरविद्भिः पुरुषाख्यः ।
योऽहं सोऽसौ सोऽस्म्यहमेवेति विदुर्यं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥२८॥

(பதப் பொருள்.) ௧. व्यास-वचांसि—வியாச—வசநங்(களாகிய பிரஹ்ம சூத்ரங்)களை, ௨. आलोड्य—நன்கு விசாரித்து, ௩. युक्तया—யுக்தியால், ௪. क्षेत्र-क्षेत्रज्ञा-अंतर-विद्भिः—க்ஷேத்ர-க்ஷேத்ரஞ்ஞ-பேத விவேக முடையோர்களால், ௫. पुरुष-आख्यः—பரமாத்மா, ௬. अत्र ௭. हि—தேஹத்தின்கண்ணே, ௮. लभ्यः—அடைய யோக்யமாம், ௯. यः—எந்தத் தேஹேந்த்ரியாதி, ௧௦. अहं—சாக்ஷி,



௧௧. सः—அது, ௧௨. असौ—பரமேசுவரன், ௧௩. सः—(எது பரமேசுவரன்) அது, ௧௪. अहं ௧௫. एव—நானுகவே, ௧௬. अस्मि—இருக்கின்றேன், ௧௭. इति—என்று, ௧௮. यं—எதனை, ௧௯. विदुः—அறிகின்றனர், ௨௦. तं—அந்த, ௨௧. संसार—ध्वांत—विनाशं—சம்சார—இருளினை—நாசம் செய்யும், ௨௨. हरिं—ஹரியினை, ௨௩. ईडे—ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு.

*व्यासवचांसि (வ்யாஸவசாம்ஸி)="அதாதோ பிரஹ்ம ஜிஞ்ஞாஸா" (1—1—1.) என்பது முதல், "அநாவிருத்தி: சப்தாத் தநாவிருத்தி: சப்தாத்" (4—4—22.) என்ப தந்தமான பிரஹ்ம சூத்திரங்கள் அவ்வச் சுருதியை மூலமாகக் கொண்டன. आलोड्य (ஆலோட்ய)=நன்கு விசாரித்து, युक्तया (யுக்த்யா)=தர்க்கத்தினுல், இது உபலக்ஷணம். பாதிக்கப்படாத பிரமாணத்தினுல், क्षेत्रक्षेत्रज्ञांतरविद्भिः (க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞாந்தரவித்பி:) = க்ஷேத்ரங்களுடைய — தேஹாதி அஹங்கார பரியந்தமான அந்தரங்களுடையதும், பிருதிவியாதி அவ்வியாகிருத பரியந்தமான பாஹ்யங்களுடையதும், க்ஷேத்ர க்ஷேத்ரஞ்ஞர்—ஜீவ பரமேசுவரர்களுடைய விவேகத்தினை எவர்கள் அடைகின்றனர், तैः (தை:)=அந்த அந்த உபாதி நிராகரணத்தினுல் சோதிக்கப்பட்ட இரு பதார்த்தங்களை உணர்பவர்களால் என்பது பொருளாம். पुरुषाख्यः (புருஷாக்ய:)=மூவித பரிச்சேதம் இன்மையினுல் பூரணத் தன்மையினுல் புருஷன் எனப் பெயர் எதற்கோ அந்தப் பரமாத்மா. अत्रहि (அத்ர ஹி)=ஈண்டே—தேஹேந்திரியாதி சங்காதத்தில். அதன் சாக்ஷி பிரத்யக்த் தன்மையினுல் लभ्यः (லப்ய:)=வித்தையினுல் அடைதற்குச் சக்கியமாம்.*

அதனை அறியும் பிரகாரத்தினையே கூறுகின்றார். **योऽहं** (யோஹம்) = தேஹேந்திரியாதி சாக்ஷி. **सोऽसौ** (ஸோ ஸௌ)=பரமேசுவரன். எவன் பரமேசுவரன்? **सोऽस्म्यहमेवेति यं विदुः** (ஸோஸ்ம்யஹமேவேதி யம் விது:)= பிரத்யகாத்மாவிற்குப் பிராந்தியினாற் சித்தித்த அப்பிரமத் தன்மை வியாவிருத்தியின் பொருட்டும், பிரஹ்மத்திற்கும் ஆரோபிக்கப்பட்ட பரோக்ஷத் தன்மை நிவிர்த்தியின் பொருட்டும், பரஸ்பர வியதீகாரத்தினால் எதனை அறிகின்றனர் என்பது பொருளாம். "அது நீயே நீ அதுவே" என்பன வாதி (கைவல்யோபநிஷத் 1—6.) சுருதியால். இது தாத்பரியமாம்:— சூத்திரக்காரராகிய பகவாந் வாதராயணரும், "அதாதோ பிரஹ்ம ஜிஞ்ஞாஸா" (1—1—1.) எனத் திரிவித பரிச்சேத சூந்ய பிரத்யக் கபிந்ந பிரஹ்மத்திற்கு முமுக்ஷு புருஷரால் விசாரிக்கப்படுந் தன்மை பிரதிஞ்ஞை செய்து, அறியத்தக்க பிரஹ்மத்திற்கு லக்ஷணம் யாது? பிரமாணம் யாது? என்னும் ஆகாங்க்ஷையில், "ஜந்மாத்யஸ்ய யத:" (1—1—2.) என்னும் சூத்திரத்தினால் லக்ஷணமும், "சாஸ்த்ரயோநித்வாத்" (1—1—3.) என்னும் சூத்திரத்தினால் பிரமாணமும் உபந்யாசம் செய்து, சாஸ்திரம் கார்ய பரமாகலின் சித்தப் பிரஹ்ம பரத் தன்மை யாங்ஙனம் எனச் சங்கையில், "தத்து சமந்வயாத்" (1-1-4.) என்னும் சூத்திரத்தினால் காரிய பரத்வ நிராகரண பூர்வகம் சித்தப் பிரஹ்ம பரத் தன்மை பெகுவித அநேக நியாயங்களால் உபபாதித்து, பின்னர், "ஈக்ஷதேர் நாசப்தம்" (1—1—5.) என்னும் அதிகரணத்தினால் ஜகத்திற்குப் பிரதாநம் காரணமாந் தன்மையினை நிராகரித்துப் பிரஹ்மத்தின்



கண்ணேயே எல்லா வேதாந்தங்கட்கும் கதி சாமாந்யமும் பிரதிஞ்ஞை செய்து, அந்தக் கதி சாமாந்யமே, "ஆநந்தமயோப்யாசாத்" (1—1—12.) என ஆரம்பித்து, ஒன்று இரண்டு மூன்று பாதங்களால் அந்யார்த்தத் தன்மைச் சங்கை நிரசந பூர்வகம் உபபாதித்து, நான்காம் பாதத்தில் சில அதிகரணங்களால் பிரதாநத்திற்கு அசப்தத்தன்மையினை விரித்து. பிரமாண உபந்யாசத்தின் பின், அந்தப் பிரஹ்மம் ஜகத்திற்கு பிரகிருதித் தன்மையினாலும், நிமித்தத் தன்மையினாலும். "பிரகிருதிச்ச பிரதிஞ்ஞா திருஷ்டாந்தாநுபரோதாத" (1—4—23) என்னும் அதிகரணத்தினால் வியவஸ்தாபித்து முதல் அத்தியாயத்தினைச் சமாப்தி செய்தனர்.

பின் இரண்டாவது அத்தியாயத்தில், முதல் பாதத்தினால் தமது பக்ஷத்தில் சாங்கிய யாக வைசேஷிகாதி ஸ்மிருதி விரோதத்தினைப் பரிஹாரம் செய்து அவர்களால் உண்டு பண்ணப்பட்ட தர்க்க விரோதத்தினை அத்வைத சமந்வயத்திற்கு நன்கு கண்டித்தனர். அதன் பின் இரண்டாம் பாதத்தினால், சாங்கிய வைசேஷிக நையாயிக பௌத்த க்ஷபணக பாஞ்சராத்திராதிகளுடைய பக்ஷங்களுக்கு அநேகவித அசார யுக்தி ஆபாச கற்பித தன்மையினை ஸ்பஷ்டமாகச் சில அதிகரணங்களால் அறிவித்து, தடஸ்த ஈசுவரனையும் பிரமாண புக்தி சூந்யத் தன்மையினால் கண்டித்திருக்கின்றனர். அதன்(பின்) மூன்றாம் பாதத்தினால், பூத போக்திரு சுருதிகளுக்கும், நான்காவதால், லிங்க தேஹ சுருதிகட்கும் பரஸ்பர விரோதத்தினை நன்கு நிவிர்த்தித் திருக்கின்றனர்.

இவ்வாறு இரண்டாவ தத்தியாயத்தினால் அத்வய சமந்வய விரோதத்தினைப் பிரதிக்ஷேபம் செய்து, மூன்றுவது அத்தியாயத்தில், முதற்பாதத்தினால் சம்சாரிக்கு இஹாமுத்ரமும், கதி ஆகதி நிரூபண பூர்கவம் சம்சார தோஷ விவேசநத்தினால் அதிகாரி விசேஷணமான வைராக்கியத்தினைத் திடம் செய்து, அதன் பின் இரண்டாவது பாதத்தினால், வாக்கியார்த்த ஞாநாங்கத் தன்மையினால் ஜாக்கிரதாதி அவஸ்தைகளினின்றும் பிரித்துத் த்வம் பதார்த்தத்தினை அறிவித்து, தத் பதார்த்தமும் சகலத் த்வைதப் பிரபஞ்ச நிராச பூர்வகம் பிரித்து அறிவித்திருக்கின்றது. அதன்(பின்) மூன்றுவது பாதத்தினால், வித்யா பேத அபேதங்களால் குண உபசம்ஹார அநுபசம்ஹாரங்கள் தெரிவித்து, விதி ரூப அவாந்தர வாக்கியத்திற்கும், நிஷேத ரூப அவாந்தர வாக்கியத்திற்கும் பரிமாண நியாயத்தினால் காட்டி, அதன் (பின்) நான்காவது பாதத்தினால், “புருஷார்த்தோத: சபதாதிதி பாதராயண” (3–4–1.) என்னும் முதல் அதிகரணத்தினால் கர்மாபேக்ஷையின்றிய பிரஹ்ம ஞாநத்திற்கே மோக்ஷ சாதநத் தன்மையினை சாதித்து, அதன் உத்பத்தியிலும் அந்தரங்க சாதநம் சந்யாச சாந்தியாதிகள் (என்றும்), பகிரங்க சாதநம் எக்ஞாதிகள் எனவும் அறிவித்து, ஞாந சாதநம் இருப்பவற்கும் பிரதிபந்தகம் இல்லாதிருக்கில் ஈண்டே பலமாம். அஃதிருக்கின் பரலோகத்தில் என அந்திமாதிகரணத்தினால் கூறி மூன்றுவது அத்தியாயத்தினைச் சமாப்தி செய்தனர்.

அதன் (பின்) நான்கில், முதற் பாதத்தினால், “ஆவிருத்திரசகிருதுபதேசாத்” (4–1–1.) என்னும் அதிகரணத்தினால் பிரஹ்ம சாக்ஷாத்கார பரியந்தம் சிரவணாதி ஆவிர்த்திகர்த்தவயத் தன்மையினால் அறிவித்து, “ஆத்மேதிதூபகச் சந்திகிராகயந்திச” (4–1–3.) என்னும் அதிகரணத்தினால் ஜீவப் பிரஹ்ம அபேதம் வாக்கியார்த்தமும் நன்கு அறிவித்து, அதன் (பின்) சகுணோபாசனுக்குக் கிரம முக்தியினைக் கூறி, இரண்டாம் பாதத்தினால், மீண்டும் அவனுக்கே உத்கிராந்திப் பிரகாரத்தினை வர்ணித்து, அதன் பின் மூன்றுவதால், உத்தர மார்க்க சிந்தையின் வாயிலாய் அவனுக்கே காரியப் பிரஹ்மப் பிராப்தியினைத் தெரிவித்து, நிர்க் குணப் பிரஹ்மவித்திற்கும் கதி உத்கிராந்திகளை நிஷேதித்து, அதன் (பின்) நாலால், நிர்க்குண வித்தையின் பலமும் பிரஹ்மலோகத்தில் ஐசுவரியமும் கூறி, அந்தச் சகுண வித்துவானுக்கு முடிவில், “அநாவிருத்தி: சப்தாதநாவிருத்தி: சப்தாத்” (4–4–22.) எனப் பிரஹ்ம உபதேசத்தினால் முக்தியினை அறிவித்து உபராமம் அடைந்தது.

இவ்வாறு சர்வஞ்ஞ வாத ராயணர் இயற்றிய சாதுர் லக்ஷணி மீமாசை பரிசிலமாயிருக்கில் பேத வாதி நாய்களுடைய குலைத்தல்களினால் அத்வைத கநகாசலத்திற்கு ஒருவித குறைவும் இல்லை. 28.

அற்றேல் இவ் வதிகாரி தனது தேஹ இந்திரிய முதலியவற்றின் சாக்ஷி சைதந்யத்திற்கே பிரஹ்மத் தன்மை அறிவதா? அல்லது, எல்லாச் சரீரம் முதலியவற்றின் சாக்ஷிக்குமா? முதலதில், வேறு புருஷர்

களிடத்துள்ள சைதந்யம் பரமார்த்தம் என அறிவதா? அல்லது கற்பிதம் எனவா?, முதல தன்று, த்வைதப் பிரசங்கத்தால். இரண்டாவது அன்று, அந்தத் திருஷ்டாந்தத்தினுல் தனக்கும் கற்பிதத் தன்மைப் பிரசங்கத்தால், இரண்டாவதாயின், கூறிய தோஷ மிரண்டு மின்று, பின்னேயோ தனக்குப் பிரஹ்மத் தன்மையின் ஞானத்தினுல் சம்சார நிவிர்த்தி போல அந்நியர்கட்கும் தனது ஞான காலத்தில் அதன் நிவிர்த்திப் பிரசங்கம் எனச் சங்கித்து, தனது சாக்ஷி சைதந்யம் போன்று வேறு புருஷர்களிடத்துள்ள சைதந்யத்துக்கும் பிரஹ்மத் தன்மை அறிகின்றன் என்னும் அத் விதீய பக்ஷத்தினே அவலம்பித்துக் கூறுகின்றர்.

एकीकृत्यानेकशरीरस्थमिमं ज्ञं
यं विज्ञायेहैव स एवाशु भवंति ।
यस्मिन् लीना नेह पुनर्जन्मलभंते
तं संसारध्वांतविनाशं हरिमीडे ॥ ॥२९॥

(பதப் பொருள்) १. **अनेक**—அநேக, २. **शरीर**—சரீரங்களில், ३. **स्थं**—இருக்கப்பட்ட, ४. **इमं**—இந்த, ५. **ज्ञं**—சைதந்யத்தை, ६. **एकी**—ஒன்று, ७. **कृत्य**—செய்து, ८. **यं**—எந்த, (பரமாத்மாவினே), ९. **विज्ञाय**—



அறிந்து, १०. इह ११. एव—இத் தேஹத்திலேயே, १२. आशु—அப்பொழுதே, १३—स १४. एव—பரமாத்மாவாகவே, १५. भवंति—ஆகின்றதோ, १६. यस्यिन्—எந்தப் பிரஹ்மத்தில், १७. लीना—உபாதி யின்றி ஏகமாகி, १८. इह—சம்சாரத்தில், १९. पुनः—மீண்டும், २०. जन्म—உத்பத்தியினே, २१. न २२. लभंते—அடைவ தில்லேயோ, २३. तं—அந்த, २४. संसार—ध्वांत—विनाशं—சம்சார—இருளினே—நாசம் செய்யும், २५. हरिं—ஹரியினே, २६. ईडे—ஸ்துதிக்கின்றேன் என்ற வாறு.

**अनेकशरीरस्थं** (அநேகசரீரஸ்தம்)—அநேக சரீரங்களில், தேவ திரியக்காதி சரீரங்களில், சாக்ஷியாக இருக்கும், **इमं ज्ञं**—(இமம் க்ஞம்)—இந்தச் சைதந்யத்தை, **एकीकृत्य** (ஏகீகிருத்ய)—பரமாத்ம அபிந்நத் தன்மையினுல் ஒன்று செய்து அறிந்து, அதன் பின் சர்வாத்ம பூதமான, **यं**—(யம்)=பரமாத்மாவினே, **विज्ञाय** (விக்ஞாய)—தேஹ இந்திரியாதி சாக்ஷி பிரத்யக் அபிந்ந ரூபமாக அபரோக்ஷம் செய்து, **इहैव** (இஹைவ)=இந்தத் தேஹத்தின்கண்ணே. **आशु** (ஆசு)=அப்போதே, **स एव**—(ச ஏவ)=சர்வ பூத பரமாத்மாவாகவே ஆகின்றது என்பது பொருளாம். ஈண்டு "எந்தப் பரப் பிரஹ்மம் சர்வாத்மா ஜகத்திற்கு இடம் மஹத் சூக்ஷமத்தினின்றும் சூக்ஷமதரம் நித்யம் அது நீயே நீ அதுவே" (கைவல்யோபநிஷத் 1–6), "பிரஹ்மத்தினே உணர்ந்தவன் பிரஹ்மமே ஆகின்றனன்" (முண்டகோபநிஷத் 3—2—9.), "அது எது எது தேவர்கள் உணர்ந்தனர் அதுவே அது ஆயிற்று" (பிரஹதாரண்யகோபநிஷத்—1—4—10.) என்பன சுருதியாம். இந்த மந்திரத்தில், சுரோதாவின் பிரத்தியக் காத்மாவை அநுவதித்துப் பிரஹ்மாதி ஸ்தம்ப பரியந்த பிரத்தியக் ரூப சகல ஜகத் அதிஷ்டாந பிரஹ்

மத் தன்மையினைப் போதிக்கின்றது. எல்லோரது பிரத்தியக்காத்மாவிற்கும் பிரஹ்மத் தன்மையில் தன்னிடத்திற் போல மற்றையோர்களிடத்தும் சம்சார நிவர்த்திப் பிரசங்க தோஷம் என்னற்க; பிரஹ்மவித்துத் திருஷ்டியால் அங்க நிவிர்த்தி வருகின்றதா? அங்யர் திருஷ்டியாலா? ஈற்ற தன்று, மற்றையோர்கட்கு, தம தாத்மாவிற்கும் பிரஹ்மத் தன்மையின் ஞாநம் இன்மையின் அத்திருஷ்டியினுல் அவர்களிடத்தில் சம்சார நிவிர்த்தி யில்லை, பிரஹ்மவித் திருஷ்டியினுல் அதன் நிவிர்த்தியோ இஷ்டமேயாம். எப்பொழுது பிரஹ்மவித் தமது தேஹேந்திரியாதி சாக்ஷியாகிய அசங்கத்தை, நிர்விகார அசம்சாரி பிரஹ்மத் தன்மையினுல் பார்க்கின்றுன், அப்பொழுது அங்நியரது தேஹேந்திரியாதி சாக்ஷியையும் அங்ஙனமே பார்க்கின்றுன். அது பிரஹ்ம கீதையில், "தன் தேகத்திலும் அங்யதேஹங்களிலும் சமமாக அந்தத் திடத்தினை நிச்சயித்து, பின் தீரன் ஜநிப்ப தில்லை அமிருதன் ஆகின்றுன்'' (4—46.), "பக்தன் முக்தன் மஹான் வித்வான் அஞ்ஞன் என்ப வாதி பேதத்தினுல் ஸ்வயம் ஒரே சேதநம் ஸ்வப்நம் போன்று நாநாவாக விளங்குகின்றது'' * (4—47.), "ஹே தேவர்காள்! ஆத்மவித்வரன் இதனுல் தமது முக்தியினுல் ஏனைய ஆபாசர்களுக்கும் நிச்சயமாக முக்தியினை உணர்கின்றுன்'' (4—48.), "தமது சம்சார தசைக்கண்ணே தமது பிராந்தியினுல் சர்வ

* தங்களி யாக்கையிற் சகலயர்க் கையினிலுங் தத்துவ மதிதானே, யெங்கு மொன்றெனக் காண்பவ ரியாவரிங் கிறந்திடார் பிறவாராற், பங்கு பட்டறிங் தவனறி யாதவன் பந்தமுத் தமதென்றே, யிங்கொ ருத்தனே நிகழ்பவ சேதந னிவைகந வியல்பொக்கும், (பிரஹ்ம கீதை, 4—20.)



தேஹிகளுக்கும் ஆபாசர்களுக்கும் சம்சாரத்தினை அறிகின்றனர். அவ்வாறே முக்தியும் ஆம்'' § (4—49.) என்று கூறப்பட்டிருக்கின்றது.

இதனுல் பிரஹ்மாதி ஸ்தம்ப பரியந்த பிரத்தியக் ரூப சர்வாதிஷ்டாநத்தினைப் பிரஹ்மாத்ம ரூபமாக அறிகின்ற புருஷனுக்குத் தன் றேகத்தில், அல்லது அங்நிய தேஹத்தில் சம்சாரம் என்னும் அபிப்பிராயம் இல்லை.

அற்றேல், பிரஹ்ம ஞாநத்தினுல் நிவிர்த்தியான சம்சாரத்திற்கும் ஒருகால் மீண்டும் உத்பத்தியாம்; சுழுத்தி பிரளயங்களில் நிவிர்த்தியானதற்கு விழிப்புச் சமயத்தில் மீண்டும் உத்பத்தி பார்க்கப்படுதலின் என்னும் சங்கையில் கூறுகின்றுர், 'யஸ் மிங்' என்பதாதியால். **यस्मिन्** (யஸ்மின்)—பிரஹ்மத்தில், **लीना** (லீநா)—உபாதி பரித்தியாகத்தினுல் ஏகமான, **इह** (இஹ)—சம்சாரத்தில், **पुनर्जन्मनलभन्ते** (புநர்ஜந்மநலபந்தே)—அடைவ தில்லை, அதை என்பது பொருள். "ந ச புநராவர்ததே'' (அது மீண்டும் திரும்புவ தில்லை) (சாந்தோக்யோபநிஷத் 8—15—1.) என்பன வாதி சுருதியினுல். சுழுத்தி முதலியவற்றில் சம்சார காரணமான அஞ்ஞாநம் நிவிர்த்தியாகாமையின், ஈண்டுத் தத்வ ஞாநத்தினுல் அதன் நிவிர்த்தியாகலின் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களுக்கு விஷமத் தன்மை யிருக்கின்றது என்பது கருத்தாம். 29.

§ தன்னில் வேறிலா மையிற்பா முத்தியிற் றனதுபுத் தியினுலே, அங்நி யங்களாய்த் தோன்றுமா பாசர்க்கும் பாபத மறிகின்றுன், முன்ன மெப்படி மூடமாந் தசையிற்றன் மோகத்தா லெலாம் பெத்த, மென்ன வுற்றனன் முத்தியு மப்பரி சிருக்கும தியல்பேயாம், (பிரஹ்ம கீதை 4—21.)

பிரஹதாரண்யத்தில் நான்காவது (5) அத்தியா யத்தில் மதுப் பிராஹ்மணத்தில் இவ்வாறு கேட்கப் படுகின்றது. "இந்தப் பிருதிவி எல்லாப் பூதங்கட்கும் மது வாம். இந்தப் பிருதிவியின்பொருட்டு எல்லாப் பூதங் களும் மதுவாம். இந்தப் பிருதிவியில் எந்தத் தேஜோ மய அமிருதமய புருஷன் உளனே? எது அத்யாத்மம் சரீரம் தேஜோமய அமிருதமய புருஷன் உளனே? இதுவே அதுவாம் எவ் இவ் ஆத்மா இது அமிருதம் இது பிரஹ்மம் இது எல்லாம்" (1) "இது ஜலம்" (2) "இது அக்நி" (3), "இது வாயு" (4), "இது ஆதித்யன்" (5) என இவ்வாறு அநேக பரியாயங்கள் கேட்கப்படுகின் றன. அவற்றுள் முதற் பரியாயத்திற்கு இது பொருளாம். இந்த மஹா பிருதிவி எல்லாப் பூதங்கட்கும் மது. மது போன்று போக்கியம். எங்ஙனம் தேனீக்களினுடைய ஒரு மது படலம் அது போன்றும். அங்ஙனமே இந்தப்பிருதி விக்கு எல்லாப் பூதங்களும் மதுவாம். இதனுல், பிருதிவிக் கும் பூதங்கட்கும் பரஸ்பரம் போக்கியத் தன்மையினுல் பரஸ்பரம் காரிய காரணத் தன்மை கூறப்பட்டது; அத னுல் அவ் விரண்டும் மித்தை என்பது பொருளாம். அவ் விரண்டிலும் உபஹிதமான புருஷனுக்கு ஏகத் தன்மை 'எது' என்பதாதியால் கூறப்படுகின்றது. எது இப் பிருதிவி யில்தேஜோமயம்–சைதந்யப் பிரகாச ரூபம், அமிருதமயம் உபாதி நாசத்திலும் தான் நாச மில்லாத தர்மா புருஷன், எது இந்த அத்யாத்மம், சரீர—ஸ்தூல சரீர உபாதியினை உடைய, தேஜோமய— அமிருதமய புருஷன், இதுவே பிருதிவி உபாதி உடைய புருஷன். இது என்னும் சொற் பொருள் கூறப்படுகின்றது; எவ் இவ் ஆத்மா என.



ஆத்மா–ஸ்தூலசரீர உபாதியினை உடையவன். அத்யாத்ம அதிதைவத உபாதி பேதத்தினுலேயே இரண்டற்கும் பேதமாம், ஸ்வரூபமாக (ப்பேதம்) அன்றும் என்பது பொருளாம். இந்த உபாதி யிரண்டின் உபஹித சைதந் யம், அமிருதம்—அவிநாசி, அதனுல் இந்தப் பிரஹ்மம் ஜகத் காரண ரூபம் அதனுலேயே அந்த உபாதி யிரண் டின் உபஹித சைதந்யமே, சர்வம்—சகலம் ஜகத், அதற்கு அந்யமாக எல்லாம் இல்லை என்பது பொரு ளாம். இவ்வாறு எல்லாப் பரியாயங்களிலும் அறிந்து கொள்க. மற்றைப் பரியாயங்களிலோ அம்பு ரேத உப ஹிதங்கட்கு ஏகத் தன்மை, அதன் பின் அக்கிநி வாக் உபஹிதங்கட்கு ஏகத் தன்மை, அதன் பின் சூர்ய சக்ஷு உபஹிதங்கட்கு, இவ்வாறு எல்லாவிடத்தும் பரியாயங் களிலும் அத்யாத்ம அதிதைவத உபஹித த்வந்த்வங் கட்கு ஏகத் தன்மை கூறுவது வாயிலாக எந்தச் சர்வாத் மகப் பிரஹ்மம் பிரதிபாதிக்கப்பட்டதோ, அந்த விஷ்ணு வினை இப் பொழுது ஸ்துதிக்கின்றர்.

द्वन्द्वैकत्वं यच्च मधुब्राह्मणवाक्यैः

कृत्वा शक्रोपासनमासाद्य विभूत्या ।

योऽसौ सोऽहं सोऽस्म्यहमेवेति विदुर्यं

तं संसारध्वान्तविनाशं हरिमीडे॥ ॥३०॥

(பதப் பொருள்), १. मधु—ब्राह्मण—वाक्यैः—மதுப்—பிராஹ்மண வாக்கியங்களால், २. यत्—३. च—எந்த,—४. द्वंद्व—அத்யாத்ம—அதிதைவ த்வந் துவங்களில், ५.—एकत्वं—ஐக்கியத்தினை, ६. कृत्वा—செய்து, ७. विभूत्या—ஈசுவரபாவத் தன்மையினால், ८. शक्रः—இந்திரன், ९. उपासनं-(தனது) உபாசனையினை, १०. आसाद्य = அடைந்து, ११. यः—எது, १२. असौ—இது, १३. सः—அது, १४ अहं—நான், १५. सः—அது, १६. अहं १७. एव—நானே, १८. अस्मि—ஆகிறேன், १९. इति—என்று, २०. यं—எதனை, २१. विदुः—அறிந்தனனோ, २२. तं—அந்த, २३.—-संसार-ध्वांत-विनाशं-சம்சார-இருளினை-நாசம் செய்யும், २४. हरीं—ஹரியினை, २५. ईडे—ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு.

**मधुब्राह्मणवाक्यैः** (மதுப்பிராஹ்மண வாக்யை:)—மதுப்பிராஹ்மண வாக்கியங்களால், **यच्च** (யச்ச)—எது இது இதில் என்பன வாதிகளால் ஒவ்வொரு பரியாயத்திலும் அத்யாத்ம அதிதைவத் தன்மை த்வந் த்வ ஏகத் தன்மை கூறப்பட்டிருக்கின்றது. த்வந் த்வங்களினுடைய—பிருதிவி சரீர அக்நி வாக்காதி உபஹிதங்கட்கு எவ் வைக்கியம் கூறப்பட்டதோ அதனை, **कृत्वा** (கிருத்வா)—அதன் கிரஹணப் பிரயுக்தியினால், **विभूत्या** (விபூத்யா)—ஈசுவரபாவ ப்ராப்தியினால், **शक्रः** (சக்ர:)—இந்திரனால், **उपासनं** (உபாசநம்)—தனது உபாசனையினை, **आसाद्य** (ஆசாத்ய) அடைந்து, "எவன் இவ்வாறு பிராஹ்மணன் அறிகின்றான் அவன் தேவர்கள் பசுவாக இருக்கின்றனன்", பசுவாக இருக்கின்றனன் என்பது பொருளாம் என்னும் சுருதியிற் கூறிய தேவ பசுத் தன்மை வியாவிருத்தியினால் ஈசுவர அபேதமாகத்



தேவர்களால் உபாசிக்கப்படுந் தன்மையினை அடைந்து, என்பது பொருளாம். **योऽसौ** (யோசௌ)—எவன் சர்வாத்மா பரமேசுவரன், **सोऽहं योऽहमस्मि** (சோஹம் யோஹமஸ்மி) புத்தி முதலியவற்றின் சாக்ஷி, **सोऽसौ** (சோசௌ) பரமேசுவரன் எனப் பரஸ்பர வியதிகாரத்தினால், **यं** (யம்) பரமேசுவரனை, **विदुः** (விது:)—சாக்ஷாத் அநுபவிக்கின்றனரோ, அதனை ஸ்துதிக்கின்றேன், "சக்கிரன் உபாசனையினை அடைந்து எதனை அறிந்தனன்" என்னும் பிரயோகம் முகம் வியாதாய ஸ்வபிதி என்பது போன்று உணர்க. **30**

"அது எது நான் அது இது எது இது அது நான் நீ, அல்லது நானு இருக்கிறேன் பகவாந் தேவதை நான் நீயா இருக்கிறாய் பகவாந் தேவர்கள்" என்பனவாதி சுருதிகளால் பரஸ்பர வியதிகாரத்தினால் உபாஸ்யத் தன்மையினால் பிரதிபாதிக்கப்படும் விஷ்ணுவினை ஸ்துதிக்கின்றார்.

**योऽयं देहे चेष्टयितान्तःकरणस्थः**
**सूर्ये चासौ तापयिता सोऽस्म्यहमेव ।**
**इत्यात्मैक्योपासनया यं विदुरीशं**
**तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ॥३१॥**

[பதப் பொருள்] १. यः—எது, २. अयम्—இந்த, ३. देहे—தேஹத்தில், ४. चेष्टयिता—தொழிலைச் செய்விக்கின்றது, ५. अन्तःकरण—स्थ—அந்தக் கரணத்தில்—இருக்கின்றது, ६. सूर्ये— ७. च—சூர்யனிடத்திலும், ८. असौ—இது,

९. तापयिता—தபிக்கச் செய்கின்றது, १०. सः—அது, ११. —अहं—१२. एव—நானுகவே, १३. अस्मि—இருக்கின்றேன், १४. इति—என்று, १५. आत्म—ஆத்மாவின், १६.—ऐक्य—ஏகத் தன்மை, १७. उपासनया—உபாசனையினுல், १८. यं—எந்த, १९. ईशं—ஈசனை, २०. विदुः—அறிந்தனரோ, २१. तं—அந்த, २२. संसार—ध्वांत—विनाशं—சம்சார—இருளினை—நாசம் செய்யும், २३. हरिं—ஹரியினை, २४. ईडे—ஸ்துதிக்கின்றேன் என்ற வாறு.

योऽयं देहे चेष्टयिता—(யோயம் தேஹே சேஷ்டயிதா)—சேஷ்டா ஏதுவாயிருக்கின்றது, ஜடதேஹசேட்டை, லிங்கத்தினுல் அறியத்தக்கதாம். இது அதன் காரணமாகலின் சேதநமாக இருக்கின்றது, அசேதநமாகிய அதற்கு சேஷ்டா ஹேதுத் தன்மை உபபாதநம் செய்கின்றூர் அந்தக் கரணஸ்த என. அந்தக்கரண உபாதிகன் என்பது பொருளாம். இந்த அந்தக்கரண உபஹிதமே, सूर्ये चाऽसौ तापयिता (சூர்யே சாசௌ தாபயிதா)—தபித்தலினுல் சூர்யனுக்குப் பிரயோஜக கருத்திருத் தன்மையினுல் அந்தர்யாமி ஆகின்றது, எது சூர்யனிடத்தில் தபிக்கச் செய்கின்றது, सो अहं एव अस्मि (ஸோ அஹம் ஏவ அஸ்மி)—அது நானுகவே யிருக்கின்றேன் என்னும் பிரகாரத்தினுல் ஆத்மைக்கிய உபாசனையினுல் பரஸ்பர வியதிகாரத்தினுல் ஆத்மைகத் தன்மைச் சிந்தநத்தினுல், यं ईशं विदुः (யம் ஈசம் விதுः)—எந்த ஈசுவரனை அறிந்தனரோ, அதனைத் துதிக்கின்றேன் என்பது பொருளாம். 31.

உபாஸ்த் தன்மைப் பேயரினுல் வேத்யத் தன்மைச் சங்கையின் அடைவினை நிராகரணம் செய்கின்றூர்.



विज्ञानांशो यस्य सतः शक्त्यधिरूढो
बुद्धिर्बुध्यत्यत्र बहिर्बोध्यपदार्थान् ।
नैवान्तःस्थं बुध्यति यं बोधयितारं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥३२॥

[பதப் பொருள்] १. यस्य—எந்த, २. सतः—பரமார்த்த சத் ரூபப் பரமேசுவரனது, ३. विज्ञान—४. अंशः—ஞாநாம்சம், ५. शक्ति—६. अधिरुढः—பிரஹ்மத்தினது அவித்தியா சக்திப் பிரதிவிம்பித ஜீவந், ७.अत्र—ஜகத்தில், ८. बहिः—வெளியிலும், ९. बोध्य— १०. पदार्थान् —உள்ளிலும் உள்ள பதார்த்தங்களை, ११. बुध्यति—அறிகின்றது, १२. अंत—स्थं—உள்ளில் உள்ள, १३. यं—எந்த, १४.—बोधयितारं—அறியுந் தன்மையினைக் கொடுக்கின்றதை, १५. न—१६. एव—१७. बुध्यति—அறிகின்றதே இல்லை, १८. तं—அந்த, १९. संसार—ध्वांत—विनाशं—சம்சார—இருளினை—நாசம் செய்யும், २०. हरिं—ஹரியினை, २१.—ईडे—ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு.

सतः (சதः)—பரமார்த்த சத் ரூபப் பரமேசுவரனுடைய, विज्ञानांशः (விக்ஞாநாம்சः)—ஸ்வரூப ஞாநத்தினது—அம்சம் போன்று அம்சம், பிரஹ்மத்திற்கு நிரவயவத் தன்மை உளவாகலின், शक्त्यधिरूढः (சக்தியதிரூடः)—பிரஹ்மத்தினது அவித்யா சக்திப் பிரதிபிம்பித ஜீவந், बहिः (பஹிः)—உபலக்ஷம், உள்ளிலும், बोध्यपदार्थान् (போத்ய பதார்த்தாந்)—

போத்திய பதார்த்தங்களை, **बुद्धि** (புத்தி)—புத்தி அதன் தர்மங்களையும், கடபடாதிகளையும், **अत्र** (அத்ர)—ஜகத்தில், **बुध्यति** (புத்யதி)—அறிகின்றது, புத்தியோ, **अंतस्थं** (அந்தஸ்தம்)-தனது உள்ளில் இருக்கும், **बोधयितारं** (போதயிதாரம்)-பாஹ்ய பதார்த்த போதத்தில், தனக்குப் போத்திருத் தன்மையினைக் கொடுக்கும் சைதந்ய சம்பந்தம் இன்றிச் சடமாய் இருக்கும் தனக்குப் போத்திருத் தன்மை பொருந்தாமையின் **यं** (யம்) எந்த ஸ்வயம் பிரகாச சித் ரூபத்தினை, **न बुद्ध्यति** (ந புத்தயதி) அறிகின்றதில்லை அதனை என்பது பொருளாம்.

ஈண்டு "அரே! விஞ்ஞாதாவை எதனால் அறியக் கூடும், எதனால் இவ் வெல்லாம் உணரப்படுகின்றனவோ அதனை எதனால் அறியக்கூடும்." (பிரஹதாரண்யகோபநிஷத் 2—4—14.), "விஞ்ஞாநத்தின் விஞ்ஞாதாவை அறிய முடியாது" (பிரஹதாரண்யகோபநிஷத் 3—4—2.) என்பன வாதி சுருதிகளாம். இதற்குப் பொருளிதுவாம் அரே மைத்ரேயி! விஞ்ஞாதாவை—வெளி உட்பதார்தங்கட்கு ஸ்வப்பிரகாச சிதாத்மக ஸ்வ ஸ்ரூபத்தானே விளக்குவதை, எதனால்—காணத்தினால், புருஷன் அறியக்கூடும், காணமான மந முதலியவற்றிற்கு ஞேய விஷயத் தன்மையினால் ஞாதிரு விஷயத் தன்மையின்மையால் என்பது பொருளாம். காணத்திற்கும் ஸ்வயம் ஞாதிருத் தன்மையின்று, பின்னையோ சைதந்ய பலத்தானே எனக் கூறுகின்றது எதனால் என்ப தாதியால். இவ் வெல்லாச் சகத்தும் புத்தியாரூட சைதந்யத்தினால் புருஷன் அறிகின்றான். அதனை எதனாலும் அறிய முடியா தென்பது பொருளாம்.



விஞ்ஞாநத்தின்—புத்தியின், விஞ்ஞாதாவை—போத்தாவை அறிய முடியாது. விஞ்ஞாநத்தினால் விஷயஞ் செய்ய முடியாது என உஷஸ்தனைக் குறித்து யாஞ்ஞவல்கியர் வசநம், பூர்வ வாச்யம் மைத்ரேயியைக் குறித்து அவரது வசநமே யாம் "அக்ர புத்தியினால் அறியப்படுகின்றது" (கடவல்லியுபநிஷத் 3-12.) என்பதாதியோ, இந்தச் சுருதியின் விரோதமின்றிய பொருளுடையன முற் புகன்றதனையே உணர்க. ஆத்மாவிற்கு உபாஸ்யத் தன்மையும் அவ்வாறான விருத்திப் பிரவாக வியாப்யத் தன்மையேயாம். அந்தப் பிரதிபிம்ப சைதந்ய விஷயத் தன்மை அன்று என உணர்க. 32.

ஆத்மாவிற்கு ஞாதிருத் தன்மைச் சித்தி கேவலம் சுருதியினானேயே கூறப்பட்ட தன்று, பின்னையோ சுருதி அநுகூல தர்க்கத்தானும், ஞேயத்திற்குக் கடாதி போன்று அநாத்மத் தன்மையாகலின் ஞாதிருத் தன்மை பொருந்தாமையின் அது சித்திக்கின்றது எனக் கூறுகின்றார்.

कोऽयं देहे देव इतीत्थं सुविचार्य
ज्ञाता श्रोता नंदयिता चैष हि देवः।
इत्यालोच्य ज्ञांश इहास्मीति विदुर्यं
तं संसारध्वांतविनाशं हरिमीडे ॥ ॥३३॥

[பதப் பொருள்] १. देहे—காரிய காரண சங்காதத்தில், २. अयं—இந்த, ३. देवः—தேவன், ४. कः—யாவன், ५. इति—என்று, ६. इत्थं—இவ்வாறு, ७. सु विचार्य—நன்கு விசாரித்து, ८. एष— ९. हि—அபரோக்ஷமாக விளங்கும், १०. देवः—ஸ்வப்பிரகாச சித் தாதுவே, ११. ज्ञाता—அறி

பவன், १२. श्रोता-கேட்பவன், १३. आनंतयिता-ஆநந்திப்பவன், १४. इति-என்று, १५. आलोच्य-அறிந்து, १६. इह-தேஹாதிகளில் १७. ज्ञ- १८. अंशाः--சைதந்ய அம்சமாக, १९. अस्मि-இருக்கின்றேன், २०. इति-என்று, २१. यं-எதனை, २२. विदुः—அறிகின்றனரோ, २३. तं-அந்த, २४.संसार-ध्वांत-विनाशं—சம்சார—இருளினை—நாசம் செய்யும், २५. हरिं-ஹரியினை, २६. ईडे-ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு.

देहे (தேஹே)—காரிய காரண சங்காத மத்தியில், कोऽयं देवः (கோ யம் தேவ:)—இந்தத் தேவன் யாவன், அல்லது எவன் அறிபவன், சரீரமா, இந்திரியங்களா? பிராணனா? அந்தக்கரணமா? என, इत्थं (இத்தம்) இவ்வாறு, सुविचार्य (சுவிசார்ய) நன்கு விசாரித்து, தேஹாதிகளுக்கு வெத்தியத் தன்மையினால் கடாதி போன்று ஞாதிருத் தன்மையின் அபாவத்தினை நிச்சயித்து, एष (ஏஷ) அபரோக்ஷமாக நித்தியம் விளங்கும், देवः (தேவ:) ஸ்வப்பிரகாச சித் தாதுவே, ज्ञाता श्रोतानंतयिता इति आलोच्य (ஞாதா சுரோதாநந்தயிதா இதி ஆலோச்ய) ஆலோசநத்தினா லுணர்ந்து, इह (இஹ) இந்தத் தேஹாதிகளின் மத்தியில், ज्ञानांशः (ஞாநாம்ச:)—சைதந்யாம்சமாக, अस्मीति यं विदुः तं (அஸ்மீதி யம் விது: தம்)—இருக்கின்றேன் என்று எதனை உணர்கின்றனரோ அந்த என்பது பொருளாம்.

"அதிருஷ்டன் திருஷ்டா, அசுருதன் சுரோதா, அமதன் மந்தா, அவிஞ்ஞாதோ விஞ்ஞாதா" (பிரஹதாரண்யகோபநிஷத். 3—7—23.) என்பன வாதி சுருதியால்



ஸ்வயம் தரிசந முதலியவற்றிற்கு அவிஷயத்திற்கே திருஷ்ட்ருத் தன்மை முதலியன உபபாதிக்கப்படுதலின் என்பது தாத்பரியமாம். 33.

"எவ் இவ் ஆகாச ஆநந்தம் இல்லா திருக்கின் எவன் அபாந சேஷ்டை செய்வன் எவன் பிராண வியாபாரம் செய்வன் ஆகாசமே ஆநந்தம் கோடுக்கின்றது." (தைத்திரீயோபநிஷத் 2. பிரஹ்மாநந்த வல்லி 7. அநுவாகம்.) என்பது தைத்திரீயக சுருதியாம். இதன் பொருள் இதுவாம். இது, ஆகாசம்—ஆசமந்தாத் காசதே இதி ஆகாசம் சைதந்யம், அல்லது ஆகாசம் போன்று அசங்கத் தன்மை விபுத் தன்மை முதலிய தர்மங்களோடு சேர்க்கையினால் ஆகாசம் சித் தாது, ஆநந்தம்—சுக நபம் ஆத்மா இல்லா திருக்கின் அப்பொழுது எப் புருஷன் அபாந சேஷ்டை செய்வன் பிராண வியாபாரம் செய்வன். இது உபலக்ஷணமாம். சகல காரிய கரண வியாபாரத்தினை எவன் செய்வன் என்பது பொருளாம். ரதம் முதலிய அசேதநங்களின் பிரவிருத்தி சேதந அதிஷ்டாந நிபந்தநத் தன்மை பார்க்கப்படுதலின். ஜீவநத்திற்கும் ஆநந்த பூர்வகத் தன்மை பார்க்கப்படுதலின், துக்க முண்டாயின் பிராண வியோகம் முதலியன பார்க்கப்படுதலினானே என்பது தாத்பரியமாம். அதனையே கூறுகின்றது எதனால் ஆநந்தம் கொடுக்கின்றது. இதனால் எல்லாச் சநங்களும் பிராண் என்றும் அபாந் என்றும், பிராணிகட்கு ஒரு கால் ஸ்வநபாநந்தத்தின் அபிவியக்தி இல்லா திருக்கின் சஹிக்கக் கருதாமல் கூடாத சம்சார துக்கத்தினை ஜீவநப்பிரார்த்தனை உண்டாகாது. அதன் ஆசையாலனே எல்லாச் சநங்

களும் ஜீவிக்கின்றனர் என்னும் இச் சுருதியினுனும் சேஷ்டை ஜீவந காரணத் தன்மையினல் சித் ருப ஆநந்த ஆத்மா சாதிக்கப்படுகின்றது என்று கூறுகின்றார்.

को ह्येवान्यादात्मनि न स्यादयमेष
ह्येवानंदः प्राणिति चापानिति चेति ।
इत्यास्तित्वं वक्त्युपपत्त्या श्रुतिरेषा
तं संसारध्वांतविनाशं हरिमीडे ॥ ॥३४॥

(பதப் பொருள்.) १. आत्मनि—காரிய காரண சங்காதத்தில், २. अयं—இந்த (சித் ருப ஆத்மாநந்தம்) ஆத்மா, ३. न ४. स्यात्—இல்லா திருக்குமாயின், ५. कः ६. हि ७. एव—எந்தப் புருஷன், ८. अन्यात्—அபாநாதி வியாபாரம் செய்வன், ९. एष १०. हि ११. एव—இந்த, १२. आनंदः—பரமாத்மா, १३. प्राण्—(ஜீவத் தன்மையினை அடைந்து) பிராண வியாபாரம், १४. इति—१५. च—என்றும், १६. अपान्—அபாந வியாபாரம், १७. इति—१८. च—என்றும், १९. इति—என, २०. इति—இக் காரணத்தினுல், २१. अस्तित्वं—இருப்புத் தன்மையினை, २२. उपपत्या—உபபத்தியினுல், २३. एषा—தைத்திரீயக, २४. श्रुतिः—சுருதி, २५. वक्ति—கூறுகின்றது, २६. तं—அந்த, २७. संसार—ध्वांत—विनाशं—சம்சார—இருளினை—நாசம் செய்யும், २८. हरिं—ஹரியினை, २९. ईडे—ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு.



**आत्मनि** (ஆத்மநி)—காரிய காரண சங்காதத்தில், **अयं** (அயம்)—சித் ரூப ஆநந்த ஆத்மா, **नस्यात्** (நஸ்யாத்)—இல்லா திருக்கின், **कोह्येव पुरुषोऽन्यात्** (கோஹ்யேவ புருஷோந்யாத்)—அபாநாதி வியாபாரம் செய்வன். ஜடப் பிரவிருத்தி சேதந பூர்வக மாகலின் ஜீவநம் ஆநந்தத்தினைக் காரணமாக உடைமையின் என்பது பொருளாம். இதனுல், **एषह्येवानंदः** (ஏஷஹ்யேவாநந்த:)—பரமாத்மா ஜீவத் தன்மையினை அடைந்து, **प्राणितिचापानितिचेति** (ப்ராணிதிசாபாநிதிசேதி) பிராண் என்றும் அபாந் என்றும் என, இவ்வாறு காரணத் தன்மையினுல் எதற்கு, **अस्तित्वं उपपत्या एषा** (அஸ்தித்வம் உபபத்யா ஏஷா)—அஸ்தித் தன்மை உபபத்தியினுல் இந்த தைத்திரீயக, **श्रुतिः** (சுருதி:)—சுருதி, **वक्ति** (வக்தி)—கூறுகின்றது அதனை என்பது பொருள். 34.

ஐதரேயக சுருதி பகவதீ "இவ் வெல்லாம் முன் ஆத்மாவாகவே இருந்தன" (1 கண்டம் 1 மந்திரம்) என அத்விதீயப் பிரஹ்மத்தினை ஆரம்பித்து, அதற்கு அத்விதீயத் தன்மைச் சித்தியின் பொருட்டு, "அது பார்த்தது" என்ப தாதியினுல் ஈக்ஷண பூர்வகமாக அதனின்றுமே லோக சிருஷ்டியைக் கூறி, அதன் பின் "அது பார்த்தது" (3) என்ப தாதியினுல் காரிய காரண தேவதைகளின் சிருஷ்டியினைக் கூறி, அதனின்றும் வைராக்கியத்தின் பொருட்டு அத் தேவதைகட்கு பசி தாகாதி உடைய சம்சார ஆர்ணவத்தில் விழுதல் தெரிவித்து, அதன் பின் பசியாதி நிவிர்த்தியின் பொருட்டு, "இவற்றினின்றும் அந்நம் உண்டாயிற்று" (3 கண்டம்) என்ப தாதியால் அந்ந சிருஷ்டியினைக் கூறி, அதன் பின் விசாரித்து அபாநத்திற்கே அவ் வந்நத்தினைக் குறித்

துப் போக்கிருத் தன்மையினை அறிவித்து, சிருஷ்டிக் கப்பட்ட அந்தக் காரிய காரண தேவதைகட்கு ஈசுவரப் பிரவேசம் இன்றி தத் தங் காரியத்தில் சாமர்த்தியம் இன்மையினுல் தலை யோட்டைப் பிளத்தல் வாயிலால் ஈசுவரனுக்கு ஆண்டுப் பிரவேசத்தினைக் கூறி, மீண்டு அதில் பிரவேசித்துத் தாதாத்மியாபிமாநத்தினுல் சம்சாரத்தின்கண் ஜீவ நுபத்தினை அடைந்த பரமேசுவரனுக்கு அநந்த பூர்வ ஜந்மத்தில் செய்த புண்ய புஞ்ஜ பரிபாக வசத்தினுல் விவிதிஷை உண்டாயிருக் குங்கால், "எது வாக்கால் கூறிற்று" (1—3—11) என்ப தாதியால் வாக்காதிகட்கு ஆத்மத் தன்மை நிரா கரண பூர்வகம், பின் "நான் யார்" என ஆத்ம விசா ரத்தினை ஆரம்பித்து, "அதற்கு மூன்று அவஸ்தைகள் மூன்று ஸ்வப்நங்கள்" (1—3—12) என அவஸ்தாத் திரயங்கட்கு மித்தியாத் தன்மையினைப் புகன்று, "அவ் விப் புருஷன்" (1—3—13) என்பவற்றல் வாக்காதி களினின்றும் அவஸ்தாத் திரயங்களினின்றும் வேறு பட்டதாயும் அவற்றிற்குச் சாக்ஷியாயு முள்ள சிந்மாத் திரத்தினைக் கொண்டு, "பிரஹ்மம் அதன் பின் பார்த் தது" (1—3—13) என அந்தச் சீவனுக்கு பிரஹ்மத் தன்மைப் போதநத்தினைக் கூறி, மீண்டும் இப் பொரு ளையே "புருஷனிடத்தில் இது முதற் கற்பம் ஆனது" (2—4—1) என வைராக்கிய உபபாதந பூர்வகம், "இவ் வாத்மா எது என யாம் உபாசிப்போம்" (3—1) என்னும் வாக்கியத்தினுல் மண்டை யோட்டின் வழியா கப் பிரவேசித்த சித் கிரியா சக்தியுடைய ஜீவப் பிராணன் களின் மத்தியில், அவ் வாத்மா எது என நினைத்து,



"எதனுல் பார்க்கப்படுகின்றது" (3—1) என்பதாதியி னுல் சைதந்யத்திற்கே, த்வம் பதார்த்தத் தன்மை நிர்த் தாரணம் செய்து, அதன் பின், "இது பிரஹ்மம்" (3—3) என்பதாதியினுல் சர்வாத்மகமான தத் பதார்த் தப் பிரஹ்மத்தினை உபதேசித்து, "பிரஜ்ஞா பிரதிஷ்டை பிரஜ்ஞாநம் பிரஹ்மம்" (3—3) என அவ் விரண்டிற்கும் ஐக்யத்தினைக் கூறி விஸ்தரிக்கின்றது. இவ்வாறு ஐத ரேய சுருதியால் விசார பூர்வகமாக சங்கிரஹ விஸ் தாரங்களால் பிரதிபாதிக்கப் படும் விஷ்ணுவினை இரண்டு சுலோகங்களால் ஸ்துதிக்கின்றர்.

**प्राणो वाहं वाक् श्रवणादीनि मनो वा**
**बुद्धिर्वाहं व्यस्त उताहोऽपि समस्तः ।**
**इत्यालोच्य ज्ञप्तिरिहास्मीति विदुर्यं**
**तं संसारध्वांतविनाशं हरिमीडे ॥ ॥२५॥**

(பதப் பொருள்) १. अहं—நான், २. प्राणः वा—பிராணனு?, ३, वाक्—வாக்கு, ४. श्रवण आदीनि—காது முதலியன, ५. मनः वा—மநமா?, ६. अहं—நான், ७. बुद्धिः वा—புத்தியா, ८. उत—அல்லது, ९. व्यस्तः—வியஸ்தமா, १०. अहः अपि—அல்லது, ११. समस्तः—சமஸ்தமா, १२. इति—என்று, १३. आलोच्य—ஆலோசித்து, १४. इह—ஈண்டு, १५. ज्ञप्तिः—அறிவாக, १६. अस्मि—இருக்கின்றேன், १७. इति—என்று, १८. यं—எதனை, १९. विदुः—அறிகின்றனரோ, २०. तं—அந்த, २१. संसार-ध्वांत

**-विनाशं**—சம்சார-இருளினை-நாசம் செய்யும், २२. **हरिं**—ஹரியினை, २३. **ईडे**—ஸ்துதிக்கின்றேன், என்றவாறு.

பசி யுடையோன் தாக முடையோன் நான் பேசுகின்றேன் கேட்கின்றேன் நினைக்கின்றேன் நிச்சயிக்கின்றேன் என்னும் அநுபவத்தால் பிராணாதிகள் ஒவ்வொன்றும் நானா? அல்லது, அவ்வெல்லாம் சேர்ந்தா? அல்லது, இவ்வெல்லாவற்றிற்கும் சாக்ஷியா? என ஆலோசித்து பிராணாதிகட்கு வேறாய், அதன் சாக்ஷியான ஞப்தியாகவே இருக்கின்றேன் என எதனை அறிகின்றனர், அதனை என்பது பொருளாம். 35.

அற்றேல் பிராணாதிகளிலும் நான் என ஆத்மத் தன்மை அநுபவிக்கப்படுதலின், சைதந்யத்திற்கு ஆத்மத் தன்மை எங்ஙனம் எனச் சங்கித்துக் கூறுகின்றார்.

**नाहं प्राणो नैव शरीरं न मनोऽहं**
**नाहं बुद्धिर्नाहमहंकारधियौ च ।**
**योऽत्रज्ञांशः सोऽस्म्यहमेवेति विदुर्यं**
**तं संसारध्वांतविनाशं हरिमीडे । ॥३६॥**

(பதப் பொருள்.) १. **अहं**—நான், २. **प्राणः**—பிராணன், ३. **न**—அல்ல, ४. **शरीरं**—சரீரம், ५. **एव** ६. **न**—அன்று, ७ **अहं**—நான், ८. **मनः**—மநம், ९. **न**—அல்ல, १०. **अहं**—நான், ११. **बुद्धिः**—புத்தி, १२. **न**—அல்ல, १३. **अहं**—நான், १४. **अहंकार-धियौ** १५. **च**—



அஹங்கர சித்தமும், १६. **न**—அல்ல, १७. **यः**—எது, १८. **अत्र**—இவ்விடத்தில், १९. **ज्ञ** २०. **अंशः**—சித் தாது, २१. **सः**—அது, २२. **अहं** २३. **एव**—நானாகவே, २४. **अस्मि**—இருக்கிறேன், २५. **इति**—என்று, २६. **यं**—எதனை, २७. **विदुः**—உணர்கின்றனரோ, २८. **तं**—அந்த, २९. **संसार-ध्वांत-विनाशं**—சம்சார-இருளினை-நாசம் செய்யும், ३०. **हरिं**—ஹரியினை, ३१. **ईडे**—ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு

ஈண்டு ஜ்ஞ சப்தத்தினால் சித்தம் கூறப்படுகின்றது. பிராணாதி சித்த பரியந்தம் ஆத்மா அன்று; திரிசிய மாகலின், பௌதிக மாகலின், சாவயவ மாகலின், எனது இது என்னும் புத்தி விஷய மாகலின், சுழுத்தி முதலியவற்றில் ஆத்மா இருக்குங் காலத்திலும் அவைகள் பார்க்கப் படாமையின். கடாதி போன்று உபசய தர்ம முடைமை யானும். பின்னரோ. எது ஈண்டு திரிசியத் தன்மை முதலிய தர்மம் இன்றியதோ, பிராணாதி சகல சாக்ஷியோ, அவைகள் வியபிசார மடையினும் தான் அவ் வியபிசாரி சித் தாது, அது நானாகவே இருக்கிறேன். கூறுகின்றேன் என்ப தாதி பிரதீதியோ, ரக்த ஸ்படிகம் என்பது போன்று பிராந்தியினாலும் பொருந்துகின்றது என்று எதனை அறிகின்றனரோ, அதனை என்பது பொருளாம். 36.

(அ-கை) அவ்வாறே, பகவதீ சாந்தோக்ய சுருதியும் உத்தாலக சுவேத கேது சம்வாத முகத்தினால், "எதனால் கேட்கப்படாதது கேட்டதாகின்றது. அமதம் மத மாகின்றது. அறியப்படாதது அறிந்த தாகின்றது, அந்த உபதேசத்தினைக் கேட்டான்" (6–1–2.) என, ஹே சுவேத கேதுவே!

எதனைச் சாஸ்திரத்தினுல் கேட்டலால் கேட்கப்படாத
தும் கேட்கப்பட்டதாகின்றது. எதனைத் தர்க்கத்தினுல்
மநநஞ் செய்வதால் மநநஞ் செப்யாததும் மநநஞ் செய்த
தாகின்றது. எதனை அறிதலால் அறியப்படாததும்
அறியப்பட்டதாம். அந்த சாஸ்திர ஆசாரியர் வசநத்
தினுல் அறியக் கூடிய வஸ்துவினைக் கேட்டான் ஆசாரிய
ராய உம்மை என பிதா வாக்கியப் பொருளாம். "எதனுல்
கேட்கப்படாததும் கேட்கப்பட்டதாகின்றது" என ஏக
விஞ்ஞாநத்தினுல் சர்வ விஞ்ஞாநத்தினைப் பிரதிஞ்ஞை
செய்து, அதனையே, "பகவந் அவ் உபதேசம் எவ்வாறும்"
(6—1—3.) எனச் சங்கை பூர்வகமாக, "ஹே சௌமிய
எங்ஙனம் ஒரு மட்பிண்டத்தினுல் எல்லாம் மண் மயம் என
அறியப்பட்டதாகின்றதோ, விகார மாய நாமதேயம்
வாக் வியவகாரம், மண் ஒன்றே மெய்ப் பொருளாம்."
(6—1—4:) என்ப தாதியால் திருஷ்டாந்தங்களால் உப
பாதித்து, அதன் பின், தார்ஷ்டாந்திகத்தினை விரித்தற்கு,
"ஹே சௌமிய முன் சத்தாகவே இவ் வெல்லாம் இருந்தன
ஒன்றே அத்விதியம்" (6—2—1) என சஜாதீய விஜாதீய
ஸ்வகத பேத மின்றிய சத் வஸ்துவினை உபக்கிரமித்து,
"அது ஒருவர் கூறுகின்றனர்" என அசத் வாதத்தினை
ஆசங்கித்து, "எங்ஙனம் அசத்தினின்றும் சத் உண்டா
யிற்று" (6—2—2.) என அதனை நிஷேதித்து, சத்ரூபப்
பிரஹ்மத்திற்கு ஜட விஜாதீய பேதாபாவத்தினை உபபாதித்
தற்கு, "அநேக பிரஜைகளாவோ மென அது ஈக்ஷித்தது"
(6—2—3.) என்ப தாதியால், ஆகாசாதி எல்லாவற்றிற்கும்
அதனின்றும் சிருஷ்டியினைக் கூறி, சஜாதீய பேத நிரா
கரணத்தின் பொருட்டு, அதற்கே ஜீவ ரூபமாகப் பிரவே



சமும் கூறி, திரிவித் கரண பூர்வகம் நாம ரூப சிருஷ்டி
யையும் கூறி, அதன் பின், பிரஹ்மத்திற்கு தமது காரிய
ஆகாசாதியினின்றும் பேத வியாவிருத்தியின் பொருட்டு,
"எது அக்நியின் சிவப்பு ரூபம்" (6—3—1.) என்பதாதி
யால் ஆகாசாதி சர்வ ஜகத்திற்கும் மித்தியாத் தன்மை
யினைக் கூறி, அதன் பின், தேஹ வாக் பிராண மநங்கட்கு
அந்நாதி காரியத் தன்மையினுல் அநாத்மத் தன்மை
புகன்று, "இது அணிமா இவ் வெல்லாம் இவ்வாத்மாவின்
பொருட்டே அது சத்யம் அது ஆத்மா தத் த்வ மசி"
(6—8—7.) என்ப தாதியினுல், சுவேத கேதுவை த்வார
மாகக் கொண்டு முமுக்ஷுக்க ளாகிய ஜீவர்களின் ஆத்மத்
தன்மையினுல் சதத்விதீயம், அதிசூக்ஷ்மம், சர்வாத்மகம்
பரமார்த்த சத்யம் பிரஹ்மம், அவ் அவ் ஆசங்கா நிராகரண
பூர்வகம் ஒன்பது முறை மீண்டும் மீண்டும் உபதேசிக்கப்
பட்டிருக்கின்றது. அங்ஙன மன்றே "இறந்தவனுக்கு வாக்கு
மநதில்" (6-—8—6) என்ப தாதியால், சுழுத்தி உத்கிராந்தி
அவஸ்தைகளில், எந்த ரூபத்தினுல் ஜீவன் பொருந்து
கின்றுன், அந்தப் பிரஹ்மம் தத் த்வ மசி என்று பிதாவால்
உபதேசிக்கப்படுங்கால், சுழுத்தியில் சத்தை அடைந்த
பிரஜைகள் அந்தப் பிரஹ்மாத்மத் தன்மையினை ஏன் அறிய
வில்லை என்னும் சுவேத கேதுவின் சங்கையில், "எங்ஙனம்
சௌமிய மது மதுகரன்" (6—9—1.) என்ப தாதியால்,
மதுகரங்களால் மதுத் தன்மையினுல் கவரப்பட்ட நாநா
விருக்ஷ ரச சமுதாயம் போன்று விவேகஞ் செய்வதற்கு
அசக்கியத் தன்மையினுல், சுழுத்தி முதலியவற்றில் பிரஹ்
மம் அடையப்படினும் அறியப்படவில்லை என நிரசனஞ்
செய்து அந்தத் தத்வத்தினையே உபதேசித்து, அற்றேல்

சுழுத்தி முதலியவற்றில் கரணம் இன்மையின் அறியப்பட வில்லை. எழுந்தவர்கள் பிரஹ்மத்தினின்றும் நாங்கள் எழுந்தோம் என ஏன் அறிய வில்லை என்னும் ஆசங்கையில், "சௌமிய இந்த நதிகள்" (6—10—1.) என்ப தாதியால் எங்ஙனம் மேகங்களினல் சமுத்திரத்தினின்றும் இழுத்து விடப்பட்ட நதிகளினது, ரச அந்யத் தன்மையினல் சமுத்திரத்தினின்றும் வந்ததனை அறிய முடிய வில்லையோ, இவ்வாறே பிரஹ்மத்தினின்றும் எழுந்த சம்சாரிகட்கு அதன் விலக்ஷணத் தன்மையினல் அந்த ரூபமாக இருந்து நாம் எழுந்தோம் என அறிய வில்லை என்னும் பரிஹாரத்தினல் மீண்டும் அதனையே உபதேசித்து, அங்ஙனமே சுழுத்தியில் ஜீவனுக்குக் காரணத் தன்மை அடைவில், சமுத்திர அலை முதலியன போன்று நாச சங்கையில், "சௌம்ய இப் பெரிய விருக்ஷத்திற்கு" (6—11—1.) என்ப தாதியால், எங்ஙனம் விருக்ஷத்திற்கு பரசு முதலியவற்றால் வெட்டில் ரசம் ஒழுகுவதால் ஜீவனேடு கூடிய தன்மையோ, அங்ஙனமே தூங்குகிற சரீரத்திலும் ரக்தம் பார்க்கப்படுதலின், ஜீவ நாசம் இல்லை என்னும் பரிஹாரத்தினல் முற்புகன்ற பொருளினையே ஸ்தாபிக்குங்கால், மீண்டும், சூக்ஷ்மமான பிரஹ்மத்தினின்றும் ஸ்தூலமான ஜகத் உத்பத்தி எங்ஙனமாம் என்னும் சங்கையை, "பின் ஆலம் பழம் கொண்டு வந்தார்" (6—12—1) என்பதாதியால், வட விரையினுள் வந்த சூக்ஷ்ம ரூபத்தினல் ஆல விருக்ஷம் உத்பத்தியாதல் போன்று, ஜகத் உத்பத்தி பொருந்துதலின் (என) நிராகரணம் செய்து, மீண்டும், அந்தப் பொருளே ஸ்தாபிக்கப்படுமிடத்தில், மீண்டும், ஜகத் மூல காரணம் பிரஹ்மம் யாது? தோற்ற வில்லை எனச் சங்கை



உண்டாமிடத்தில், "இந்த ஜலத்தில் லவணத்தினைப் போட்டு" (6—13—1) என்பதாதியால், ஜலத்தில் போட்ட உப்புக் கட்டிக்கு, பார்த்தலாலும் தொடலாலும் தோற்றம் இல்லாமல் இருப்பினும், நாக்கினல் உப்பு இருத்தல் நிச்சயம் போன்று, சக்ஷு முதலியவற்றிற்கு அதிரிசிய பிரஹ்மமும் காரிய லிங்கத்தால் இருக்கின்றது எனக் கூறி அதுவே உபதேசிக்கப்பட்டது. அதன் பின், பிரஹ்ம சாக்ஷாத்காரத்தில் உபாயம் எது எனச் சங்கை உண்டாங்கால், "எங்ஙனம் சௌம்ய புருஷனைக் கந்தார தேசத்தினின்றும்", (6—14—1) என்பதாதியால், கந்தார தேசத்தினின்றும் காட்டில் திருடர்களால் கண் கட்டி வைக்கப்பட்ட புருஷனுக்கு, நேத்திரக் கட்டினை அவிழ்ப்பவனது கந்தார தேச உபதேசம் போன்று, ஆசாரியர் செய்த உபதேசத்தால் பிரஹ்ம சாக்ஷாத்காரமும், அவித்யா நிவிர்த்தியும் எனக் கூறி, அதுவே உபதேசிக்கப்பட்டது. அதன் பின், அந்த வித்துவான் எந்தப் பிரகாரத்தினல் பிரஹ்மத்தினை அடைவான் என்னும் அபேக்ஷையால், "சௌம்ய ஜ்வராதி உபதாபத்தோடு கூடிய புருஷனை", (6—15—1) என்பதாதியால், மநம் முதலியன லயமாங்கால் ஞாந தீபப் பிரகாசம் பிரஹ்மமே விளங்குகிறது நக்ஷத்திராதி பிரகாசங்களை அபேக்ஷிக்க வில்லை. அவித்துவானே வேறு தேஹத்தைக் கிரஹிக்கின்றான் எனக் கூறி, அதுவே உபதேசிக்கப்படுகின்றது. அதன் பின், மரணம் அடைந்தவன் மோக்ஷம் அடைந்தவனே ஆயின், அப்பொழுது பிரஹ்மத்தை அடைகின்றான், ஆயின், வித்வான் போன்று அவித்வானும் திரும்புகின்ற தில்லையா என்னும் சங்கையில், "ஏ சௌம்ய! புருஷனை கட்டிக்கொண்டு வருகின்றனர்"

(6—16—1) என்பதாதியால், தப்த பரசு கிரகிக்கும். திருடன், திருடன் அல்லாதவனுக்கு, தப்த பரசு கரதலத்தில் சையோகம் சமமாயினும் உண்மையாய் மறைப்பின்றியுகையாயிருத்தலின் திரு—ன் அல்லாதவனைத் தகிக்க வில்லை, திருடனையோ தகிக்கும். இவ்வாறு அந்தக் காலத்தில் வித்வான் அவித்வான் இருவரும் சத் சம்பத்தியில் சமானமாயினும், சத்ய பிரஹ்மத்தினை அடைந்தவன் மீண்டும் தேஹத்தினைக் கிரகிப்ப தில்லை. பொய்யான தேஹாதிகளில் ஆத்ம புத்தியுடையவன் மீண்டும் சரீரத்தினைக் கிரகிக்கின்றான் என்னும் பரிஹார பூர்வகம் அதுவே நீ, அது நீயா யிருக்கிறாய் என உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. ஸ்வகத பேதமோ, நிரவயவ நிர்த்தர்மகப் பிரஹ்மத்தில் சம்பவிப்ப தில்லை என சுருதியால் உபேக்ஷிக்கப்பட்டிருக்கின்றது. இவ்வாறு, சாந்தோக்ய சுருதியாகிய பகவதியால் அநுக்ரோசத்தோடுகூட கிரமமாக ஒரு அத்விதீயமே ஒன்பது பரியாயங்களால் சந்மாத்ர பிரத்யக் அபிந்ந விஷ்ணு பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. அதனை இப்பொழுது ஸ்துதிக்கின்றார்.

सत्तामात्रं केवलविज्ञानमजं सत्

सूक्ष्मं नित्यं तत्त्वमसीत्यात्मसुताय ।

साम्नामंते प्राह पिता यं विभुमाद्यं

तं संसारध्वांतविनाशं हरिमीडे । ॥३७॥



(பதப் பொருள்.) ௧. **सत्ता—मात्रं**—சத்தா—மாத்திரமாய், ௨. **केवल-विज्ञानं**—கேவல-விஞ்ஞானமாய், ௩. **अजं**—அஜமாய், ௪. **सत्**—சத்தையாய், ௫ **सूक्ष्मं**—சூக்ஷ்மமாய், ௬. **नित्यं**—நித்தியமாய், ௭. **विभुं**—விபுவாய், ௮. **आद्यं**—காரணமாய் (உள்ள), ௯. **यं**—எதனை, ௧௦. **साम्नां**—சாம உபநிஷத்தின், ௧௧. **अंते**—ஈற்றில், ௧௨. **पिता**—உத்தாலக ரிஷி, ௧௩. **आत्म**—தனது, ௧௪. **सुताय**—புத்திரன் பொருட்டு, ௧௫. **तत्—त्वं—असि**—அது—நீ—ஆகின்றாய், ௧௬. **इति**—என்று, ௧௭. **प्राह**—நன்கு உபதேசித்தனரோ, ௧௮.—**तं** அந்த, ௧௯. **संसार-ध्वांत-विनाशं**—சம்சார-இருளினை-நாசம் செய்யும், ௨௦. **हरिं**—ஹரியினை, ௨௧. **ईडे** ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு.

**सत्ता-मात्रं** (சத்தா-மாத்ரம்)=இருக்கின்றது என்னும் ஞாநத்தினால் அறியப்படுவதை; "சத்தே" என்னும் சுருதியினால். **केवल-विज्ञानं** (கேவல-விஞ்ஞானம்)=விஷய மின்றிய சித் ரூபத்தினை, "வாசாரம்பணம்" என்பன வாதி சுருதியினால் விஷயத்திற்கு மித்தியாத் தன்மை உளவாகலின். "அது ஈக்ஷித்தது" என்னும் சுருதியினாலும். அசித் ரூபத்திற்கு ஈக்ஷணம் பொருந்துவ தில்லை. **अजं** (அஜம்)=ஜந்மம் இன்றியதை, "முதலில் இருந்தது" என்னும் சுருதியினால். **सत्** (ஸத்)=சத்யத்தை, "அது சத்யம்" என்னும் சுருதியினால். **सूक्ष्मं** (சூக்ஷ்மம்)=இந்திரியம் முதலியவற்றிற்கு அவிஷயத்தை, "அது இது அணிமா" என்னும் சுருதியினால். **नित्यं** (நித்யம்)=நாசம் இன்றியதை, "ஜீவந் மரிப்ப தில்லை" என்னும் சுருதியினால். **विभुं** (விபும்)=வியாப

கத்தை, "அது ஆத்மா" என்னும் சுருதியினுல். **आद्य** (ஆத்யம்)=ஜகத்தின் நிமித்த உபாதாந காரணத்தை, "அது பார்த்தது பிரஜையின் பொருட்டு" என்னும் சுருதியினுல். இவ்வாருய எந்த விஷ்ணுவை, **साम्नाम् अंते** (சாம்நாம் அந்தே)=சாம உபநிஷத்தில். **पिता** (பிதா)=உத்தாலக ரிஷி. **आत्म-सुताय** (ஆத்ம-சுதாய)=சுவேதகேது என்னும் பெயரிஜையுடைய தன் புத்திரன் பொருட்டு, ஹே சுவேதகேதுவே, **तत्वमसि इति** (தத் த்வம் அசி இதி)=கூறிய ரூபமான பிரஹ்ம மாவாய் என இவ்வாறு. **प्राह** (ப்ராஹ)=நன்ருக மீண்டும் உபதேசித்தனர். அதனை ஸ்துதிக்கின்றேன் என்பது பொருள். 37.

பிரஹதாரண்யகத்தின் மூர்த்தாமூர்த்தப் பிராஹ்மணத்தில், "இரண்டே பிரஹ்மத்தின் நுபம் மூர்த்தமும் அமூர்த்தமும்" (2—3—1) என ஆரம்பித்து, பின்னரும் "அவ் இவ் மூர்த்தம் யாது, வேறு வாயுவினின்றும் அந்தரிக்ஷத்தினின்றும்" (2—3—2) என மூர்த்த பதத்தினை வியாக்யாநம் செய்து, அதன் பின், "அமூர்த்தம் வாயுவும் அந்தரிக்ஷமும்" (2—3—3) என அமூர்த்த பதத்தினை வியாக்யாநம் செய்து, அதன் பின் கிரமமாக அநித்ய நித்ய, பரிச்சிந்ந வியாபக, பிரத்தியக்ஷ பரோக்ஷ நுபத்தால் அந்த நுபம் இரண்டினை அறிவித்து, அதன் பின், சமஷ்டி வியஷ்டி நுப ஸ்தூல சூக்ஷ்ம சரீரம் இரண்டினையும், மூர்த்தாமூர்த்த நுப பஞ்ச பூத காரியத் தன்மையினுல் காண்பித்து ஆரோபத்தினை அறிவித்து, முடிவில் அந்த நுபம் இரண்டினையும் தள்ளப்பட்டிருக்கின்றது. "அத ஆதேசம் ஈதன்று ஈதன்று என இதனின்றும்



இல்லை" (2-3-6), என. ஈதன்று என்னும் அபவாத வாக்கியத்திற்கு இது பொருளாம். அத-பிரஹ்மத்திற்கு இரு நுபம் நிருபித்த பின்னர். அத:—யதனுல் நுபம் அற்ற பிரஹ்மம் நிருபிக்கத்தக்கது, அதன் பொருட்டே இரு நுபம் நிருபிக்கப்படுதலின்; இக் காரணத்தினுல். ஆதேசம் —உபதேசம் பிரஹ்மத்திற்குச் செய்யப்படுகின்றது என்பது எஞ்சி யுள்ளது. எங்ஙனம்? நேதி நேதி என்னும் சப்தங்கள் பிரத்தியக்ஷாதி சந்நிதிகளாயினும் மூர்த்த அமூர்த்த அதனின்றும் உண்டான லிங்க புருஷ பரங்களாகக் கிரமமாக உணர்க. நஞ் பத மிரண்டினுலும் நிஷேதிக்கப்படும் பொருளைச் சமர்ப்பணம் செய்பவை, அவைகளே பிரகிருத மாகலின் விசேஷியத் தன்மையான். பிரஹ்மமோ விசேஷணத் தன்மையினுல் பிரகிருதத் தன்மை யிருப்பினும் நிஷேத்யத் தன்மையோடு சம்பந்தம் இல்லை. ஆகவே, நஞ் இரண்டால் கூறிய நுபம் இரண்டின் நிஷேதத்தால் பிரஹ்மம் உபதேசிக்கப்படுகின்றது. ஆற்றேல், எங்ஙனம் இதனுல் பிரஹ்மம் உபதேசிக்கப்படுகின்றது, நுபம் இரண்டின் நிஷேதம் மாத்திரம் பிரதீதியாகலின். ஆண்டு கூறப்படுகின்றது 'இல்லை' என. இந்த நிஷேத நுப உபதேசத்தினின்றும் அந்ய உபதேசம் இல்லை. பிரஹ்மம் நிர்விசேஷ மாகலின். விதி சப்த அகோசர மாகலின் என்பது பொருளாம். விதி, சுரோதவ்யாதியாம். அற்றேல், ஆயின் பிரஹ்மம் இல்லை என்பது பிராப்தம், ஆண்டுக் கூறப்படுகின்றது அந்யத் பரம் இருக்கின்றது என. அவதி யின்றிய நிஷேதம் பொருந்தாமையின் மூர்த்தம் அமூர்த்தம் இரண்டின் நிஷேத அவதிநுபம், அந்யத்—

நபம் இரண்டின் வியதிரிக்தம் பிரஹ்மம் இருக்கின்றது என அறியப்படுகின்றது என்பது பொருளாம். அல்லது, 'ஈதன்று ஈதன்று' என்பது வீப்சையாம் அதனுலும் எது எது விஷயத் தன்மையினுல் பிராப்தமோ அது அது எல்லாம் ஈதன்று ஈதன்று என நிஷேதிக்கப்படுகின்றது. பாக்கி முன் போன்றே. இவ்வாறு விஷயத் தன்மையினுல் பிராப்தமான எல்லாம் நிஷேதிக்கப்பட்டு நிர்விசேஷ அவிஷய பிரத்யக் கபிந்நமான எவ் விஷ்ணு மூர்த்த அமூர்த்த பிராஹ்மணத்தில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றதோ அதனை இப்பொழுது ஸ்துதிக்கின்றுர்.

**मूर्त्तामूर्त्ते पूर्वमपोह्याथ समाधौ**
**दृश्यं सर्वं नेति च नेतीति विहाय ।**
**चैतन्यांशे स्वात्मनि संतं च विदुर्यं**
**तं संसारध्वांतविनाशं हरिमीडे ॥ ॥३८॥**

(பதப் பொருள்.) १. **समाधौ**—சமாதியில், २. **चैतन्य-अंशे**—சைதந்ய-அம்சத்தில், ३. **स्व-आत्मनि**—தமதாத்மாவில், ४. **पूर्वं**—முதலில், ५. **मूर्त्त-अमूर्त्ते**—(அரோபிக்கப்பட்ட) மூர்த்த அமூர்த்தங்களை, ६. **न**—७. **इति**—८. **च**—ஈதன்று, ९. **न**—१०. **इति**—ஈதன்று, ११. **अपोह्य**—என நிஷேதித்து, १२. **अथ**—१३. **दृश्यं**—திருசியமான, १४. **सर्वं**—எல்லாம், १५. **विहाय**—விட்டு, १६. **संतं**—(நிஷேத அவதி நபமாக) இருக்கும், १७. **यं**—எதனை, १८. **विदुः**—அறிகின்றனரோ, १९. **तं**—அந்த, २०. **संसार—ध्वांत**



—**विनाशं**—சம்சார-இருளினை-நாசம் செய்யும், २१. **हरिं**—ஹரியினை. २२. **ईडे**—ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு.

**समाधौ** (சமாதௌ)=சமாதாநம் அடைகின்றது சித்தம் இதில். சமாதி விஷ்ணுவாம். **चैतन्यांशे** (சைதந்யாம்சே)=சைதந்யமே அம்சம் போன்று அம்சம். ஜட அம்ச பரித்தியாகத்தில் எஞ்சியுள்ள சின்மாத்திரம் என்பது பொருள். அதில், **स्वात्मनि** (ஸ்வாத்மநி)=பிரத்தியக் கபிந்ந விஷ்ணுவில், ஆரோபிக்கப்பட்ட எந்த, **मूर्त्तामूर्त्ते** (மூர்த்தாமூர்த்தே)=பஞ்ச பூத ரூபமான அவைகளை, **नेति नेति इति** (நேதி நேதி இதி)=ஈதன்று ஈதன்று என. **अपोह्य** (அபோஹ்ய)=நிஷேதித்து. ஈதன்று ஈதன்று என்னும் வாக்கியத்திற்கு வேறு பொருள் கூறுகின்றுர், அத என்பதாதியினுல். **अथ** (அத)=சப்தம் பக்ஷாந்தரத்தில் அல்லது என்பது பொருள். ஈதன்று ஈதன்று என்னும் வீப்சையால், **दृश्यं सर्वं विहाय** (திர்சியம் சர்வம் விஹாய)=திருசியத் தன்மையினுல் பிராப்தமான யாவும் நிஷேதித்து என்பது பொருள். இவ்வாறு முடிவில் நிஷேத அவதி ரூபமாக, **संतं** (சந்தம்)=இருக்கும், **यं** (யம்)=எதனை, **विदुः** (விது:)=அறிகின்றனரோ, **च** (ச) காரத்தால் முற் புகன்ற சத்யம் என்பதாதி வாக்கியத்தினுலும் விதி முகத்தினுலும் எதனை அறிகின்றனர் என்பது பொருள். அது சூத்திரக்காரரால், "பிரகிருதமாய இதுவே நிஷேதிக்கப்படுகின்றது. அதனுல் அநேகமாகச் சொல்லப்படுகின்றது" (பிரஹ்ம சூத்திரம் 3-2-22) எனக் கூறப்பட்டிருக்கின்றது. பிரகிருதம்—எது—ஏதாவத்வம், ரூபத்தில் எந்த இவ்வளவு இருக்கின்றது ரூபத்வயம் என்பது பொருளாம். அதுவே "ஈதன் றீதன் றென்னும் வாக்

கியம் பிரதிஷேதம் செய்கின்றது. பிரஹ்மம் அன்று என்பது பொருளாம். ஹி—எதனால், அதனால் பரம் ச, பூய:—மீண்டும், வேறு பரமாக இருப்பது என்று சொல்லுகின்றது. அதனால் ரூபத்வயத்திற்கே நிஷேதம் பிரஹ்மத்திற் கன்று என்பது சூத்திரப் பொருளாம். 38.

பிரஹதாரணியகத்தில் கேட்கப்படுகின்றது:—யாஞ்ஞவல்கியரால் உஷஸ்த கஹோலர் முதலியவர்கள் ஜயிக்கப்படுங்கால் கார்க்கீ எனப் பெயர் பூண்ட பிரஹ்மஞானியாகிய ஒரு பிராஹ்மணீ வந்து, பிராஹ்மணர்களினின்றும் அநுஞ்ஞையினை அடைந்து, யாஞ்ஞவல்கியரை வினவினள். உத்தரங் கொடுக்கில் அவாச்சிய வசநம் என்னும் நிக்கிரக ஸ்தாநம். உத்தரங் கொடுக்காவிடில் அப்பிரதிபை என்னும் நிக்கிரக ஸ்தாநம் என உபயதா (இரு வகையாக) யாஞ்ஞவல்கியருடைய பராஜயத்தினை அங்கீகரிப்பவளாய், "ஹே யாஞ்ஞவல்கிய! இவ் வெல்லாச் சகத்தும் பூதமும் பவமும் பவிஷ்யத்தும் யாண்டு அவ்யாகிருத ஆகாசத்தில் இருக்கின்றது அந்த அவ்யாகிருத ஆகாசம் யாண்டு அத்யஸ்தமா யிருக்கின்றது" எனக் (கேட்டாள்.) யாஞ்ஞவல்கியரும் அவள தபிப்பிராயத்தினை உணர்ந்தவராய் ஒரே காலத்திலேயே இரண்டு தோஷத்தினையும் பரிகாரம் செய்து கூறுகின்றார். "எந்த அல்லது இந்த அக்ஷரத்தினை கார்க்கீ! பிராஹ்மணர்கள் கூறுகின்றனர். அஸ்தூலம் அநணு அஹ்ரஸ்வம் அதீர்க்கம் அலோஹிதம் அஸ்நேகம்" (பிரஹதாரண்யகோபநிஷத் **3—8—8**) என. பிராஹ்மணர்கள் கூறுகின்றனர் என்பதால் தனக்கு அவாச்ய வசநம்தோஷம்



பரிகாரம் செய்யப்பட்டது. ஸ்தௌல்யாதி சகல தர்மரகித அக்ஷரத்தினைக் கூறுதலினால் அப்பிரதிபையும் பரிஹாரம் செய்யப்பட்டது. அதனால் எவ்வளவு இதர சகல நிஷேத மாத்திரத்தினால் அக்ஷர சித்தி என. அதற்கு அசத்துத் தன்மைச் சங்கையில் சகல நிஷேத அவதித் தன்மையினால் அதன் சத்துத் தன்மையினை அபிப்பிராயம் செய்து, "இந்த அல்லது அக்ஷரத்தினது ஆஞ்ஞையில் கார்க்கீ! சூரிய சந்திரர்கள் தாங்கிக்கொண்டிருக்கின்றனர்" (பிரஹதாரண்யகோபநிஷத் **3—8—9**) என்பதாதியால். திவி பிருதிவிகள், நிமேஷாதி காலம் நதி சமுத்திரங்கள், தேவர்கள் பிதிர்க்கள் அக்ஷரத்தினுடைய ஆஞ்ஞையில் இருக்கின்றனர். சகல மரியாதையைத் தரிக்குந் தன்மையினால் அக்ஷரத்தின் இருப்பினைக் கூறி, "எந்த அல்லது இந்த அக்ஷரத்தினை கார்க்கீ! அறியாது" என்பதாதியினாலும் எதனை அறியாமையினால் சம்சார கார்பண்யம், எதனை அறிதலால் அதன் நிவிர்த்தி இருக்கின்றது அது அக்ஷரம் எனக் கூறி, ஆயின் ஏன் அது அநுபவிக்கப்பட வில்லை என்னும் ஆசங்கையில், திருஷ்டி முதலியவற்றிற்கு அவிஷயத் தன்மையிலும் சர்வ சாதகத் தன்மையினால் ஸ்வயம் விளக்கமாக அது இருக்கின்றது என வேறு திருஷ்டாவை நிஷேதித்து, "அதிருஷ்டம் திருஷ்டா வேறு இல்லை அதனால்" திருஷ்டா என்பதாதியினால் அக்ஷர சத் பாவத்தினைக் கார்க்கீயைக் குறித்து சாதித்திருக்கின்றதுஎன. அந்த அக்ஷரப் பிராஹ்மண சித்தமான தத்துவத்தினை ஸ்துதிக்கின்றார்.

ओतं प्रोतं यत्र च सर्वं गगनांतं यो

स्थूलानण्वादिषु सिद्धोऽक्षरसंज्ञः ।

ज्ञाताऽतोऽन्यो नेत्युपलभ्यो न च वेद्य-

स्तं संसारध्वांतविनाशं हरिमीडे ॥ ॥३९॥

(பதப் பொருள்.) १. गगन—अंतं—ஆகாச பரியந்த மான, २. सर्वं—எல்லா(ச் சகத்து)ம், ३. यत्र—எந்த விஷ்ணுவினிடத்தில், ४. ओतं-५. च—ஓதமும், ६. प्रोतं—புரோதமுமோ, ७. यः—எது, ८. अस्थूल-अनणु-आदिषु—அஸ்தூலம் அநணு முதலிய வாக்கியங்களில், ९. अक्षर-संज्ञः—நாச ரகிதம் என்னும் பெயருடையதாய், १०. सिद्धः—எல்லாவிடத்தும் பிரசித்தமோ, ११. अतः—இதனுல், १२. अन्यः—வேறு, १३. ज्ञाता—ஞாநதா, १४. न—இல்லை, १५. इति—என்று, १६. उपलभ्यः—அறியத்தக்கது, १७. वेद्यः (விஷயத் தன்மையினுல்) அறியத்தக்கது, १८. न-१९. च—இல்லையோ, २०. तं—அந்த, २१. संसार-ध्वांत-विनाशं—சம்சார-இருளினை-நாசம் செய்யும், २२. हरिं—ஹரியினை, २३. ईडे—ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு.

गगनांतं (ககநாந்தம்) அவ்யாகிருத ஆகாச பரியந்தம், सर्वं (சர்வம்) இந்த செகத்து, यत्र (யத்ர) விஷ்ணுவில் ओतं च प्रोतं च (ஓதம் ச புரோதம் ச) நூற்களில் வஸ்திரம் போன்று கற்பிதம் என்பது பொருளாம். यः अस्थूलानण्वादिषु (ய: அஸ்தூலாநண்வாதிஷு) அஸ்தூலம் அநணு



அஹ்ரஸ்வம் அதீர்க்கம் என்பதாதி வாக்கியங்களில், अक्षर संज्ञः (அக்ஷர சஞ்ஞ:)=நாச ரகிதத் தன்மையினுலாவது சர்வ வியாபகத் தன்மையினுலாவது அக்ஷரம் என்னும் பெயர் எதற்கோ அது, सिद्धः (சித்த:)=எல்லாச் க்ஷேத்திரங்களிலும் பிரசித்தம். अतः (அத:)=இதனுல், அக்ஷரத்தினின்றும், अन्यः ज्ञाता (அந்ய: ஞாதா)=வேறு ஞாதா, न (ந)=இல்லை. எல்லாம் அதன் திருசியமாகலின், इति (இதி)=என நிஷேதஞ் செய்யப்படுதலின், उपलभ्यः (உபலப்ய:)=அறியத்தக்கதே, न च वेद्यः (ந ச வேத்ய:)= விஷயத் தன்மையினுல் அறியத் தக்க தன்று. "அவிஞ்ஞாதம் விஞ்ஞாதிரு அந்யத் விஞ்ஞாதா இல்லை" என்னும் சுருதியினுல். அதனை ஸ்துதிக்கின்றேன் என்பது பொருளாம். 39.

அற்றேல் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் சித்தித்த த்வைதம் உபலப்யம் ஆகும்போது, அந்யவற்றின் நிஷேதத்தினுல் உபலப்யம் பிரஹ்மம் எங்ஙனமாம் என ஆசங்கித்துக் கூறுகின்றுர்.

तावत्सर्वं सत्यमिवाभाति यदेत-

द्यावत्सोऽस्मीत्यात्मनि यो ज्ञो न हि दृष्टः ।

दृष्टे तस्मिन्सर्वमसत्यं भवतीदं

तं संसारध्वांतविनाशं हरिमीडे ॥ ॥४०॥

(பதப் பொருள்.) १. यावत्—எதுவரை, २. आत्मनि—கார்ய காரண சங்காதத்தில், ३. यः—எந்த, ४. ज्ञः—சித் தாது, ५. सः—அது, ६. अस्मि—(பிரஹ்மமாய்) இருக்

கிறேன், ௭. इति—என்று, ௮. न ௯. हि ௧௦. दृष्टः—அறியப்பட வில்லையோ, ௧௧. तावत्—அதுவரை, ௧௨. यत् ௧௩. एतत्—ஜகத், ௧௪. इदं—இந்த, ௧௫. सर्वं—எல்லாம், ௧௬. सत्यं—சத்யம், ௧௭. इव—போன்று, ௧௮. आभाति—விளங்குகின்றது, ௧௯. तस्मिन्—அந்த பிரத்யக் கபிந்ந பிரஹ்மம், ௨௦. दृष्टे—அறியப்படில், ௨௧. सर्वं—எல்லாம், ௨௨. असत्यं—அசத்யமாக, ௨௩. भवति—ஆகின்றது, ௨௪. तं—அந்த, ௨௫. संसार-ध्वांत-विनाशं—சம்சார-இருளினை-நாசம் செய்யும், ௨௬. हरिं—ஹரியினை, ௨௭. ईडे—ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு.

यावत् (யாவத்)=எப்பொழுது, आत्मनि (ஆத்மநி)=காரிய காரண சங்காதத்தில், यः (ய:) ज्ञः (ஜ்ஞ:)=சித் தாது சாக்ஷித் தன்மையினுல் இருக்கின்றது. सः (ஸ:)=எதுவரை, பிரஹ்ம, अस्मि (அஸ்மி) इति (இதி)=பிரஹ்ம ரூபமாக, न दृष्टः (ந த்ருஷ்ட:)=பார்க்கப்பட வில்லையோ, அதுவரை, यत् एतत् (யத் ஏதத்)=எவ் இவ், பார்க்கப்படுகிற செகத், इदं (இதம்)=இவ், सर्वं (ஸர்வம்)=எல்லாம், सत्यं इव आभाति (சத்யம் இவ ஆபாதி)=பிராந்தியினுல் சத்யம் போன்று விளங்குகின்றது. விழிப்பிற்கு முன் ஸ்வப்நம் போன்று. तस्मिन् (தஸ்மிந்)=பிரத்யக் அபிந்ந பிரஹ்மம், दृष्टे (த்ருஷ்டே)=பார்க்கப்படில், सर्वं (சர்வம்)=எல்லாப் பாஹ்ய ஆகாசாதியும், ஆந்தர கர்த்ருத்வாதியும், असत्यं भवति (அசத்யம் பவதி)=அசத்யம் ஆகின்றது. முன்னும் அசத்தியமே அப்பொழுது விழிப்பின் பின் ஸ்வப்நம் போன்று அசத்யம் என அறியப்பட்டதாகின்றது என்பது பொருளாம். "யாண்டு இவனுக்கு எல்லாம் ஆத்மாவாகவே ஆகின்ற



னவோ, அப்பொழுது எதனுல் எதனைப் பார்ப்பன்." (பிரஹதாரண்யகோபநிஷத் (2-4-14) (4-5-15) என்பதாதி சுருதியால். வித்யா அவஸ்தையில் அதிகாரிக்குச் சர்வ ஜகத்தும் வித்தையினுல் ஆத்மா மாத்ரமாக அறியப்பட்டதாகின்றதோ, அப்பொழுது எந்தக் கரணத்தினுல் எந்த விஷயத்தினைப் பார்ப்பன். கொஞ்சமும் பார்ப்பதில்லை. எல்லாம் ஆத்மா மாத்ரமாக ஞாதிரு ஞாந ஞேயங்கள் இன்மையில் என்பது பொருள். பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்கட்கு வியாவகாரிக விஷயத் தன்மையினுல் அதனை விஷயமாகக் கொண்ட பிரபஞ்சத்திற்கு நிஷேதமுகத்தினுல் தாத்விகப் பிரமாண ரூபமான சுருதியால் பிரஹ்மம் உபலப்த மாவதற்குச் சக்கியம் என.

அற்றேல், "சத்ய காம: சத்ய சங்கல்ப: சத்ய கந்த: சர்வ ரச:" என்பதாதியில் பிரஹ்மத்திற்குச் சப்பிரபஞ்சத் தன்மைக்கும் சுருதி சித்தமாகலின் நிஷ்பிரபஞ்ச வாக்கியத்தால் அதன் நிஷேதம் எங்ஙனமாம்? பரமார்த்தமாகப் பிரஹ்மத்திற்குச் சப்பிரபஞ்ச நிஷ்ப்பிரபஞ்ச உபய ரூபத் தன்மை பரஸ்பரம் விரோதமாகலின் கூறுதற்கு அசக்கியம் எனக் கூறற்க, ஸ்வயம் நிஷ்ப்பிரபஞ்ச பிரஹ்மத்திற்கு பிருதிவி முதலிய உபாதியினுனே சப்பிரபஞ்சத் தன்மை பொருந்துதலின் எனின், அற்றன்று, ஸ்வயம் விருத்தமான இரண்டிற்கு உபாதியினுனும் பரமார்த்தமாக ஒரு இடத்தில் சம்பந்தம் பொருந்தாமையின். ஸ்வயம் வெண்மையான ஸ்படிகத்தில் ஜபாகும உபாதி வசத்தால் விளங்கும் சிவப்புப் பரமார்த்தமாகப் பார்க்கப்படுவ தில்லை. அல்லது, சூரியனுக்கும், இருட்டிற்கும் பரமார்த்த சம்பந்தத்தினைச் சேர்க்கும் உபாதி ஏதாவது இருப்ப தில்லை.

அது சூத்ரக்காரரால், "அன்று ஸ்தாநத்தானும் பரனுக்கு உபயலிங்கம் யாண்டும்" (பிரஹ்ம சூத்ரம் 3-2-11) எனக் கூறப்பட்டிருக்கின்றது. ஸ்தாநத்தானும்—உபாதி வாயிலாக வும், பரனுக்கு—பிரஹ்மத்திற்கு, உபட லிங்கப்—நிஷ்ப்பிரபஞ்ச சப்பிரபஞ்ச உபய ரூபத் தன்மை பொருந்துவ தில்லை. கூறிய யுக்தியே யாண்டும் வேதாந்தங்களில். "அசப்தம் அஸ்பரி சம்", "அஸ்தூலம் அநணு", "எது அது அத்ரேசியம் அக் கிராஹ்யம்", "அத்ருசியத்தில் அநாத்மியத்தில் அநிருக்த்தத் தில்", "அத்ருசியம் அவ்யவஹார்யம்", "அது அல்லது இது மஹான் அஜ ஆத்மா அஜரம் அமரம்", "யதனினின்றும் வாக் நிவிர்த்தி யடைகின்றது", "அது இது ஈதன்று ஈதன்று ஆத்மா", "அத அத: ஆதேசம் ஈதன்று ஈதன்று என", "யாண்டு வேறு பார்ப்ப தில்லை", "யாண்டு எல்லாம் இதன் ஆத்மாவாகின்றது" என்பவற்றில் நிஷ்ப்பிரபஞ்சப் பிரஹ் மமே கேட்கப்படுதலானும் என்பது சூத்திரப் பொரு ளாம். அபரமார்த்தமாகவோ பரஸ்பர விருத்த இரு ரூப மும் ஒரு இடத்தில் இருப்பதேயாம், ஸ்படிகம் முதலிய வற்றில் பார்க்கப்படுதலின்.

அற்றேல், அந்யதா மித்தையாத் தன்மையில் சப் பிரபஞ்ச சுருதி அநுரோதத்தினல், அல்லது நிஷ்ப்பிர பஞ்சத்திற்கு ஆரோபிதத் தன்மை ஏன் உண்டாகாது எனின், அற்றன்று, அதற்கு ஒவ்வொரு வேதாந்தத்திலும் உபக்கிரமாதி ஷட் வித லிங்கங்களால் தாத்பரியமாக அறி யப்படுதலின். "பிரஹ்மத்திற்கு இரண்டு ரூபங்கள்" எனச் சப்பிரபஞ்சத்தினை விஸ்தரித்து, "ஈதன்று ஈதன்று" என நிஷேதித்தலின். சப்பிரபஞ்ச சுருதிக்கு நிஷேத்ய சமர்ப் பகத் தன்மையினல் நிஷேத சுருதி சேஷத் தன்மை அறியப்படுதலினனும்.



அற்றேல், எதன் பொருட்டுச் சப்பிரபஞ்சத் தன்மை யினைப் பிரஹ்மத்திற்குக் கூறி நிஷேதிக்கின்றது, "கழுவலைப் பார்க்கிலும் சேற்றைத் தூரத்தே தொடாதிருத்தல் பிரேஷ்டம்." என்னும் நியாயத்தினல் பிரஹ்மத்திற்குப் பிர பஞ்ச சம்பந்த அவசநமே பொருத்த முடையதாகலின் எனின், ஆயின் சுருதியின் அபிப்பிராயத்தினைக்கேட்பாயாக. ஒன்றே அத்விதீயம் பிரஹ்மம் எனக் கூறுமிடத்து ஆகா சாதிகளில் இரண்டாவது பொருள் இருக்குங்கால் பிரஹ்மத் திற்கு அத்விதீயத் தன்மை எங்ஙனம் என ஆசங்கை உண்டாகின்றது. அதனல் அதன் நிவிர்த்தியின் பொருட்டுப் பிரஹ்ம ரூப உபாதாநத்தினின்றுமே ஆகாசாதி சர்வ பிர பஞ்ச உத்பத்தி சொல்லுதலால், காரியத்திற்கு உபாதாநத் தினின்றும் வேறு இடத்தில் இருப் பின்மையின் பிரஹ்மத்தி னிடத்திலே யிருப்புக் கூறி, அதன் பின், "ஈண்டு நாநா அற்பமும் இல்லை." என்பதாதி வாக்கியங்களால், சப்பிரபஞ் சம் கூறிய பிரபஞ்சம் நிஷேதிக்கப்படில், ஏகமேவ அத்விதீ யம் பிரஹ்மம் என இது ஸ்தாபிக்கப்பட்டதாகின்றது. இங்ஙனம் கொள்ளக்கால், பிரஹ்மத்திற்குச் சிருஷ்டி வாக்கி யங்களால் சப்பிரபஞ்சத் தன்மையினைப் புகலாது, முதலி லேயே, "ஈண்டு நாநா அற்பமும் இல்லை." என நிஷேதம் செய்யில், ஈண்டு நிஷேதிக்கப்படும் கடத்திற்கு வேறு இடத்து இருப்பது போன்று, வேறு இடத்துப் பிரபஞ்சத் தின் இருப்புத் தன்மைச் சங்கை வரும் எனச் சுருதி கருது கின்றது. சப்பிரபஞ்ச பிரஹ்ம உபாசனையோ, "வாசம்

தேநும் உபாசித." (பிரஹதாரண்யகோபநிஷத் 5—8—1) என்பதாதி போன்று ஆரோபிதப் பிரபஞ்ச விஷயத் தன்மையினுனும் பொருந்துதலின்.

இவ்வாறு நிஷ்ப்பிரபஞ்சப் பிரஹ்மத்திற்கே அரோபிதத் தன்மையினுல் உபாசநா விஷயத் தன்மை ஏன் பொருந்தாது எனக் கூறற்க; அதற்கு அநுபாஸ்யத் தன்மை உளதாகலின். "அந்தப் பிரஹ்மத்தினை நீ அறிவாயாக எது இது உபாசிக்கின்ருய் இது அன்று." (கேநோபநிஷத் 1–8) என உபாஸ்யத் தன்மை நிஷேதித்திருத்தலின். நிஷ்ப்பிரபஞ்ச வாக்கியங்களில் உபாசனை விதாநம் கேட்கப்படாமையின் ஆரோபித ரூபத்தானே உபாசனை பொருந்துதலின் ஒவ்வொரு வேதாந்தத்திலும் தாத்பர்யத்தினுல் பிரபஞ்ச நிஷேதம் பொருந்தாமையினுனும். நிஷ்ப்பிரபஞ்சத்திற்கே பரமார்த்தத் தன்மை சூத்திரக்காரராலும், "அரூப முடைமையினுனே அது பிரதாநத் தன்மையின்." (பிரஹ்ம சூத்ரம் 3—2—14) எனக் கூறப்பட்டிருக்கின்றது. அரூப முடைமையானே பிரஹ்மம் பரமார்த்தம் ஆவதற்கு யோக்கியம் ஆகின்றது. எல்லாச் சுருதிகளுக்கும் உபக்கிரமாதிகளால் அதன் பிரதாநத் தன்மை ஆகலின். நிஷ்ப்பிரபஞ்ச பிரஹ்ம பரத்துவத்திற்கே பார்க்கப்படுதலின் என்பது சூத்திரப் பொருளாம். ஆகலின் பரமார்த்தமாக நிஷ்ப்பிரபஞ்சமே பிரஹ்மம். எனச் சுருக்க வியாக்யாநத்தில் அதிவிஸ்தாரத்தினுல் வியர்த்தமாம், 40.

அற்றேல், ஆயிரம் முறை தத்துவம் கூறிடினும் ராகாதி தோஷம் விடுபட்ட ஆத்மா அடையப்படுவ



தில்லை. அதனை எங்ஙனம் "பரமாத்மாவாக இருக்கிறேன்" எனச் சாக்ஷாத்காரஞ் செய்தலாம் எனச் சங்கித்துக் கூறுகின்றுர்.

रागामुक्तं लोहयुतं हेम यथाग्नौ
योगाष्टांगैरुज्ज्वलितज्ञानमयाग्नौ ।
दग्ध्वात्मानं ज्ञं परिशिष्टं च विदुर्यं
तं संसारध्वांतविनाशं हरिमीडे ॥ ॥४१॥

(பதப் பொருள்.) १. रागा-अमुक्तं—ராகாதிகளோடு கூடிய, २. आत्मानं—ஆத்மாவை, ३. योग-अष्ट-अंगैः—யோக-அஷ்ட-அங்கங்களால், ४. उज्ज्वलित-ज्ञानमय-अग्नौ—உஜ்ஜ்வலிக்கப்பட்ட — ஞாநமய — அக்கிநியில், ५. दग्ध्वा—சோதித்து, ६. परिशिष्टं ७. च—மிச்சமாய் உள்ள, ८. ज्ञं—சித் தாதுவாகிய, ९. यं—எதனை, १०. यथा—எங்ஙனம், ११. अग्नौ—அக்நியில், १२. लोहयुतं—இரும்போடு கூடிய, १३. हेम—ஸ்வர்ணம் (எடுக்கப்படுகின்றதோ அது போன்று) १४. विदुः—அறிகின்றனரோ, १५. तं—அந்த, १६. संसार-ध्वांत-विनाशं—சம்சார-இருளினை-நாசம் செய்யும், १७. हरिं—ஹரியினை, १८. ईडे—ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு.

रारामुक्तं (ராகாமுக்தம்) = ராகாதிகளோடு கூடிய, आत्मानं (ஆத்மாநம்) = ஆத்மாவை, दग्ध्वा (தக்த்வா) = தபித்து—சோதித்து, परिशिष्टं च ज्ञं (பரிசிஷ்டம் ச ஜ்ஞம்) = சித் தாதுவை, यं विदुः (யம் விது:) = எதனை அறிகின்ற

னர் என்பது சம்பந்தமாம். எங்ஙனம் தகித்து என்னும் ஆகாங்க்ஷையில் கூறுகின்றார். **योगाष्टांगैः उज्ज्वलितज्ञानमयग्नौ** (யோகாஷ்டாங்கை: உஜ்ஜ்வலிதஞாநமயாக்நௌ) = யோகம்—பிரத்யக் பிரஹ்மங்களின் ஐக்யம், அதன் அடைவில் சாதநபூதமான, அஷ்டாங்கங்களால்—நிர்க்குண விஷயமான யம நியமாதி எட்டு அங்கங்களால், நிர்க்குண யோக அஷ்ட அங்கங்களும் ஆத்ம யோக கிரந்தத்தில் யோக விசேஷத்தில் "தேஹம் இந்திரியாதிகளில் விரக்தி யமம், ஈண்டு நியமம் ஸ்வாத்ம தத்துவத்தில் விருப்பமாம். பாஹ்ய ஔதாசீந்யமே ஆசநமாம். பிராணுயாமமோ பொய்ப் பொருளாகலின் அக்ஷரப் பொருளாம். பிரத்யாஹாரம் ஸ்வபுத்திக்கு விஷய விமுகத் தன்மையாம். தாரணை தனது ஆத்ம நிஷ்டையாம். தியாநம் பிரஹ்மாஹம் அஸ்மீ என்னும் திருக் அநந்யத் தன்மையாம். அமோஹ ஆத்ம சம்வித் சமாதியாம்." எனக் கூறப்பட்டிருக்கின்றது. **तैः** (தை:) = காஷ்டம் போன்றதால், **उज्ज्वलितः यः ज्ञानमयः अग्निः** (உஜ்ஜ்வலித: ய: ஜ்ஞாநமய: அக்நி: = உஜ்ஜ்வலிக்கப்பட்ட எந்த ஞாந மய அக்நி, **तत्र** (தத்ர) = அதில், அல்லது அபரிபக்குவ சித்தத்திற்கு யம நியமாதி யோக அஷ்ட அங்கங்கள் பதஞ்சலியால் சூத்திரிக்கப்பட்டிருக்கின்றன பிரசித்தங்களே. அவற்றால் பிரகாசிக்கப்பட்ட ஞாநமய அக்நியில் என்பது பொருளாம். அந்தச் சூத்திரங்களும் இவைகள், "அஹிம்சா சத்ய அஸ்தேய பிரஹ்மசர்ய அபரிக்கிரஹங்கள் யமங்கள்." (யோக சூத்ரம் 2—30), "சௌசம் சந்தோஷம் தபம் ஸ்வாத்யாயம் ஈசுவரப் பிரணிதாநங்கள் நியமங்கள்." (யோக சூத்ரம் 2—32), ஸ்வாத்யாயம்—பிரணவ ஜபமாம், ஈசுவரப் பிரணிதாநம்—ஈசுவர பக்தியாம்.' 'ஸ்திர சுகம் ஆசநம்." (யோக சூத்ரம்



2—46), எவ்விதமான தேக ஸ்தாபநத்தினால் எந்தப் புருஷனுக்கு அவயவத்தில் துக்க அநுத்பத்தி லக்ஷண சுகம், தேஹ சலந மின்மை லக்ஷண ஸ்தைர்யமும் சம்பாதிக்கின்றதோ அதுவே அவனுக்கு பத்ம ஸ்வஸ்திகம் முதலிய உயர்வுடைய முக்யம் ஆசநம் என்பது பொருளாம். "அஃதிருக்கின் சுவாசப் பிரசுவாசங்களின் கதி விச்சேதம் பிராணுயாமம்." (யோக சூத்ரம் 2—49), ஆசநம் திடமாயின் பத்து இருபது முப்பது முதலிய கிரமத்தினால் பிரணவ ஜபங்களால் ஒவ்வொரு பக்ஷத்திலும், ஒவ்வொரு மாதத்திலும் ஸ்வபாவிக வாயு கதி விச்சேதம் பிராணுயாமம் என்பது பொருளாம். "ஸ்வவிஷய அசம்பிரயோகத்தில் சித்தம் ஸ்வரூப அநுகாரம் போன்று இந்திரியங்களுடைய பிரத்யாஹாரம்." (யோக சூத்ரம் 2—54), இந்திரியங்களுக்கு சப்த ஸ்பர்சாதி தத் தத் விஷயங்களால், அசம்பிரயோகே—நிருத்தம் செய்யாதிருக்கில், சித்தம் ரூப அநுகாரம் போன்று ஸ்தூஷ்ணீம் அவஸ்தாநம் எது அது பிரத்யாஹாரம் என்பது பொருளாம், "தேச பந்தம் சித்தத்திற்குத் தாரணையாம்." (யோக சூத்ரம் 3—1), தேசத்தில்—ஆதாரம் முதலியவற்றில், அல்லது ஆத்மாவினிடத்தில் சித்தத்தின் ஸ்தாபநம் தாரணையாம் என்பது பொருளாம். "ஆண்டு பிரத்யய ஏகதாநத் தன்மை தியாநமாம்." (யோக சூத்ரம் 3—2), ஆண்டு—ஆத்மா முதலியவற்றில், பிரத்யய சாதத்யம் தியாநமாம் என்பது பொருளாம். "அதுவே அர்த்த மாத்ர விளக்கம் ஸ்வரூப சூந்யம் போன்று சமாதியாம்." (யோக சூத்ரம் 3—3), தியாநமே தியாத்ரு தியாநங்களை விட்டுத் தியேயத்தினை மாத்திரம் கோசரிப்பதா யிருப்பது சமாதி என்று கூறப்படுகின்றது. அப்பொழுது தியாந ஸ்வரூபம் சூந்யம்

போன்று ஆகின்றது. தியாக விஷயப் பிரத்யய மின்மையால் என்பது பொருள். இதனால் சாதிக்கப்படும் த்வம் பதார்த்த சாக்ஷாத்காரம் யாது அந்த அக்நியில் சோதநத்தில் திருஷ்டாந்தம் கூறுகின்றார். **लोहयुतं हेम यथाग्नौ इति** (லோஹ யுதம் ஹேம யதாக்நௌ இதி) என. இரும்போடு கூடிய சுவர்ணத்தை அக்நியில் தகிக்கச் செய்து இரும்பை விட்டுச் சுவர்ணத்தை எங்ஙனம் கவரப்படுகின்றதோ அது போன்று என்பது பொருள். 41.

இப்பொழுது பக்திக்குப் பலத்தினைக் கூறுதல் வாயிலாக ஸ்துதிக்கின்றார்.

यं विज्ञानज्योतिषमाद्यं सुविभांतं
हृद्यर्केंद्वग्न्योकसमीड्यं तडिदाभम् ।
भक्त्याराध्येहैव विशंत्यात्मनि संतं
तं संसारध्वांतविनाशं हरिमीडे ॥ ॥४२॥

(பதப் பொருள்.) ௧. **हृदि**—இருதயத்தில், ௨. **तडित्**—வித்யுத் (போன்று), ௩. **आभम्**—பிரகாசம் (எங்ஙனம் உண்டாகிறதோ அங்ஙனம்) ௪. **सुविभांतं**-நன்கு பிரகாசிக்கும், ௫. **विज्ञान ज्योतिषं**-விஞ்ஞானப் பிரகாச ரூபம், ௬ **आद्यं**—சர்வ காரணம், ௭. **अर्क-इंदु-अग्नि-ओक-सम्**—அர்க்கன்-சந்திரன்-அக்நி-உபலப்தி ஸ்தாநங்கள், ௮. **ईड्यं**—ஸ்துதிக்கத் தகுந்தது, ௯. **भक्त्या**—பக்தியால், ௧௦. **यं**—எதனை, ௧௧. **आराध्य**—ஆராதித்து, ௧௨. **आत्मनि**—தன்னிடத்தில்,



௧௩. **संतं**—(ஸ்வரூபமாக) இருப்பதை, ௧௪. **इह** ௧௫. **एव**—ஜீவிக்கும் தேஹத்தின்கண்ணே, ௧௬. **विशंति**—அதன் ரூபமாகின்றதோ, ௧௭. **तं**—அந்த, ௧௮. **संसार-ध्वांत-विनाशं**—சம்சார—இருளினை—நாசம் செய்யும், ௧௯. **हरिं**-ஹரியினை, ௨௦. **ईडे**—ஸ்துதிக்கின்றேன், என்ற வாறு.

**हृदि** (ஹ்ருதி)=இருதயத்தில், **तडित्** (தடித்)=மின்னல் (போன்று), **आभा** (ஆபா)=பிரகாசம் எங்ஙனம் உண்டாகின்றதோ அங்ஙனம், **सुविभांतं** (சுவிபாந்தம்)=பிரத்யக்த் தன்மையால் நன்கு பிரகாசிக்கும், **विज्ञान ज्योतिषं** (விஞ்ஞாந ஜ்யோதிஷம்)=விஞ்ஞானப் பிரகாச ரூபம். ஜட ரூபம் ஜ்யோதி அன்று. “ஜ்யோதிகளுக்கும் ஜோதி” என்னும் சுருதியால், **आद्यं** (ஆத்யம்)=சர்வ காரணம். **अर्केंद्वग्न्योकसम्** (அர்க்கேந்த்வக்நியோகசம்)=அர்க்க இந்து அக்நிகள் உபலப்தி ஸ்தாநங்கள் எதற்கு. ஆண்டே உபாஸிக்கப்படும் பரமேசுவரன் பிரசந்நன் ஆகின்றனன். **ईड्यं** (ஈட்யம்)=ஸ்துதிக்கத் தகுந்ததை, **भक्त्या** (பக்தியா)=சிரவணாதிகளாலும், அஷ்டாங்க யோகங்களாலும், உபாசனைகளாலும், எப் பக்தி—பசநம், அதனால், **यं** (யம்)=எதனை, **आराध्य** (ஆராத்ய)=ஆராதித்து, **आत्मनि** (ஆத்மநி)=தன்னிடத்தில் ஸ்வரூபமாக, **संतं** (சந்தம்)=இருப்பதை, **इह एव** (இஹ எவ)=ஜீவிக்கும் தேஹத்தின்கண்ணே, **विशंति** (விசந்தி)=அந்த ஆத்மாவாக ஆகின்றது என்பது பொருள். அந்யத்தின் பிரவேசத்திற்குப் பொருந்தாமையின். அதனை ஸ்துதிக்கின்றேன் 42.

இப்பொழுது ஸ்துதி கர்த்தாவுக்குப் பலத்தினைக் கூறும் வாயிலாக ஸ்துதிக்கின்றார்.

पायाद्भक्तं स्वात्मनि संतं पुरुषं यो
भक्त्या स्तौतीत्यांगिरसं विष्णुरिमं मां ।
इत्यात्मानं स्वात्मनि संहृत्य सदैक
स्तं संसारध्वांतविनाशं हरिमीडे ॥ ॥४३॥

(பதப் பொருள்.) १. यः—எந்த, २. विष्णुः—விஷ்ணு, ३. इमं—இந்த, ४. स्व-आत्मनि—தனது ஆத்மாவில், ५. संतं—இருக்கும், ६. पुरुषं—புருஷனுகிய, ७. भक्तं—பக்தனை, ८. भायात्—ரக்ஷிக்குக, ९. मां—என்னை, १०. भक्त्या—பக்தியினுல், ११. स्तौति—ஸ்துதிக்கின்றான், १२. इति—என்று, १३. आंगिरसं—அங்கங்களின் ரச நுபத்தினை, १४. आत्मानं—(தனது) அந்தக்கரணத்தினை, १५. स्व-आत्मनि—தனது ஆத்மாவில், १६. संहृत्य—நிரோதித்து, १७. सदा—எப்பொழுதும், १८. एकः—ஏகம், १९. इति—என்று (கருதும்), २०. तं—அந்த, २१. संसार-ध्वांत-विनाशं—சம்சார-இருளினை-நாசம் செய்யும், २२. हरिं—ஹரியினை, २३. ईडे—துதிக்கின்றேன், என்ற வாறு.

**यः विष्णुः इमं भक्तं पायात्** (ய: விஷ்ணு: இமம் பக்தம் பாயாத்) ரக்ஷிக்குக அதனை ஸ்துதிக்கின்றேன் என்பது சம்பந்தம். எவ்வாருய, **स्वात्मनि संतं** (ஸ்வாத்மநி சந்தம்) ='விஷ்ணு: அஸ்மி, என அபேதமாக இருக்கும், **भक्तं** (பக்தம்)=பக்தனை, அவனே முக்ய பக்தன், "என்னை நான்குபிரகாரமாகப் பஜிக்கின்றனர்." (பகவற் கீதை. 7—16.) என ஆரம்பித்து, "ஞானியோ எனது ஆத்மாவாகவே இருக்கின்றனன் என எனது சம்மதமாம்" (பகவற் கீதை. 7-18.) என ஸ்துதித்திருத்தலின். "தக்ஷாதி நீசர்களால் நன்கு செய்யப்பட்ட பொய்யான கல் மண் மர ரூப முதலிய தேவர்களை எவர்கள் பசிக்கின்றனரோ, அவர்கள் மாதவனை நிந்திப்பவர்கள். பூர்ண சதாநந்த மயமே விஷ்ணுவாம்" எனப் பேத தர்சநம் நிந்திக்கப்பட்டிருத்தலினுனும். எந்த அபிப்பிராயத்தினுல் விஷ்ணுவிற்கு அவனை ரக்ஷிப்பதில் பிரவிருத்தி (எனின்) ஆண்டு கூறப்படுகின்றது. **स्वात्मानं** (ஸ்வாத்மாநம்)=தனது அந்தக்கரணம், **स्वात्मनि** (ஸ்வாத்மநி)=தனது ஸ்வரூப ரூப என்னிடத்தில், **संहृत्य** (சம்ஹ்ருத்ய)=நிரோதம் செய்து, **आंगिरसं** (ஆங்கிரசம்)=அங்கங்களின் ரச ரூபம், "இதுவே அங்கங்களின் ரசம்" என்னும் சுருதியினுல், தேஹாதி அநாத்மத் தியாகத்தினுல் மிச்சமான சிதாநந்த ரூபம் என்பது பொருளாம். **इमं मां सदा भक्त्या स्तौति** (இமம் மாம் சதா பக்த்யா ஸ்தௌதி)=பிரத்தியக்ஷபிந்நத் தன்மையினுல் ஸ்துதிக்கின்ருன் என்னும் அபிப்பிராயத்தினுல் விஷ்ணு ரக்ஷிக்கின்ருர் என்பது சம்பந்தம். அதனை ஸ்துதிக்கின்றேன். 43.

இப்பொழுது ஸ்தோத்திர பாடகர்களுக்கு, ஸ்தோத்திரப் பொருளை உணராதவர்களாய், பாடமாத்திரத்தினுல் விஷ்ணு லோகப் பிராப்தியினுல் கிரம முக்தியும், இந்த ஸ்தோத்திரப் பொருளினை உணர்ந்தவர்களுக்கு, ஈண்டே பரிபூர்ண பரமாநந்த சித் பிரகாச விஷ்ணு நுபமாக அவஸ்தாந நுப முக்தியுமாகிய பலத்தைத் தரிசிப்பித்து ஸ்தோத்திரத்தினை உபசம்ஹாரம் செய்கின்றுர்.

इत्थं स्तोत्रं भक्तजनेड्यं भवभीति
ध्वांतार्काभं भगवत्पादीयमिदं यः ।
विष्णोर्लोकं पठति शृणोति व्रजति ज्ञो
ज्ञानं ज्ञेयं स्वात्मनि चाप्नोति मनुष्यः ॥४४॥

॥ इति श्रीमत् शंकराचार्य विरचितं हरिमीडे स्तोत्रं संपूर्णं ॥

[பதப் பொருள்] ௧. यः—எந்த (மனிதன்), ௨. इत्थं—கூறிய பிரகாரமாக, ௩. इदं—இந்த, ௪. स्तोत्रं—ஸ்தோத்திரத்தை, ௫. भक्त-जन—ईड्यं—பக்தியுடைய—ஜநங்களால்—ஸ்துதிக்கத் தக்கதை, ௬. भव—भीति—ध्वांत—अर्क—आभं—சம்சார துக்க-தமத்திற்கு—சண்ட பாஸ்கரனை, ௭. भगवत्—पादीयं—ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்ய ஸ்வாமிகள் இயற்றியதை, ௮. पठति—படிக்கின்றனனோ, ௯. शृणोति-கேட்கின்றனனோ, ௰. विष्णोः-(அவன்) விஷ்ணுவின், ௧௧. लोकं—லோகத்தினை, ௧௨. व्रजति—அடைகின்றனன், ௧௩. ज्ञः-எவன் இந்த அர்த்தத்தினை உணர்ந்து படிக்கின்றனனோ அவன், ௧௪. स्व-आत्मनि- ௧௫. च-தனது ஆத்மாவின் கண், ௧௬. ज्ञानं-தத்வ சாக்ஷாத்காரம், ௧௭. ज्ञेयं-அதன் விஷயமான பிரஹ்மமும், ௧௮. मनुष्यः-மநுஷ்யனுகவே இருந்து கொண்டு, ௧௯. आप्नोति--அடைகின்றன். என்ற வாறு.

यः (ய:)-நரன், इत्थं-(இத்தம்)-கூறிய பிரகாரத்தினால், इदं (இதம்) இந்த, स्तोत्रं—(ஸ்தோத்ரம்)—ஸ்தோத்திரனை,



பக்தர்கட்கு ஈண்டு அதிகாரம் எனக் கூறுகின்றார் भक्त-जन—ईड्यं (பக்த—ஜந—ஈட்யம்)-விஷ்ணுவினிடத்தில் பக்தியுடைய ஜநங்களால் ஸ்துதிக்கத் தகுந்தது என்பது முடிவு. भव—भीति—ध्वांत—अर्क—आभं (பவ—பீதி த்வாந்த-அர்க்க-ஆபம்.)-சம்சார துக்க தமத்தின் சண்ட பாஸ்கரனை, भगवत्-पादीयं (பகவத் பாதீபம்)-சர்வஞ்ஞ ஸ்ரீ சங்கர பகவானுல் சகல லோக அநுக்கிரக இச்சையினுல் செய்யப்பட்டதை, पठति (படதி) உரக்க உச்சரிக்கின்றனனோ, शृणोति (சிருணோதி)-படித்துக்கொணடு இருக்கும் போது தான் கேட்டுக்கொண்டு இருக்கின்றனனோ அவன். विष्णोः (விஷ்ணோ:) அநந்த கல்யாண குண மணி கண சாகரராய், அநந்த லீலா விஹார பரவசமான பக்தர்களை உடையவராய், சுத்த சத்வ ரூபராய், சர்வஞ்ஞராய், சர்வ சக்தியுடையவராய் உள்ள பகவான் பரமேசுவரருடைய, लोकं (லோகம்)-வைகுண்டப் பெயரை, व्रजति (வ்ரஜதி) அடைகின்றனன், ज्ञः (ஜ்ஞ:) எவன் இதன் பொருளினை உணர்ந்து படிக்கின்றனனோ அவன். स्वात्मनि (ஸ்வாத்மநி) தன தாத்மாவில், ज्ञानं (ஜ்ஞாநம்)-தத்வ சாக்ஷாத்காரம், ज्ञेयं (ஜ்ஞேயம்) அதன் விஷயம் பிரஹ்மமும், मनुष्यः (மநுஷ்ய:) மநுஷ்யனுகவே இருந்து ஈண்டே, आप्नोति (ஆப்நோதி) ஸ்வயமே ஸ்வயம்பிரகாச பரிபூர்ண பரமாநந்த பிரஹ்ம ரூபமாக இருக்கின்றுன் என்பது பொருளாம். 'பிரஹ்மமுணர்ந்தோன் பிரஹ்மமமே ஆகின்றனன்'' (முண்டகோபநிஷத் 3—2—9.) என்பதாதி சுருதியால் என (உணர்க). 44.

वाचा यया श्रुतिवचांसि च भेदवादि
कालेय कैर्मलिनितानि विशोधितानि ।

तस्यामशुद्धमपि यद्वचनं मदीयं
संमिश्रितं शंकरगुरोर्विबुधाः क्षमंताम् ॥ ॥१॥

பேதவா திகளாய கௌலேயங் களினாற்
பிறழ்வுற்று மலிநஞ் செய் யப்பட்ட தான,
வேதவாக்கியங்களா னதுஞ்சங்க ராசான்.
விசோதிக்சப் பட்டனவெவ் வாக்கியத்தி னாலே,
போதவாக் கியங்களிலென் வாக்கியங்கள் குற்றம்
போன்றதாயினு மெவைகள் சேர்க்கப்பட் டனவோ,
மேதகுவித் வான்களதைப் பொறுமைசெய்து போற்றி
மேவிடுவ ரெனக்கேட்டு வருகின்றே மியாமே. (1)

यस्याक्षिपादपदवीं सकृदप्यवाप्य
भूयोन संसृतिकुमार्गमवाप्नुवंति ।
लोकास्तमात्मसुखमग्नमनः प्रचारं
कैवल्ययोगिगुरुमाभजतां मनो मे ॥ ॥२॥

உலகினரெம் மகானதுக டாக்ஷபாத வழியை
பொருமுறையா யினுமடைந்து சம்சாரத் தீய,
அலவழியை யடைவதிலே யோயாங்மா நந்தத்
தமுழ்ந்தியம நமுடைய வருங்கை வல்ய,
நலயோகா சாரியரா யுமிருக்கும காணே
நம்மநந்தான் நன்றாகப் பஜிக்கட்டு மென்றும்,
உலகுபுகழ் வீரசே கரஞாந குருவி
னுபயபா ததாம ரைகளையுன் னுதுமே. (2)

इंदीवरेंद्रमणिसुंदरमिंदिरेशं
बंदीकृतेंद्ररिपुवृंदममंदवीर्यम् ।
मंदस्मितप्रसरनंदितलोकवृंदं
वंदे द्विजेंद्रकुलनंदनरामचंद्रम् ॥ ॥३॥



சிறந்ததா மரையின் மணிகளாற் றிருவன்
றிருக்கண வனுந்தான் சிறைசெய்,
யுறந்ததா மசுரக் கூட்டம துடைய
னுளமிகு சாமர்த்திய முடையன்,
பிறந்ததன் நகையின் பெருக்கினாற் சுகத்தைப்
பெற்றலோ கத்தவர் கூட்டன்,
சிறந்தது சகுல கூட்டத்தி னின்பன்
சீராம சந்த்ரனைப் பணிவாம். (3)

रक्षोमंडलखंडपंडितमहावेतंडशुंडालसत्
दोर्दंडं निकिलाण्डपिण्डनकृतौ शौंडं तथा मुंडभिः ।
ध्येयं दंडकमंडलूपकरणैश्चंडांशुवंशोद्भवं
गंडे कुंडलमंडितं रघुपतिं कोदंडपाणिं भजे ॥ ॥४॥

இராக்கதர் தொகுதி களையழிப் பதனி
லிணையிலாச் சமர்த்தனு மாகித்,
தராக்கரித் துதிக்கை போற்புஜ தண்டன்
சகலவண் டங்களைப் பிண்டம்,
மராக்கவல் லவனவ் வண்ணந்தன் டங்க
மண்டலத் துறவிகள் நினைவோன்,
வரார்க்ககு லன்கன்ன குண்டலன் கோதண்ட
பாணிர குபதியைப் பணிவாம். (4)

इंदूपलेंद्रमणिसुंदरमिंदुचूडं
वृंदारवृंदपरिवंदितपादपद्मम् ।
आमंदमंदहसितोल्लसदाननेंदुं
वंदामहे वयममंदमुदांबिकेशम् ॥ ॥५॥

சிறப்புறுசந் திரகாந்த மணிகளாற் றிருவன்
சிரமிசைச்சந் திரனையா பரணன் றனே,

வறப்படுதே வதைக்கூட்டம் வணங்கு பாத
மாகமல னிறைமந்த நகையினலே,
திறத்தொளிரு முகமதியை யுடையன் ருனைத்
திகழுமா பதியாகு மிறையை நாங்கள்,
பறப்படுநற் சந்தோஷத் துடனே யந்திற்
பணிகின்ருேம் மநத்திஞ னினைகின் ருேமே. (5

இது ஸ்ரீமத் பரமஹம்ச பரிவிராஜகாசார்ய கைவல் யாநந்த யோகீந்த்ர பாத கமல பிருங்காயமான, ஸ்வயம் பிரகாசம் எனப் பெயரிய யதி இயற்றிய, சங்கர பகவத் பாதர் இயற்றிய ஹரி ஸ்துதி வியாக்யாநம் ஹரி தத்வ முக்தாவலீ சம்பூர்ணம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 10 | 15 | ஆவிர் பாவ | ஆவிர்ப் பாவ |
| 14 | 22 | அகற்கு | அதற்கு |
| 16 | 23 | பிரவர்த்தி | பிரவிர்த்தி |
| 23 | 13 | आनंत | अनंत |
| 64 | 25 | பிசிவேசித்து | பிரவேசித்து |
| 66 | 6 | युक्तया | युक्त्या |
| 74 | 7 | ஜாகரங்கட்கு | ஜாக்ரங்கட்கு |
| 104 | 3 | तरंगाभप | तरंगाभम |
| 110 | 15 | அததியாய | அத்தியாய |
| 111 | 15 | ஸ்வபந | ஸ்வப்ந |
| 117 | 14 | சாங்கிய யாக | சாங்கிய யோக |
| ,, | 22 | புக்தி | யுக்தி |
| 134 | 6 | वक्तयु | वक्तृ |
| 150 | 13 | அப்பிரதியை | அப்பிரதிபை |
| 151 | 2 | அப்பிரதியையும் | அப்பிரதிபையும் |
| 152 | 12 | ஞாநதா | ஞாதா |
| 158 | 4 | அரோபிகத் | ஆரோபிதத் |
| 159 | 20 | रारामुक्तं | रागामुक्तं |

திருப் பூவண மடாதிபதி

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்

இயற்றியன.

---

| | | நபா | அணு |
|---|---|---|---|
| 1. | ஹரி மீடே, ஹரி தத்வ முக்தாவலீ. | 0 | 12 |
| 2. | நைஷ்க் கர்ம்ய சித்தி | 0 | 8 |
| 3. | ஸ்வாராஜ்ய சித்தி | 0 | 8 |
| 4. | வியாச தாத்பர்ய நிர்ணயம் | 0 | 8 |
| 5. | மண்டலப் பிராஹ்மணோபநிஷத்தும், ராஜ யோக பாஷ்யமும். | 0 | 4 |
| 6. | ஈசாவாஸ்யோபநிஷத் சங்கர பாஷ்யம் | 0 | 4 |
| 7. | கீடா சாரம், பால போதிநி உரை | 0 | 4 |
| 8. | பக்தி (வைராக்ய) சதகத் தோத்திர உரை | 0 | 3 |
| 9. | கைவல்ய நவநீதம் மூலம் (பாக்கேட் சைஸ்) | 0 | 3 |
| 10. | வேதாந்த சஞ்ஞா | 0 | 2 |
| 11. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா | 2 | 0 |
| 12. | விசார சாகரம் (வசநம்) | 2 | 0 |
| 13. | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி (1 பாகம்) | 1 | 0 |
| 14. | கீதாத் திரயம் (ஈசுவர கீதை. பகவத் கீதை பிரஹ்ம கீதை பாக்கேட் சைஸ்) | 1 | 0 |
| 15. | திருக் களர் வீரசேகர ஞாந தேசிகர் சரிதம் | 1 | 0 |

---

Printed at the Rajeswari Press, Madura:-1935